உ

# திருச்செந்தூரகவல்

1

## விளக்கவுரை



புங்குடுதீவு சிவதொண்டர் வெளியீடு

உ

சிற்றம்பலநாடிகள் அருளிய

# திருச்செந்தூரகவல் மூலமும்

வித்துவான் பொன். அ. கனகசபை
எழுதிய விளக்கவுரையும்

பதிப்பித்தவர்:

ஆசிரியர் திரு. ச. தம்பையா
புங்குடுதீவு - 3, இலங்கை.
1981

திருச்செந்தூரகவல் விளக்கவுரை
முதற்பதிப்பு – 1981. பிரதிகள் 1000.
புங்குடுதீவு சிவதொண்டர் வெளியீடு
இலங்கை.



பதிப்பகம்:
செட்டியார் அச்சகம்,
430, காங்கேசன்துறை வீதி,
யாழ்ப்பாணம்.



எங்கள் குருநாதன் சிவயோகசுவாமிகள்
திருவடிகளுக்கு
இந்நூல் சமர்ப்பணம்

இலக்கிய கலாநிதி, பண்டிதமணி,
திருவார்திரு. சி. கணபதிப்பிள்ளை அவர்கள்
அன்புடன் வழங்கிய

# அணிந்துரை

"குருவாய் வருவாய்
அருள்வாய் குகனே"

என்பது கந்தரநுபூதி.

திருமுருகன் குருமூர்த்தியாய் எழுந்தருளி, திருவருள் செய்யப் பெற்ற பெரும்பேறு படைத்தவர்களுள்,

சீகாழிச்
சிற்றம்பல நாடிகள்
ஒருவர்.

மெய்கண்ட சந்தான சீடபரம்பரையில்
உள்ளவர்,
இந்தச் சிற்றம்பல நாடிகள்.

இவர் திருச்செந்தூர்த் திருமுருகன் சந்நிதியில் தவமிருந்து, இளமையும் அழகும் ஒழுகி வழியும் திருமுருகன் திருவுருவை நேரில் தரிசித்த காட்சிகளையும்.

திருமுருக குருமூர்த்தி, தீட்சை செய்து, உபதேசித்தவைகளையும், செய்யுள் வடிவில், 'சுப்பிரமண்ணியர் அகவல்'' என்ற பெயரில் உபகரித் தருளி,

தாம்பெற்ற அருள்வளத்தை, பெறவிரும்பியோரையும், பெறு தற்கு ஆற்றுப்படைத்தும் அருளியிருக்கின்றார்.

அகவல், அடிப்படையிலிருந்து, சுத்தாத்துவித முத்திவரை, சைவசித்தாந்த உண்மையை எடுத்துக்காட்டுவதாயும் அமைந்திருக் கின்றது.

இந்த அருண்ஞான பொக்கிஷம், நித்திய பாராயணத்துக்கும் சமய சிந்தனைக்கும் கிடைத்ததொரு தேவாமிர்தம்.

சுப்பிரமணியர் அகவலைப் பன்னிரு வருடம் பாராயணம் செய்து, அதற்கு ஒரு நல்ல தெளிவான விளக்கவுரை செய்திருக்கின்றார்கள். வித்துவான் திரு. பொன் அ. கனகசபை அவர்கள்.

வித்துவான் அவர்களின் மனத்தூய்மையும் ஆழமான சமய சிந்தனையும், விரிந்து பரந்த நூலாராய்ச்சியும் பிரசித்தமானவை. உரையில் எடுத்தாண்ட பிரமாண நூல்களின் அட்டவணை அநுபந்த மாய் வருவது நன்று.

அருமையான உரையை உபகரித்தவர்களான வித்துவான் அவர் களை மேலும் அருமையான நூல்களுக்கு நல்லுரை நல்குவார்களாக. என்று திருவருளைப் பிரார்த்திப்போமாக. வித்துவான் அவர்கள், முன் உதவிய, 'திருவுந்தியார் உரை விளக்கம்' இங்கே நினைவுகூரத்தக்கது.

சிற்றம்பல நாடிகள்
திருவடி வாழ்க.

கலாசாலைவீதி,
திருநெல்வேலி,
09-05-1981.

சி. கணபதிப்பிள்ளை

---

குறிப்பு: அகவல் பாடியவர் மற்றொரு சிற்றம்பல நாடிகள் என்ற கருத்தும் உண்டு.

உ
சிவமயம்

# நூலாசிரியர்
# சிற்றம்பல நாடிகள் வரலாறு

இவர், "யாவதுங் கற்றோர் அறியா அறிவினர்;
கற்றோர்க்குத் தாம்வரம் பாகிய தலைமையர்."

செந்தமிழ்க் கலைநிறை திங்களாகவும், மெய்யுணர்ந்து, மெய்ஞ்ஞானப் பிரசாரஞ் செய்த வேதாகம ஞானபானுவாகவும் விளங்கினார். சிவ ராஜதானியமைத்து அருட்செங்கோலோச்சிய தவராஜர் இவரே. இறைபணி நின்று எல்லோரும் இன்புற்று வாழ வழிவகுத்தார். தபோதனரான இவர் அவதரித்தமையாலேயே தத்துவஞானந் தலையெடுத்தது. வேதாகம சமரச நன்னிலை தழைத்தோங்கியது.

கி. பி. 14ஆம் நூற்றாண்டின் முற்பகுதி வேதாகமத்தோர் மாறுபாடு வீறுகொண்டெழுந்த காலம். உயர்ந்தோர் வேதாகம ஒற்றுமையையே வேண்டிநின்றனர். வேண்டத்தக்க தறியும் மெய்ப்பொருள், தேவைக்கேற்பச் சிற்றம்பல நாடிகள் திருவவதாரஞ் செய்யத் திருவருள் பாலித்தது. சீர்காழியில் வேளாண்குலத்திற் சிற்றம்பல நாடிகள் அவதரித்தார். இளமையிலேயே கருவிநூல்களையும், முதனூல்களையுங் கற்றார். முப்பொருளுண்மையுணர்ந்து, முத்திநெறி காட்டவல்ல சற்குருவைத் தேடிநின்றார். இருவினையொப்பு மலபரிபாகமுற்ற பொழுது திருவருள் பதிக்கச் சற்குரு தேடிவந்தார். மெய்கண்ட சந்தானத்தின் அருளுபதேசத் தொடர்பு திருவருளாற் கைகூடியது. உமாபதி சிவாசாரியருக்கு ஞானபுத்திரான அருணமச்சிவாயரிடம் ஞானோபதேசம் பெற்ற காழிக்கங்கை மெய்கண்டாரே குருவாக வந்து வாய்க்கப் பெற்றார். சிற்றம்பல நாடிகள் குருவின் அருளுபதேசத்தைக் கேட்டுச் சிந்தித்துத் தெளிந்து நிட்டை கூடிச் சிறந்த சிவாநுபூதிச் செல்வராகத் திகழ்ந்தார்.

திருச்செந்திலாண்டவரிடம் பக்தி அதிகரிக்கப்பெற்ருர். திருச்செந்தூருக்குச் சென்று, தலவாசஞ் செய்து குமரவேள் சரணங்குறித்து மாதவம் புரிந்தார். இவரது தவத்திற்குச் செந்திலாண்டவர் எளி வந்தார். குருவாக வெளிவந்து சிவஞானுேபதேசஞ் செய்து ஆட்கொண்டருளினுர். செந்திலாண்டவர் தம்மை ஆட்கொண்ட செய்தியைத் ''திருச்செந்தூர் அகவல்'' என்னும் பிரபந்தமாகப் பாடி ஏனையோரும் படித்துய்ய வழிகாட்டியுள்ளார்.

பிற்காலத்திலே திருமயிலாடுதுறை யென்னும் மாயூரத்திற்கு அண்மையில் ஞானராஜதானியமைத்துச் சீடர் அறுபத்து மூவருக்கு ஞானுேபதேசஞ் செய்து, சிவானந்த நிட்டையிலமர்ந்தார். சிவபுரம் ஞானப்பிரகாசர், கண்ணப்பர் உள்ளிட்ட சீடரனைவருங் குருகுல வாசஞ் செய்து வந்தனர். குருவாணைப்படி சிவபூசை, குருபூசை, மகேசுர பூசைகளை விதிப்படி நடத்தி வந்தனர்.

குருவுஞ் சீடரும் உடனமர்ந்து உணவருந்துவது வழக்கம். ஒரு நாள் அன்னம் பரிமாறியவன் பசுநெய்யென எண்ணி வேப்பெண்ணெயைப் பரிகலத்திலே விட்டுவிட்டான். குருவுஞ் சீடரும் எவ்வித வேறுபாடுமின்றி உண்டனர். கண்ணப்பர் மாத்திரம் கசந்தமையை அறிந்து உண்ணுதிருந்தார். ''அவிச்சுவை அறிவான் தவச்சுவை உணரான்'' என்ருர் சிற்றம்பலவர். தமது பக்குவமின்மையை உணர்ந்த கண்ணப்பர் குருவிடம் விடைபெற்றுத் திருக்கூட்டத்தை விட்டகன்று வடதிசை நோக்கிச் சென்று தவம் பெருக்கி வாழ்ந்து வந்தார்.

சிற்றம்பலநாடிகள், சோழமன்னனை அழைத்துச் சித்திரைத் திருவோணத்திலே யோகசித்தி கைவந்த தாமும் திருக்கூட்டத்துள்ளோர் அறுபதின்மரும் மகாசமாதி அடையவிருப்பதைத் தெரிவித்து, அதற்காவன செய்யுமாறு பணித்தார். அரசன் அவ்விடத்திலேயே சிற்றம்பலவருக்கு ஒரு சமாதிக் கோயிலும், அதைச் சூழவரச் சீடருக்கு அறுபது சமாதிக் கோயில்களுங் கட்டுவித்தான். அச் செய்தியைப் பறைசாற்றி மக்களனைவருக்கும் அறிவித்தான். குறித்த நாளிற் சமாதியில் இறங்குவதைக் காண மக்கள் திரண்டனர். சிற்றம்பலநாடிகள் அனைவருக்கும் ஆசி வழங்கி, மூன்று வெண்பாக்களை ஓதித் தமக்கென

அமைக்கப்பெற்றிருந்த சமாதியில் இறங்கினர். சிவானந்த சிவயோகத்திற் சின்முத்திரை தாங்கி அமர்ந்தருளினர். சீடர் அறுபதின்மரும் தனித்தனி குருவை வணங்கி, ஒவ்வொரு வெண்பாவைப் பாடித் தத்தமக்கென அமைக்கப் பெற்றிருந்த சமாதியில் இறங்கித் துரிய நிட்டையில் ஆழ்ந்து சிவப்பேறெய்தினர்.

கண்ணப்பரும் அந்நேரத்தில் அங்கு வந்தார். சமாதிகளை வணங்கிக் குருநாதர் கோயிலின் முன்னின்று ஒரு வெண்பா பாடினர். சிற்றம்பல நாடிகளின் சமாதி வெடித்தது. அவர் கண்ணப்பரை இரு கைகளாலுந் தழுவினர். தம் மடிமீது இருத்தி, ஒன்றுபடுத்திக் கொண்டு சமாதியில் வீற்றிருந்தார். வெடித்த சமாதி தானே மூடிக் கொண்டது. கண்ட மன்னனும், மக்களும் அதிசயத்திலாழ்ந்தனர். அரசன் கோயில்களை அழகுற அமைத்துப் பூசை முதலியன நிகழ்த்துவதற்கு நிபந்தங்களும் அளித்தான். அவ்விடம் இன்று சித்தக்காடு என்னும் பெயருடன் விளங்குகின்றது.

சிற்றம்பல நாடிகள் ஆகமத்திற் காணப்பெறுந் தசகாரியத்தைப் பல அவதரங்களாக விரித்துத் துகளறு போதத்திலும், திருச்செந்தூர் அகவலிலும் ஒரே விதமாக அமைத்துப் பாடியுள்ளார் அநுபூதி விளக்கம், கலித்துறை, முக்காலத்திரங்கல், தாலாட்டு, வெண்பா, திருப்புன்முறுவல் ஆகிய சிறுநூல்களையும் இயற்றியுள்ளார். ஏனைய மாணவர்கள் இவர் இயற்றிய நூல்களை ஓதி உய்ந்தனர்.

குருபூசை சித்திரைத் திருவோணம்.

சிவம்.

## சிற்றம்பலநாடிகள் பாடிய வெண்பா

சென்றறிய வேண்டாவே சேராமை வேண்டாவே
ஒன்றுபட வேண்டாவே உள்ளத்தே — நின்றநிலை
கண்டாயே எங்கும் கதிரொளிகண் காயமெல்லாம்
உண்டான தன்மைபோல் உற்று.

உற்றுணர்வுக் குள்ளே ஒளியா வுணர்வுணர்த்தப்
பெற்றயே எவ்வுயிர்க்கும் பேறதனை — மற்றதுதான்
மாண்டதே பார்ப்பளவில் மாளா நிறைவுநம்மைப்
பூண்டதே என்றே புகல்.

தங்களைநாம் இன்பத் தடங்கலின் மூழ்குவித்தோம்
அங்குலகம் தீர மறப்பித்தோம் — இங்குலகில்
வாராதே வாதனையால் வந்தீரே யாமாகில்
பாராதே பாரீர் பரம்.

# முன்னுரை

முருகப்பெருமானது ஆறுபடை வீடுகளுள் இரண்டாவதாக அமைந்துள்ளது திருச்செந்தூர். அலைகடலருகில் அமைந்திருப்பதனால் இத்தலத்தை அலைவாய்என அழைப்பர். திருச்சீரலைவாய்எனப் புலவர் இதனைப் போற்றிப் புகழ்வர்.

திருக்கோயிலினுள்ளே தென்திசையை நோக்கியவண்ணம் ஆறுமுகப்பெருமான் அமர்ந்திருக்கின்றார். கிழக்கு நோக்கிய திருக்கோலத்தில் செந்தில்வேலவர் மாட்சி அமைந்திருக்கின்றது. மூலத்தானத்தினுள்ள சிவலிங்கத்தை முருகப்பெருமான் வணங்குவதாக ஐதிகம். இவ்வாலயத்தில் ஒன்பது காலப் பூசை ஒழுங்காக நடைபெற்று வருகின்றது. விஸ்வரூபம் என்ற பெயருடன் அதிகாலை ஐந்தரை மணிக்கு நடைபெறுந் திருவனந்தற் பூசை சிறப்புடையது.

திருச்செந்தூரின் தொன்மை பற்றியுஞ் சேந்தன் திருவருட் சிறப்புப் பற்றியும், வரலாற்றுக்கு எட்டாத காலத்திலிருந்தே ஞானிகளும், புலவர்களும், பல சிறந்த நூல்களைத் தமிழிலும், வடமொழியிலும் புனைந்து தந்துள்ளார்கள்.

''வெண்டலைப் புணரி அலைக்குஞ் செந்தில்'' எனப் புறநானூறும்,

''திருமணி விளக்கின் அலைவாய்'' என அகநானூறும்,

''சீர்கெழு செந்தில்'' எனச் சிலப்பதிகாரமும்,

''உலகம் புகழ்ந்த ஓங்குயர் விழுச்சீரலைவாய்'' எனத் திருமுருகாற்றுப்படையுங் கூறுகின்றன. திருமுருகன் கைவேல் வந்து தம்மைச் சிறை மீட்கும்என நம்பித் திருமுருகாற்றுப்படையை நக்கீரர் பாடினார் என்றும், கைவேல் வாராமை கண்டு கலங்கி மறுபடியும், ''முருகனே செந்தி முதல்வனே,'' ''உன்னை ஒழிய ஒருவரையும் நம்புகிலேன்,'' ''காக்கக் கடவியநீ'' என்னும் பாடல்களைப் பாடி

அருள் பெற்றனர் என்றுங் கூறுவர். குமரகுருபர சுவாமிகளும் திருச்செந்தூர்க்கந்தர் கலிவெண்பாவில், ''கருணை வெள்ளமெனத் தவிசில் வீற்றிருந்து எவ்வுயிர்க்குந், தஞ்சமென நிற்குந் தனிப்பொருள்'' எனப் புகழ்ந்துள்ளார்கள். பகழிக் கூத்தர் திருச்செந்தூர்ப் பிள்ளைத் தமிழில், ''பேராதரிக்கும் அடியவர்தம் பிறப்பை ஒழித்துப் பெரு வாழ்வும் பேறுங் கொடுக்கவரும் பிள்ளைப் பெருமாள்'' என்று பாடிப் பரவியுள்ளார். செந்திற் கலம்பக ஆசிரியர்,

''ஒழிந்தன துன்பம் உவந்தன உள்ளம்
இழிந்தன நம்வினை யெல்லாம் செழும்புனற்
சேந்தன் திருச்செந்தில் சேர்ந்து''

என்று புகழ்ந்து இறைஞ்சியுள்ளார். பன்னீரிலையிற் பொதிந்த திருச்செந்தூர்த் திருநீற்றை அணிந்த மாத்திரத்தே எல்லாவித நோய்களும் எளிதில் நீங்கும் என்பதை,

''வந்த வினையும் வருகின்ற வல்வினையுங்
கந்தனென்று சொல்லக் கலங்கிடுமே — செந்திநகர்ச்
சேவகா என்று திருநீ(று) அணிவார்க்கு
மேவவா ராதே வினை'' என்ற பாடலாற் புலவர் ஒருவர்

புலப்படுத்தியுள்ளார். அருணகிரிநாதர், ''கும்பமுனி கும்பிடுந் தம் பிரானே'' என்று திருமுருகன் திருப்புகழைப் பாடி, அகத்தியமுனிவர் இங்கு வழிபாடாற்றி அருள்பெற்றார் என்பதை அறிவுறுத்தியுள்ளார். ஆதிசங்கராச்சாரியர் வழிபட்டு உடற்பிணி நீங்கப்பெற்ற தலம் இத் திருச்செந்தூரே என்றும், அவர் இங்கேயே சுப்பிரமணிய புஜங்கத்தைப் பாடினர் என்றுங் கூறுவர்.

திருச்செந்தூர்ப் பெருமானடியவராகிய சிற்றம்பலநாடிகள், தாம் பெற்ற சிவாநுபவத்தை ஏனையோரும் பெற்று உய்யவேண்டும் என்னும் பெருங் கருணையால், சொற்சுவையும் பொருட்சுவையுந் தோய்தர, ஓரரிய சாத்திர தோத்திர நூலாக இந்நூலை யாத்துள்ளார். முருகப் பெருமானது திருப்புகழ், அலங்காரம், அநுபூதி, ஆற்றுப்படை யாதிய பிரபந்த மலர்களைக் கொண்டு, தேவபாணியாகத் தொடுத்த தெய்வப் பாமாலை இது. முருகப்பெருமானுடைய திருமுகங்கள் ஆறும், திருக்கரங்கள் பன்னிரண்டும் ஊடும் பாவும்போலச் செய்திகள் எங்கணுஞ் செறிந்து இலங்கச் சைவசமய சாதன நுட்பங்களை நிரல் செய்து, பாசஞான பசுஞானங்களை நீக்கித் திருவருளாற் பதிஞானத்தைப்

பெறும் உத்தியினையுஞ், சிறப்பாக வித்தியாதத்துவங்களினூடாக எமபெருமானது அருள் தொழிற்படும் உண்மையினையும்,

''என்செயல் அகன்றேன் யானற ஈசன்
தன்செயல் நடக்குந் தன்மையுங் கண்டேன்'' என அடி 339 தொடக்கம் 382 வரை விளக்கிய விந்தை சிந்தைக்கினிய விருந்தாகும். பின்னர்,

''தன்னைத் தந்தான் என்னைக் கவர்ந்தான்
பின்னைப் பெறுமோர் பேற்றையுங் காணேன்
சுயம்பிர காசம் சொரூபா னந்தம்
இயம்புதற் கரிதாம் இன்பப் பெருக்கம்

தாடலை போலுங் காறலை போலுங்
கூடலை என்னுற் கூறவும் படுமோ'' என அத்துவித முத்திக் கலப்பையும், அந்நிலையில் ஒன்றோ இரண்டோ என்று ஓத முடியாத வேதாந்த சித்தாந்த சமரச ஞானத்தையுஞ் சொல்லாமற் சொல்லிய சிறப்பே சிறப்பாகும்.

சிவயோக சுவாமிகள் பாடிய நற்சிந்தனையில்,
''ஒருசொல்லால் உளந்தூய்மை யாச்சே — சிவசிவ
ஒன்றிரண் டென்றிடும் பேதமும் போச்சே
அண்ட சராசர மெல்லாம் — சிவசிவ
அகத்திலே கண்டு தரிசித்துக் கொண்டேன்
முண்டக மலர்ப்பதங் கண்டேன்
மூவருந் தேவரும் முளைத்ததுங் கண்டேன்
உருகி யுருகி உணர்ந்தேன் — சிவசிவ
ஒன்றையுங் காணுமல் ஏங்கிநான் நின்றேன்
மரும மிதுபெரும் மருமம்
மகத்துக் களாலுஞ் சொல்லொணு மருமம்''

என்று தம்து ஞான அநுபவத்தைக் கூறியுள்ளார்கள். அருணகிரிநாதர் கந்தர் அநுபூதியில்,

"சும்மா இருசொல் லறனன் றலுமே
அம்மா பொருளொன் றுமறிந் திலனே"

என்று பாடியுள்ளார்.

இந்நூலாசிரியர்,

"சும்மா இருக்கச் சொன்னதோர் வார்த்தை
அம்மா அதிசயம் ஆருடன் புகல்வேன்" என்று தொடர்ந்து

ஏசற இருந்த நிலையிலே தாம்பெற்ற அநுபூதியினைச் சொல்லியுள்ளார். இம் மூவர் அநுபவங்களையுஞ் சீர்தூக்கிப் பார்ப்பவர் எட்டுணை வேறுபாடுங் காணார்.

எங்கள் குருநாதராம் சிவயோக சுவாமிகள், பல ஆண்டுகளுக்கு முன்னரே இத் திருச்செந்தூரகவலைப் பாடமாக்கும்படி அடியார் பலரிடங் கூறியிருக்கின்றார். அவ்வடியவர் சிலர் இன்றும் இருக்கின்றனர். சிவஞான சித்தியார் என்னுஞ் சைவ சாத்திர நூலுக்குத் தக்கதோர் விளக்கவுரை செய்த திருவிளங்க தேசிகரும், உபாசனைக்கு-ஒருங்கிய சிந்தையர் ஆவதற்கு உகந்த பிரபந்தங்களுள் ஒன்றாக இத் திருச்செந்தூரகவலைக் காட்டியுள்ளார். ஏனைய சைவ சித்தாந்த சாத்திரங்களுக்கு உரையெழுதியோர் பலரும், மாறுபடும் இடங்களிலே இவ்வகவலை ஆதாரமாகக் காட்டித் தம்முடைய கொள்கையை நிலைநாட்டியிருக்கின்றனர்.

"தெய்வம் சிவமே; சிவனருள் சமயம்
சைவம்; சிவத்தொடு சம்பந்தம்" என்று சித்தாந்த சைவ

சமயத்திற்கு இரத்தினச் சுருக்கமாக வரைவிலக்கணங் கூறிய நூல் இதுவே. சைவ உலகம் போற்றும் ஸ்ரீலஸ்ரீ ஆறுமுகநாவலர் அவர்கள், இத் திருச்செந்தூரகவலின் அருமையை உணர்ந்து அச்சிற் பதிப்பித்தார்கள். நாவலர் பதிப்பின் ஐந்தாம் பதிப்பு அக்ஷய ௵ மாசி ௴ வெளிவந்தது. அப் பதிப்பின்படியே இந் நூலின் மூலம் வேண்டிய இடத்துச் சந்தி பிரித்து இலகுவாக்கி அச்சிடப்பட்டிருக்கின்றது. திருவாதவூரடிகள் புராண உரையாசிரியர் உயர்திரு. ம. க. வேற்பிள்ளை அவர்கள் அப்புராணத்தில் யோகபாதத்தை விளக்குவதற்காகத், திருச்செந்தூரகவலில் யோக மார்க்கத்தை விளக்கிய 114 வரிகளையும் அப்படியே எடுத்து எழுதிக் காட்டியுள்ளார். இவ்வகவல் கூறும் முத்தி பஞ்சாக்கர விளக்கத்தையும் எடுத்துக் காட்டி, அவர் தமது கொள்

கையை நிறுவியுள்ளார். பேரின்ப தாகங்கொண்டார் அனைவருந் தாக சாந்தி செய்வதற்கான தேவாமிர்தமாக விளங்குகின்றது இத் திருச் செந்தூர் அகவல்.

இத்துணை அருமருந்தாயுள்ள திருச்செந்தூரகவலைப் படித்துப் பிறவிப்பிணி தீர்ந்து உய்ய வேண்டும் என்னும் பேரவா எல்லோருக் கும் உண்டாவது இயல்பே. படிப்பவர், சொல்லிய பாட்டின் பொரு ளறிந்து படித்தாற் பெரும்பயன் பெறுவர். இதனாலேயே திருவருள் தூண்ட அன்பர் வித்துவான் பொன். அ. கனகசபை அவர்களை இந் நூலுக்கு ஓர் விளக்கவுரை எழுதும்படி வேண்டினேன். பொரு ளின் ஆழத்தை நோக்கி ஏனையோர் போன்றே அவரும் எழுதத் துணிவுற்றிலர். ''முருகப்பெருமான் திருவருள் துணையாகும்; அஞ்சாது தொடங்குங்கள்'' என்றேன். பலர் பதிப்பித்த திருச்செந்தூர் அகவல் மூலநூல்கள், வேண்டிய துணைநூல்கள் என்பவற்றையுந் தேடி உப கரித்தேன். இந்தியா செல்லுங் காலங்களில் அறிஞர் பலரோடு அள வளாவி உசாவி யான் பெற்ற அறிவினையும் அவருக்குக் கூறி ஊக்கினேன்.

இந்திய அறிஞருள் காஞ்சீபுரம் மெய்கண்டார் ஆதீனம் தவப் பெருந்திரு ஞானப்பிரகாச தேசிக பரமாசாரிய சுவாமிகளும் ஒருவரா வர். சித்தாந்த சாத்திர நூல்களைப் பாடங் கேட்டதன் மூலம் இவ் விளக்கவுரையாசிரியர் பரமாசாரிய சுவாமிகளுக்கு முன்னரே அறிமுக மானவர். திருச்செந்தூரகவல் விளக்கவுரையை இந்தியாவுக்குக் கொண்டு சென்று அவரிடங் காட்டினேன். உரையைப் பார்வையிட் டுப் பல திருத்தங்களைச் செய்து தந்தார். திருத்தி எழுதப் பெற்ற விளக்கவுரையை இரண்டாம் முறையும் இந்தியா கொண்டுசென்று அவரிடங் காட்டினேன். பார்வையிட்டு ஓர் வாழ்த்துப்பாவும் தந்து, தாமதமின்றிப் பதிப்பிக்குமாறுங் கூறினார், பரமாசாரிய சுவாமிக ளுடைய வாழ்த்துப் பாவே யாவும் பகரும்.

இலக்கியக் கலாநிதி, திருவார் திரு. சி. கணபதிப்பிள்ளை அவர்கள் ''திருச்செந்தூரகவலுக்கு உரை காண்பது மிக மிகக் கடினம்; தத்து வப் பிரகாசம் போன்ற சித்தாந்த நூல்கள் ஓரளவு பயன் படும்; அந் நூல்களை உசாத் துணையாகக் கொண்டு நடுநின்று நூற்பொருளை நயம்பெற எழுத வேண்டும்'' என்று கூறி ஊக்கப்படுத்தினார்கள். உரை வளத்திற்கு வேண்டிய சைவ சித்தாந்த தத்துவ நுண்மாண் நுழைபுல மொழிகளையும் அவ்வப்பொழுது வழங்கினார்கள். ஈற்றில் அணிந்துரை மூலம் நூலையும் அழகுபடுத்தியுள்ளார்கள்.

சாவகச்சேரி தவத்திரு. சி. அருணசல சுவாமிகள் வேதாந்த வித்தகர். திருச்செந்தூரகவல் விளக்கவுரையாசிரியர் அவரிடம் வேதாந்தங் கற்றவர். திருச்செந்தூரகவல் உபதேசப் பகுதி, அநுபூதிப் பகுதிகளில் வரும் சைவ வேதாந்த தத்துவ விளக்கங்களுக்குச் சுவாமிகளே உறுதுணை புரிந்தார்கள்.

உரை எழுதும்பொழுது ஏற்பட்ட எல்லாவித மயக்கங்களையுஞ் சிவயோக சுவாமிகள் நற்சிந்தனை மூலந் தெளிவாக்கியருளினூர்கள் சிவயோகசுவாமிகள் உலகோபகாரமாக மேற்கொண்ட சிவதொண்டைத் தொடர்ந்து செய்யுநெறியாகவே இந்நூல் வெளிவருகின்றது.

•

காலத்திற்கேற்ற கருத்து, இதுவரை ஆழத்தில் மறைத்து வைக்கப்பட்டிருந்தது. நூல் தோன்றிப் பல நூற்றுண்டுகள் கழிந்தனவாயினுங் காலத்திற் கரையாது, வேண்டியபொழுது செந்திலாண்டவர் திருவருள் வசமாக விளக்கவுரையுடன் வெளிவருகின்றது. விளக்கவுரையாசிரியர் பன்னீராண்டு விடாமுயற்சியாய்ச் செய்த பாராயண தியானங்களுக்குக் கிடைத்த ஆறுமுகனருட் பிரசாதமே இந்நூல். ''அஞ்சுமுகந் தோன்றில் ஆறுமுகந் தோன்றும்.'' எவ்வாறு எழுதுவது என்ற அச்சத்தோடு ஆராய்ந்தபொழுது ஆறுவகையாய் அமைந்திருப்பது கண்டு உபாசனை, தீட்சை, உபதேசம், அநுபூதி, ஆற்றுப்படை, நூற்பயன் என ஆறுக வகுத்துப் பதவுரையாயும், பொழிப்புரையாயும், வேண்டிய இடத்து விருத்தியுரையாயும் எழுதி முடித்தார். எடுத்துக் காட்டாகத் தரப்பட்டுள்ள செய்யுள்கள், பல அரிய நூல்களிலிருந்து பெருமுயற்சியின்பேரில் தேடி எடுக்கப்பெற்றவை. உபநிடத ஆகமக் கருத்துக்களும், சாத்திர தோத்திரச் செய்திகளும் இடையிடையே விரவியுள்ள இவ் விளக்கவுரை ஓர் இலக்கிய உரையுமன்று; மிகு சைவத்துறைக்கும் முருக உபாசனைக்கும் வளர்முகமாக வாய்ந்த சாதனமாகும். உபதேச மகாவாக்கியமான 'தத்துவமசி'யும், அநுபூதிமகாவாக்கியமான 'அகம்பிரம்மாசி'யுந் தோன்றித் தொடர்த்து முடியுஞ் சிறப்பு வித்தகர் காட்சிக்கு விளக்கமாகும். வாசனு மல நீக்கத்திற்கு ஐந்தெழுத்தோதுதல் போன்று, இதனையும் உபாசனு நூலாகக் கைக்கொள்ளுவார்களாக!

பக்தி நெறியில் வளர்ந்து பக்குவமடைந்தோர்க்குத் திருச்செந்தூரகவல், 'இட்டகாமியமும் எண்ணெண்கலையும் அட்டமாசித்தியுந்தந்து மெய்ஞானத்தை உதிக்கச்செய்து வீடுபேற்றின்பத்தையருளும் என்பது முக்காலத்தும் உண்மை. இந்த நாலினைத் திரிகரண சுத்தியோடு கருத்துறக் கற்போர், கேட்போர், துதிப்போர் பெறும் பயன்கள்:-

''பாவந் தீரும்; யார்மிகு தருமம்
மேவிளம் பிறைபோல் மேன்மேல் வளரும்;
துட்டதே வதைகள் தொட்டதும் வஞ்சர்
இட்ட பில்லி இடர்களுந் தீரும்;
வாதம் பித்தம் வலிபடுங் காசம்
சீதம் வெதுப்புத் தீரா நோய்கள்
வேதனை மிகுந்த வியாதிகள் எல்லாம்
ஆதவற் கண்ட பனிபோல் அகலும்;
சாகா வரமுந் தந்திடும்; உடம்பிற்
போகாப் பீடை போக்கி ரட்சிக்கும்;
வறுமை நீங்கும்; வாழ்வு உண்டாகும்;
செறிதரும் அட்டமா சித்தியுங் கொடுக்கும்;
சரியை கிரியை சார்ந்திடும்; யோகந்
தெரிதரும்; ஞானமூஞ் செறிந்து வாழ்குவரே.''

''பல்லாண்டு காலமாகப் பாடுபட்டுச் செய்த பணி, உலகத்துக்குப் பயன்படுமாறு வெளியிடவேண்டும்'' என்றுகூறித் தாமாக முன் வந்து பொருளுதவி புரிந்தவர் புங்குடுதீவு மூன்றும் வட்டாரம் நடுவுத் துருத்தி வாசரும், திருச்செந்தூருக்குப் பலகாலமாக யாத்திரை செய்து வரும் பக்திமானும், சிவதரும கைங்கரியங்களுக்கு உதவி வருபவருமாகிய ஆசிரியர், திரு. ச. தம்பையா அவர்கள். அவர்களின் கொடைத்தன்மை அரும்பருவம் பார்த்துப் பொன்மழை பொழியும் புட்கலாவர்த்த மேகத்தை நிகர்த்தது.

அச்சகத்தை ஒழுங்கு செய்வது முதல் அச்சுப் பிரதிகளைத் திருத்துவது ஈறுகப் பலவகையிலுந் தோன்றுத் துணையாக நின்று, உரிய காலத்தில் நூல் வெளிவருவதற்கு உதவி புரிந்தவர் ஓய்வுபெற்ற அதிபரும், யாழ்ப்பாணம் கூட்டுறவுத் தமிழ்நூற் பதிப்பு விற்பனைக் கழகத் தலைவரும் ஆகிய உயர்திரு. சி. சிவகுருநாதன் அவர்கள். கண்ணியம் மிக்க அன்பர் பலர் பலவேறு உதவிகளைச் செய்துள்ளனர்.

சைவ வானில் அருளொளி பரப்பி நிற்கும் ஞான பாநுவாகிய இலக்கிய கலாநிதி திருவார்திரு. சி. கணபதிப்பிள்ளை அவர்கள் செய்த உதவி, என்றும் நெஞ்சை விட்டகலா நிலைமையது.

செட்டியார் அச்சக அதிபர் திரு. பே. சோமசுந்தரம் அவர்களதும், திரு. இ. சங்கர் அவர்களதும் தாராள சிந்தைகளே இந்நூல் வெளி வருவதற்கு உறுதுணையாயிருந்தன.

ஆசிரியர் திரு. ச. தம்பையா அவர்களும், அதிபர் சி. சிவ குருநாதன் அவர்களும், செட்டியார் அச்சகத்தார் அனைவரும் பெரு நன்றிக்கு உரியவர்கள்.

யாவருக்குஞ் செந்திலாண்டவர் திருவருள் பாலிப்பாராக!

"உன்னை யொழிய ஒருவரையும் நம்புகிலேன்
பின்னை யொருவரையான் பின்செல்லேன் — பன்னிருகைக்
கோலப்பா வானோர் கொடியவினை தீர்த்தருளும்
வேலப்பா செந்திவாழ் வே."

சிவதொண்டன் நிலையம்,
யாழ்ப்பாணம்,
துர்மதி ௵ வைகாசி ௴.

அ. செல்லத்துரை



புங்குடுதீவு சிவதொண்டர்,

**திரு. ச. தம்பையா அவர்கள்**

உ

சிவமயம்

திருவம்பலமுடையார் துணை

காஞ்சிபுரம் தொண்டைமண்டலச் சைவம்டாலயம் திருக்கயிலாய பரம்பரை, மெய்கண்டதேவ சந்தானம், ஞானபீடத்துக் குருமஹா சந்நிதானம் சீலத்திரு. ஞானப்பிரகாச தேசிக பரமாசாரிய ஸ்வாமிகள் அருளிய

## வாழ்த்து

பொன்னியும் சைலமகள் புவிமகள் மலைமகள்
மன்னிய பெருமையால் வளம்பெரு கினியநற்
பொன்கொடு தீவிற் பொருந்திவாழ் புலவருட்
கொன்கொளும் செல்வம் குலவிநூற் பலவும்
ஆய்ந்துணர் நுண்மாண் பார்புலம் மிக்கோன்;
வாய்ந்துத வும்சை வத்தருட் பனுவலும்
தேர்ந்தோன்; திருவருள் சேர்ந்தோன்; பேரின்
பார்ந்தோன்; கொடுவினை தீர்ந்தோன்; சிவமலா
தவமறி யாதவன்; அடியருக் கடியவன்;
பவமறி யதிதவம் பண்ணும் புண்ணியன்;
பொறைமுதற் பண்பெலாம் புவிவரு முன்னரே
நிறையக் கருவிலே நிலைத்த சான்றோன்;
ஏக சந்ததி தியாகி யெனத்திகழ்
தாகமே யலதொரு தாகமும் இலாதான்;
கற்ற துணர விரித்துரை கலைக்கரை
உற்றவன்; உலகோர் உளம்விழை யுத்தமன்;
ஏகசித் தியாருரை யெம்மிடங் கேட்டோன்;
யோக சுவாமி யுயர்மடத் திருந்துநாம்
திருவுந்தி யாருரை செப்பநன் குணர்ந்து
கருவுந்தி யின்புறக் கவினுரை வரைந்தோன்;
நூலா சிரியன்; நுவலுரை யாசான்;
மேலாப் பலர்க்கும் விளம்புநல் லாசான்;

தன்னைச் சிவபிரான் தங்கவா சனமா
மன்னச் செய்தநல் வளத்தால் தானொரு
கனக சபையெனக் கவினுற வொளிர்வோன்;
அனகனைத் தன்போல் அனைவரும் உணர
ஞானநூல் பலசொல் நலத்தன் ஆதலின்,
வானவர் முதலோர் வழிபடு திருச்சீ
ரலைவாய்ப் பெருமான் அடிதொழும் நற்றமிழ்
நிலைவாய் அகவல் நீள்பிர பந்தத்தின்
பொருளை விளக்கும் புண்ணியம் பெருகும்
அருளையும் வழங்கும் அருஞ்செயல் புரிந்து
தாயகம் சேயகம் தாயநற் புகழ்கொள
காயநெஞ் சகமுரை கந்தவேள் சொந்தமாக்
கருஞ்செய லாற்றினன்; ஆன்றோன்; இந்நாட்
பெருஞ்செயல் இதுபோற் பேணினர் எவருளர்!
வாழ்க எல்லா வளங்களும் நலங்களும்
சூழ்க ஆயுளும் சுகமும் இனிதே!
சூழ்கதிர் மதியுளவரை தொலையாச் செல்வமொடு
வாழ்க பல்லூழி வாழ்கசெவ் விதினே!

உ

சிவமயம்

திருச்சிற்றம்பலம்

சிற்றம்பல நாடிகள் அருளிய

திருச்செந்தூர் அகவல்

என்னும்

# சுப்பிரமணியர் அகவல்

## காப்பு

நந்தூர் அலைவாயில் நண்ணியுல கேத்தவொளிர்
செந்தூர்த் திருவகவல் செப்புவேன் — இந்தூருஞ்
செஞ்சடையான் யானைச் சிரமுடையான் அன்பிலிகள்
நெஞ்சடையான் பாத நினைந்து.

## நூல்

## 1. உபாசனை

### சற்குரு வணக்கம்

ஓமெனுந் தாரக ஒண்பொருள் சிவனுக்(கு)
ஆமென மொழிந்தே **அருட்குரு** வானோன்;
பொற்புறு பொதிய வெற்புறு முனிக்கு
நற்பொருள் விளக்கு **ஞான தேசிகன்**;
பொய்வழிச் சமணப் புலையிருள் நீக்கிச்
சைவம் வளர்க்குஞ் **சம்பந்த மூர்த்தி.**

### உபாசனா மூர்த்தி (நாம) வணக்கம்

முருகன் குமரன் மூவிரு முகன்மால்
மருகன் சிவனருள் மைந்தன் கந்தன்
மலைமகள் பாலன் வயங்கிளர் வேலன்
கலைபயில் புலவன் கார்த்தி கேயன்

வளையொரு மருப்பு வாரண முகவற்(கு)
இளையவன் குகன்மயி லேறும் பெருமாள்
சூரசங் காரன் சுப்பிர மணியன்
வீரருள் வீரன் விரைகமழ் கடம்பன்
சேந்தன் வள்ளி தெய்வ யானை
காந்தன் செவ்வேள் காங்கேயன் சிலம்பன்
ஆயிர நாமத்(து) ஐயன் துய்யன்
சேயருட் கோமான் சேவல் துவசன்.

## ஆறுபடை வீடுறை அழகன்

வரங்கிளர் கருணைப் **பரங்கிரி** உறைவோன்;
மாவினம் விளங்கும் **ஆவினன் குடி**யோன்;
நந்தூர் அலைவாய்ச் **செந்தூர்க்** கடவுள்;
பாரகம் விளக்கும் **ஏரகத்** தமர்வோன்;
மாலயன் இறைஞ்சுஞ் **சோலைமா மலை**யோன்;
**குன்றுதோ ரடல்** நன்றெண மகிழ்ந்தோன்.

## அழகன் (திருவுருவ) அலங்காரம்

பாசக் கங்குல் பசையறப் பருகி
நேசர்க்(கு) இன்ப நிறையொளி பரப்பித்
திருவளர் செழும்பொற் செந்தா மரைக்கு
மருவுமோர் சான்றாய் மலர்ந்த**பொற் பதமு**
நினைப்பொடு மறப்பு நீங்கிடும் அதீதம்
அனைப்பர நாத மறையொலி யலம்பும்
பாந்தளஞ் சுடிகைப் பன்மணி யிழைத்த
காந்துசெஞ் சுடர்க்காற் கழற்பரி புரமுங்
கண்குளிர் கனகக் கவின்கிடந் திலங்குங்
கிண்கிணி யிசைக்குங் கிளர்திரு **வரையும்**
வட்டுடை வரிந்து தொட்டகூர் வாளுங்
கட்டுறு யோக பட்டிகைச் சிறப்பும்
இந்திர வில்லிரண்(டு) எதிர்பொருந் துவபோற்
சுந்தர ஆழி சூட்டுமங் குலியு
மன்னிரு முகிலான் மணிதரு நிதிசேர்
பன்னிரு கமல பாணியும் அவற்றிற்

சூலமும் வேலுந் துரோணமுஞ் சரமும்
பாலமுங் குலிசமும் பரிசையும் வாளும்
ஆழியு மழுவும் அபயமும் வரதமுஞ்
சூழுமுன் **கைகள்** துலங்குபொற் கடகமு
மந்தரந் தழுவும் வாசுகி யன்ன
சந்தத **மொய்ம்பு** தழைத்தகே யூரமும்
பரிதிமண் டலம்போற் பதக்கமுத் தாரந்
தருசரப் பணிகள் தயங்குபூண் **மார்பும்**
அட்டிகை பணிநல் அக்கிருங் குவளை
விட்டொளி விரிக்கும் வியன்**கந் தரமு**
மூவிரு திங்கள் முதிர்ந்தபூ ரணம்போல்
மேவுசண் **முகங்கள்** விளங்குநற் பொலிவு
முளரிமுந் நான்கு மூவிரு குமுதம்
வளர்மதி யுதயத் திடைவளர்ந் தனபோல்
முகந்தொறுங் கருணை யுகந்த**கண் களு**ஞ்சீர்
உகந்தபொற் குதலை யொழுகு**வாய்** வனப்புந்
தொட்டபொற் **குழைகள்** தூக்குகுண் டலமுஞ்
சுட்டியு **நுதலி** லிட்டவெண் ணீறு
மன்னிரு மகளிர் மாட்டலால் வணங்காச்
**சென்னி**சேர்ந் தொளிருஞ் சேகரச் சிறப்பு

## ஏறுமயில் ஏறிவருங் காட்சி

மகபதி மகளும் வள்ளியந் திருவுஞ்
சுகமணஞ் சூட்டுந் தொங்கலுங் கடம்புங்
கோதைசூழ் அன்னோர் கொங்கையாற் பூசும்
ஏதமில் சுகந்த லேபனப் பூச்சு
மரகதப் பொருப்பும் வயிரவான் பொருப்பு
நிரல்வல மிடமார் நெடியபொற் கிரிபோல்
அகிலமு மீன்ற அன்னைய ரிருவர்
மகிழ்வுற இருபால் மன்னிவாழ்ந் திருப்பப்
பன்னிறந் தளிர்க்கும் பச்சைவான் கிரிமேல்
துன்னிரு கோடி சூரியர் உதித்தாங்(கு)
அவரவர் அச்சம் அடுதிறல் மயூரக்
குரகதம் ஏறிக் குலவு காட்சியுங்

கரந்தெனை யாளுங் கருணையாற் புவிமேற்
சரந்தரு மானுடச் சட்டை சாத்தி
அழியா ஒளிவந்(து) அழியா மொழியை
வழியா மொழிய வந்தனங் குருவாய்
ஆணவக் கடற்குள் அலைபடு துரும்பும்
பூணுறு மாயைப் புலிவாய்ப் பசுவுங்
கருமச் சூறைக் காற்றுறு சருகுந்
தருமிச் சுழலைச் சார்ந்திடும் எளியநின்
வருத்தங் குறித்து வருந்தேல் உனக்குத்
திருத்தகும் உணர்வு செப்ப வேண்டி
வந்தன முத்தி வழங்குதும் என்றான்;
அந்தநன் மொழிகேட்(டு) அன்பொடுந் துதிப்பேன்

## 2. தீட்சை

கற்பக வனம்போற் கமழ்பூங் காவிற்
பொற்புற விளங்கும் பொலன்மணிக் கனகப்
பன்னக சாலையுட் பதுமபீ டிகைமேல்
துன்னுபூந் தருக்கள் சூழ்கற் பகம்போற்
சங்கமீன் நாப்பண் தயங்குவெண் மதிபோல்
அங்கை கூப்பி அடியார்நின் றேத்த
இனிதெழுந் தருளி என்முக நோக்கிப்
புனிதநீ ராடப் போகென மொழிந்தான்;
நீரிடை மூழ்கி நெடுங்கலை யணிந்து
சார்தலும் ஓமச் சடங்குகள் இயற்றி
வெண்ணீ(று) அணிந்து விதியெழுத் தைந்துந்
தெண்ணீர் மையினிற் செவியிற் புகட்டி
அறுகெரு வுடன்கை யள்ளுநீ ருடனென்
மறுகுடல் ஆவி வான்பொருள் கொண்டான்
பரவுசஞ் சிதநம் பார்வையால் ஒழிந்த
விரவுமுற் பவங்கள் வினையுடம்(பு) அளவில்
அத்தன் அருள்மேல் ஆகா மியங்கள்
பற்றில நினது பண்புபோல் இருந்த

நம்பெரு வடிவை நாடுகென் றருளித்
தம்பொற் கரமலர் என்தலை தீண்டி
முழுநிலம் புரப்ப முடிசூட் டுவபோற்
செழுமணிப் பதமென் சிரமிசைப் பொருத்திப்
பாத தீர்த்தம் பரிகல சேடம்
ஆதரக் குழவிக்(கு) அன்னைபோல் அருத்திக்

## சைவ அநுட்டானம்

குருபதம் பணிதல் குஞ்சர முகனைக்
கருதல் சங்கற்பங் கங்கையின் பூசை
திருந்துமுத் திரைகள் திக்குபந் தனநீ(டு)
அருந்துயர் நீக்கும் அத்திர சந்தி
தத்துவத் திரயந் தாளத் திரயஞ்
சுத்தா சமனம் தொடுமிடந் தொடுகை
கரமுடன் அங்கங் கருதிடு நியாசம்
விரவு தருப்பணம் விளங்குநீ(று) அணிகை
அஞ்செழுத்(து) ஓதி ஆதவற் பணிதல்
விஞ்சுமா கமத்து விதிமுறை முடித்துப்
பண்டையோர் நம்மைப் பரவுசொற் பாடல்
கொண்டுநீ துதிகள் கூறெனு விளம்பிப்

## உபாயமார்க்கம்: விரதம், அறம்

பத்திகூர் விரதம் பயின்றிடின் நாலாஞ்
சத்திநி பாதந் தருமெனப் பகர்ந்தான்
அன்னமிட்(டு) எவர்க்கும் அரும்பசி தீர்த்துப்
பன்னருஞ் சாலை படித்துறைத் தடாகம்
வந்தார் அருந்தும் வாசநீர்ப் பந்தர்
நந்தா வனங்கள் நலம்பெற அமைத்தே
ஈங்(கு)இவை முதலா எண்ணுன்(கு) அறமுந்
தீங்கிலா வண்ணஞ் செய்கென மொழிந்தான்

## உண்மை மார்க்கம்: சிவசரியை

காலையில் எழுந்து கடிமலர் பறித்து
மாலிகை தொடுத்து மதிமுடிக் கடவுட்

பூசனைக்(கு) உதவிப் புனிதவா லயத்தின்
வாசல் விளக்கிட்(டு) அலகொடு மெழுக்கிட்(டு)
ஆறுகா லமுஞ்சென்(று) அரன்பதம் இறைஞ்சி
ஏறுளான் அடியார்க்(கு) ஏவல்பூண்(டு) ஒழுகல்
இத்திற முதலா இயற்றுதல் சரியை
சுத்தசா லோக்கியந் துய்க்குமென்(று) இசைத்தான்

## சிவகிரியை

பொய்வகை நீக்கிப் பூத முதலா
ஐவகைச் சுத்தி மெய்வகை விளக்கி
மணம்பொலி கந்த வர்க்கமா மலர்கள்
இணங்குநல் தூபம் எழில்குலாந் தீபந்
தருநை வேத்தியந் தாம்பூல முதலாய்
வருமுப சார வகைபல இயற்றி
அகந்தவிர் உளத்தோ(டு) அகம்புறம் இறைஞ்சிச்
சுகங்கிளர் அங்கித் தொடுகடன் முடித்துப்
போற்றுறும் இலிங்க பூசனைக் கிரியை
சாற்றுசா மீப்பியந் தருமெனப் பகர்ந்தான்

## சிவயோகம்

### 1. சரியையில் யோகம்

கட்டளை கப்பணங் கட்டளை யிட்டுத்
தட்டுறு மலந்தீர் சாதன மொழிந்து
கடுங்கொலை வெறும்பொய் களவுகட் காமம்
படும்பெயர் பஞ்ச பாதகந் தீர்த்துக்
காமங் கோபங் கசடுறும் உலோபந்
தீமன மோகஞ் சேர்மத மாற்சரியம்
ஈண்டிவை முதலா எண்ணில் பாவம்
பூண்டன ஒழியப் புந்திதந் தருளி
மன்னுகீழ் அரணி வருத்தமில் உணர்வாய்ப்
பின்னுமேல் அரணி பிரணவம் ஆகக்
கடையவே ஞானக் கனலெழும் என்றே
தடைபடாப் பாச தகனஞ் செய்தான்.

## 2. கிரியையில் யோகம்

அருளெனுந் தலத்தில் அறிந்துகால் மடக்கி
இருளற இருக்கும் இயற்கையும் விண்டான்
பன்னிரண் டங்குலம் பறிந்திடும் பிராணன்
பின்னதின் நான்கும் பிரிந்துபோம் அதனால்
ஆயுளுங் குறைந்திட்(டு) ஆக்கையுந் தளர்ந்து
சாயுமென்(று) உரைத்துச் சாகா திருக்க
நாடியோர் பத்து நாடிநா டிகள்புக்(கு)
ஓடிய வாயு ஒருபதுந் தேர்ந்து
சொன்னநா டிகளிற் சுழுமுனை நடுவாம்
இன்னதின் பக்கத்(து) இடைபிங் கலையாம்.
அக்கினி திங்கள் ஆதவன் கலைகள்
புக்கமுச் சரமும் போய்மீண்(டு) இயங்கு
மூலகுண் டலியாம் உரகமூச் செறிந்து
வாலது மேல்கீழ் மண்டல மிட்டுப்
படந்தனைச் சுருக்கிப் படுத்துறங் குவது
நடந்துமேல் நோக்கி ஞானவீ(டு) அளிக்கு
மண்டல மூன்று மருவுதூண் புகவக்
குண்டலி எழுப்புங் கொள்கையீ(து) என்றான்
முன்ன(து) இரேசக முப்பத் திரண்டு
பின்னது பூரகம் பேசுமீ ரெட்டுக்
கும்பக நாலோ(டு) அறுபதாக் கூறுந்
தம்பமாத் திரையின் தன்மையும் உணர்த்தி
மூலமே முதலா முடிநடு உச்சிப்
பாலள வினாநீள் படுதுளை நோக்கி
மூலாதா ரத்தின் முச்சுழிச் சுடரை
மேலாதா ரத்தின் மெல்லெனத் தூண்டி
இருவழிக் காலும் ஒருவழி நடத்திக்
கருவழி யடைத்துக் கமலமா(று) உருவிப்
பன்னிரண்(டு) அந்தம் பரிதியு மதியு
மன்னியொன் றான வண்ணமுந் தெரிந்து

## 3. யோகத்தில் யோகம்

கமடமைந்(து) அடக்குங் கருத்தெனப் பொறியின்
மமதைகள் அடக்கி மனோலயம் ஆக்கி

மூலக் கனலால் முழுமதி உருக்கிப்
பாலைப் பருகும் பண்புதந் தருளி
இட்டகா மியமும் எண்ணெண் கலையும்
அட்டமா சித்தியும் அன்புறக் கொடுத்துப்
பன்னிரு பட்சியும் பறவா வண்ணம்
என்னுளே நிறுத்தும் இயற்கையும் விண்டான்
மூலமே முதலா மூவிரு தலத்தின்
கோலமும் பூதக் குறிகளும் அதன்பால்
ஐம்பதோ(டு) ஒன்றும் அக்கர விதமும்
பொன்பொலி கமலப் பூவிரு மூன்றுந்
தாரக எழுத்துஞ் சார்பெழுத்(து) அஞ்சும்
வாரண முகவன் மலரோன் திருமால்
வருத்தமில் உருத்திரன் மகேச்சுரன் சதாசிவன்
உருத்தெளிந் திடநம் உருவே யாகும்
ஆறுமா முகத்(து) அமர்ந்ததும் இதுவே
வேறிலை என்று மெய்ம்மொழி செப்பி
இலங்குமா யிரத்தெட்(டு) இதழ்த்தா மரைமேல்
துலங்கிடு நடனச் சோதியுங் காட்டி
இருபத் தோரா யிரத்தறு நூறாய்
மருவிநாள் தோறும் வளர்சுவா சத்தைச்
சங்கென வாங்கிச் சமனுறக் கும்பித்(து)
அங்கென்(று) எழுப்பும் அசபையும் அருளிப்

## 4. ஞானத்தில் யோகம்

பொருளருள் ஆன்மாப் பொருந்திடுந் திரோதை
மருவிரு மலமாய் வயங்குமஞ் செழுத்தில்
திரோதையு மலமுந் தீர்த்ததன் இடத்தில்
வரோதய மான வாசியை நிறுவி
வளம்பொலி சிவாய வாசியென்(று) உளத்தில்
விளம்புக நின்னை விளக்குமா னந்த
முத்தியஞ் செழுத்து மொழிந்தனம் இதனைச்
சித்தசாந் தியினிற் செப்பென மொழிந்தான்
வாசிவா என்ன வழங்குமொன்(று) எழுத்தும்
பேசுதல் முதிர்ந்த பேறென மொழிந்தான்

இன்பமாம் வாசி என்னுமீ ரெழுத்தில்
அன்புறு மகிமை அதிசயம் என்றான்
சீயெழுத்(து) ஒன்றே சிந்தையிற் கருதத்
தூயநற் சுடராய்த் தோன்றுவை என்றான்
விந்துவு நாதமு மேவிய வெளியிற்
சிந்தையை நிறுவிச் சிவன்வடி வாகித்
தாக்குவை மூல நோக்குவை அதீதம்
போக்குவை பிறவி ஆக்குவை இன்பெனத்
தராப்புகு நாப்போற் சமனுற நிற்கும்
இராப்பக லற்ற இடத்தே யிருத்தி
நலம்படர் சோதி நடணகுஞ் சிதத்தாட்
சிலம்பொலி கேட்குந் திறம்பா லித்தான்
மயற்பொறி புலன்வாய் மனம்புகு நனவில்
இயற்றிடு தவங்கள் இயமநிட் டையதாஞ்
சார்பொறி விடுத்த சாக்கிரக் கனவு
சேர்தரு கருத்தாற் செய்தவ நியம
நீங்காக் கரண நீங்கவே நனவில்
தூங்காத் தூக்கச் சுழுத்தியா சனமாம்
அறிந்துதொண் ணூறும் ஆறும்வே றாக்கிப்
பிறிந்துதற் கண்டு பிரமமே தானாய்ச்
சாதனம் விடுத்த சாக்கிர துரியம்
பேதமற் றிருக்கை பிராணா யாமஞ்
சான்றுசாக் கிரம்போய்த் தானிருந் தமையுந்
தோன்றிடா(து) உலகைச் சுழற்றுங் கால்போற்
பறந்திடுங் காலாற் பரமறந் தளவிற்
பிறந்திடும் அதீதம் பிரத்தியா காரம்
வானெனும் அகண்ட வடிவுகண்(டு) எங்குந்
தானென்(று) இருக்கை தாரணை யாகுங்
காட்சிகள் அனைத்துங் கண்ணதாய் விளங்கி
ஆட்சியின் அமைந்த(து) அதுவே தியானந்
தற்பதம் தொம்பதஞ் சார்ந்திடும் உபாதி
கற்பனை தீரக் கண்டசி பதமாஞ்
சச்சிதா னந்த சமரச நிலைதேர்ந்(து)
உற்றசிற் பதம்பெற்(று) உறங்குதல் சமாதி
மன்னிடு சாம மறையுப நிடதஞ்

சொன்னவாக் கியத்தின் தொகையிதே ஞான
யோகவெட் டங்கம் உண்மைநீ உணர்தி
ஏகசா ரூப்பியம் இதுவென மொழிந்தான்

## 3. உபதேசம்

சரியை கிரியை தருக்கமா யோகஞ்
சுருதியின் முறையே தொடங்கிய அனைத்து
நானெனும் போத நாட்டமே அன்றி
ஈனமில் உணர்வுக்(கு) இன்பங் காணேன்
என்றுநான் வினவி இறைஞ்சலு நகைத்து
நன்றென மொழிவான் ஞானம் உரைக்கிற்
பாச ஞானம் பகர்பசு ஞானம்
ஈச ஞானம் என்னமூன்(று) உளவாம்
அதுகேள் பாச மாவ(து) ஆணவ
மதிமயற் கன்ம மாயை யிரண்டுந்
தெருமரல் காட்டுங் கருமமுந் திரோதையு
மருவிடும் பஞ்ச மலங்காண் இதனை
ஆசென உணரா(து) அகமென இருக்கை
பாச ஞானப் பண்பது வாகுந்
தரும்பசு ஞானஞ் சாற்றுதுங் கேண்மின்
வரும்பவ மூட்டு மலமைந்(து) அவற்றின்
ஆணவம் ஒன்றும் அகலா மையினுற்
காணுறு விகடக் கருவிகள் தீர்ந்து
தன்னை யுணர்ந்து தானே பிரமம்
என்னக் கருதி யிருப்ப தாகும்
பதிஞா னத்தைப் பகருதும் அகங்கூர்
மதிஞா னத்தால் வரும்பவம் ஒழியா(து)
ஆகையால் அருள்புக்(கு) ஆணவம் ஒழிந்திட்(டு)
ஏகமாம் இன்பத்(து) எய்துவ தாகுந்
தத்துவ முழுதுஞ் சடமுனைக் காணாது
இத்தைநீ நடத்தற்(கு) இறைவனோ அல்லை
அறிவனும் அல்லை அறியான் அல்லை
செறியருள் காட்டத் தேர்ந்துகாண் பவனீ

யாதுசார்ந் திடினும் யானது என்னும்
போதநின்(று) உணர்வு புகன்றிடிற் சிறிதா
மறைத்திடு மூல மலத்தினுற் பாசச்
சிறைக்குளே கிடந்து தேகநான் என்று
வல்வினே புரிந்து மயங்கினே அந்தத்
தொல்வினேப் பயன்கள் சூட்டினம் இப்பால்
இருவினே யொப்பு மலபரி பாகந்
திருவருள் பதிக்கத் தேடிவந் தனம்யா(ம்)
மேவொரு மலத்து விஞ்ஞா ஞகலர்க்(கு)
ஓவறு முத்தி உணர்விளின்(று) அளிப்போம்
பெரு(கு)இரு மலங்கொள் பிரளயா கலர்க்கு
மருவுநன் மூர்த்தி வடிவுகொண்(டு) அருள்வோ
மும்மல முடைய சகலனீ மொழியின்
அம்மல நீக்கி ஆட்கொண் டருள
மானேக் காட்டி மான்பிடிப் பவர்போல்
மானுட வடிவாய் வந்தனந் தெண்ணீர்
மீனது போல விழியுற நோக்கி
ஆனதோர் கமடம் போல்அகத்(து) உன்னிப்
பறவை போலப் பரிசஞ் செய்து
திறமிகு முன்னூல் தெளிவுரை பகர்ந்து
பக்குவத்(து) அடைவே பாலித்(து) அருணீ
புக்கிட வேண்டிப் போந்ததென்(று) இசைத்தான்

## ஞானத்தில் ஞானம்

பற்பல சமயப் பகுதிசேர் நிலேயுஞ்
சொல்வகை மறப்புந் துகளற மொழிந்தான்
தெய்வஞ் சிவமே சிவனருள் சமயஞ்
சைவம் சிவத்தொடு சம்பந்தம் என்ருன்
பூதம் பழித்துப் பொறியற உணர்த்தி
வாதமாங் கரண வல்லப நீக்கிப்
பித்துறுங் கலாதிப் பிணக்கற விடுத்துச்
சுத்த தத்துவந் தூடண மாக்கி
முப்பது முப்பது முப்பதோ(டு) ஆறெனச்
செப்புங் கருவிகள் சேரா(து) அகற்றித்

துன்னிடும் அத்துவா சோதனை கண்டு
தன்னை யுணர்ந்து தனித்(து)இருள் நீக்கி
யாமாம் உலகம் அனைத்தினுஞ் சாட்சி
நாமே என்னு ஞானமுங் கடந்திட்(டு)
அண்ட பிண்டம் யாவுந் தோன்று(து)
உண்டெனும் உணர்வூ(டு) உறக்கமும் விட்டு
விசுவக் கிராசம் வீறுப சாந்தம்
அசிபதங் குறிக்கும் ஆசையுந் தீர்த்துக்
கால்புகா இடத்திற் கறங்காத் தீபமு
மேல்விசை தீர்ந்து வீழ்ந்தபம் பரமுஞ்
சித்திர வடிவுந் திரைதீர் புனலும்
ஒத்தவந் நிலைசார்ந்(து) ஒளியருள் நோக்கி
என்செய லேதும் இல்லையென்(று) எய்து
தன்செயல் நோக்கிச் சார்கென மொழிந்தான்

## 4. அநுபூதி

சும்மா இருக்கச் சொன்னதோர் வார்த்தை
அம்மா அதிசயம் ஆருடன் புகல்வேன்
கரைசேர்த்(து) அருள்வான் கருணையை நோக்கி
இரைதேர் கொக்கொத்(து) ஏசற இருந்தேன்
என்செயல் அகன்றேன் யானற ஈசன்
தன்செயல் நடக்குந் தன்மையுங் கண்டேன்
ஆத்து மிகத்தோ(டு) அடைதரு பௌதிகம்
போற்றுதெய் விகமிவை புரிவதுங் கண்டேன்
புலக்கணக் கதவு பூட்டினேன் சிந்தை
அலக்கண் தீர்ந்த அறிவையுங் கண்டேன்
பொறிபுலன் கரணம் பொருந்திடுங் கலாதி
அறிகரு விகள்போய் அடங்கிடங் கண்டேன்
தாழுமென் இழப்பில் தயங்குறு விளக்கிற்
சூழுறும் ஒளிபோல் துலங்குதல் கண்டேன்
பஞ்ச வருணப் படாம்விரித் ததுபோல்
விஞ்சுபல் சோதி விளங்கிடக் கண்டேன்
சித்திர படத்திற் சேர்பல வடிவம்

ஒத்த அநேகம் ஒளிக்குளே கண்டேன்
பஞ்சமூர்த் திகளும் பஞ்சசத் திகளும்
விஞ்சைபோல் ஒளிக்குள் வெளிப்படக் கண்டேன்
மண்நெடுங் கடம்போல் வரைமா திரங்கள்
எண்ணில் புவனமும் என்னுளே கண்டேன்
எழுவகைத் தோற்றத்(து) இயைந்தபல் லுயிரும்
வழுவறச் சோதி வானிடைக் கண்டேன்
தன்னுளே சகமுஞ் சகத்துளே யானும்
பின்னமற்(று) இருக்கும் பெற்றியுங் கண்டேன்
பளிங்கு போலப் படரொளி விந்து
விளங்குவெண் மதிபோல் வெளிப்படக் கண்டேன்
பரிதி போலப் படரொளி தோன்றி
ஒருபது நாதம் ஒலிக்கவுங் கண்டேன்
அக்கினி போலும் அனந்தமின் போலுந்
தக்கபே ரொளியாய்ச் சராசரம் அனைத்தும்
புரந்தருள் அகண்ட பூரண மாகிப்
பரந்தசெஞ் சுடரைப் பரையெனக் கண்டேன்
அருட்பரை ஒளிக்குள் அழுந்துமந் நேரம்
உருக்கமுங் கண்ணீர் ஒழுக்கமுந் திகைப்புங்
கம்பமும் புளகமுங் களிப்புடன் நகையுஞ்
சிம்புள்போல் வலியுஞ் சித்தியுங் கண்டேன்
மேலுள விஞ்சை விதிநெறி விடுத்த
பாலனுன் மத்தன் பக்குவங் கண்டேன்
ஓங்கும் பரைக்குள் உள்ளொளி யாகித்
தேங்குமா னந்தச் செழுஞ்சுடர் கண்டேன்
உள்ளொளிக்(கு) உவமை ஒன்றுங் காணேன்
விள்ளவுந் தரமோ? மீமிசை விளங்கித்
தெளிபடுஞ் சுடரைச் சிவமென்(று) உணர்ந்து
களிபடு ஞானக் கண்ணினுற் கண்டேன்
பார்த்திடும் என்னைப் பசையற விழுங்க
ஆர்த்ததில் வீழ்ந்துற்(று) ஆநந்தம் ஆனேன்
தன்னைத் தந்தான் என்னைக் கவர்ந்தான்
பின்னைப் பெறுமோர் பேற்றையுங் காணேன்
சுயம்பிர காசஞ் சொரூபா னந்தம்
இயம்புதற்(கு) அரிதாம் இன்பப் பெருக்கம்

தாடலை போலுங் காறலை போலுங்
கூடலை என்னாற் கூறவும் படுமோ
பேய்பிடி யுண்டான் பெற்றி போலச்
சாய்படு கருவிச் சங்கமு நானும்
பகலோன் வெயிலிற் பாயிருள் விண்மீன்
சகசமாய்க் கலந்த தன்மையும் பெற்றேன்
காந்தம் இரும்புங் கனல்படும் இரும்பும்
வேய்ந்தவிந் தனமும் வெந்நீர் உப்பும்
குளிகைபொன் மதுரங் கொண்டநா என்னத்
தளிவிடா தென்னைத் தடுத்தாட் கொண்டான்
விண்டேன் பிறப்பை வேதா கமத்தோர்
சண்டை தீர்ந்து சமரச மானேன்.

## 5. ஆற்றுப்படை

திருமலி செந்தூர்ச் சேவற் பெருமான்
நிருமல ஞான நிகழ்த்தியாட் கொண்ட(து)
இவ்வணந் தமியேற்(கு) இருநிலப் பரப்பின்
அவ்வவர்க்(கு) அளிக்கும் அருள்நெறி உணரேன்
ஆகையால் இந்த அருள்பெறல் வேண்டின்
ஓகையால் திருச்செந் தூரிடத்(து) ஏகிக்
குமரவேள் சரணங் குறித்துமா தவத்தீர்
நிமலமெய்ஞ் ஞான நீவிரும் பெறுவீர்
உத்தமர் ஆவீர் உண்மையீ(து) என்று
சிற்றம் பலவன் செய்யுளாற் புகன்றான்.

## 6. நூற்பயன்

கருத்துற இதனைக் கற்போர் கேட்போர்
திருத்தகும் அன்பால் தினந்தொறுந் துதிப்போர்
பெறும்பலன் இதனைப் பேசுதுங் கேண்மின்
உறும்பலன் வேண்டும் உலகத் தோரே

பாவந் தீரும் பார்மிகு தரும
மேவிளம் பிறைபோல் மேன்மேல் வளருந்
துட்டதே வதைகள் தொட்டதும் வஞ்சர்
இட்ட பில்லி இடர்களுந் தீரும்
வாதம் பித்தம் வலிபடுங் காசஞ்
சீதம் வெதுப்புத் தீரா நோய்கள்
வேதனை மிகுந்த வியாதிகள் எல்லாம்
ஆதவற் கண்ட பனிபோல் அகலுஞ்
சாகா வரமுந் தந்திடும் உடம்பிற்
போகாப் பீடை போக்கிரட் சிக்கும்
வறுமை நீங்கும் வாழ்வுண் டாகுஞ்
செறிதரும் அட்டமா சித்தியுங் கொடுக்குஞ்
சரியை கிரியை சார்ந்திடு மியோகந்
தெரிதரு ஞானமுஞ் செறிந்துவாழ் குவரே.

திருச்சிற்றம்பலம்

திருச்செந்தூர் அகவல்
முற்றிற்று

உ
சிவமயம்
திருச்சிற்றம்பலம்

சிற்றம்பல நாடிகள் அருளிய

# திருச்செந்தூர் அகவல்

என்னும்

# சுப்பிரமணியர் அகவல்

## மூலமும் உரையும்

### காப்பு

இக் காப்புச் செய்யுளிலே ஆசிரியர், திருச்செந்தூரை அடைந்து தலவாசஞ் செய்து மூர்த்தி, தலம், தீர்த்தங்களை முறையாக வணங்கினால் அறுமுகப்பெருமானாகிய உபாசனா மூர்த்தியே குருவாக வந்து சிவஞான உபதேசஞ் செய்தருளுவார் என்றும், அவனருளாலே பாடப்பெறும் பிரபந்தம் உலகம் போற்றி உய்யுமாறு நீடித்து நின்று நிலவும் என்றும், அதைப் பாடும் பணியும் இடையூறின்றி இனிது முடித்தற்கு ஏற்புடைய விநாயகப் பெருமானை முதற்கண் வணங்கவேண்டும் என்றுந் தமது கருத்தைத் தெரிவித்துள்ளார்.

நந்தூர் அலைவாயில் நண்ணியுல(கு) ஏத்தவொளிர்
செந்தூர்த் திருவகவல் செப்புவேன் — இந்தூருஞ்
செஞ்சடையான் யானைச் சிரமுடையான் அன்பிலிகள்
நெஞ்சடையான் பாத நினைந்து.

**கொண்டு கூட்டு:-** நந்தூர் அலைவாயில் நண்ணி, உலகு ஏத்த ஒளிர் திருச்செந்தூர் அகவல், இந்து ஊரும் செஞ்சடையான், அன்பிலிகள் நெஞ்சடையான் (ஆகிய) யானைச் சிரமுடையான் பாதம் நினைந்து செப்புவேன்.

**பதவுரை:-** **நந்து ஊர் அலைவாயில்** - (வலம்புரிச்) சங்கின் (ஓங்கார) நாதம் எழுந்து எங்கும் பரவுந் திருச்செந்தூரினை; **நண்ணி** - அடைந்து; (அங்கே எழுந்தருளியுள்ள அறுமுகப் பெருமானை மன மொழி மெய்களால் இடையறாது முறையாக வணங்கி அவனருளால்) **உலகு ஏத்த ஒளிர்** - மேன்மக்கள் புகழ்ந்து துதிக்கத் தகுந்ததாக (எக்காலமும் நின்று) விளங்கும்படி; **திருச்செந்தூர் அகவல்** - திருச்செந்தூர் அகவல்

என்னுந்திருநாமத்தையுடைய பிரபந்தத்தை; (இடையூறின்றி இனிது முடியும் பொருட்டு முதற்கண்) இந்து ஊரும் செஞ்சடையான் - இளம்பிறை தவழுஞ் சிவந்த திருச்சடாமுடியினையுடையவரும்; அன்பிலிகள் நெஞ்சு அடையான் - அன்பில்லாரது உள்ளத்தில் விளங்கித் தோன்றுதவரும் ஆகிய; யானைச் சிரமுடையான் - யானையின் (முகம் போலும்) சிரத்தினையுடைய விநாயகப் பெருமானது; பாதம் நினைந்து - திருவடிகளைத் தியானித்து; செப்புவேன் - பாடுவேன் என்றவாறு.

**விளக்கம்:-**

1. தூய வெண்மையான ஒளியும், பிரணவ நாதமும், ஓங்கார வடிவுங் கொண்ட சங்கைக் குறிக்கும் நந்து என்னும் மங்கலச்சொல், ஓம் எனப்படும் பிரணவ மூர்த்தியான விநாயகக் கடவுளது காப்புச் செய்யுளின் முதற்சொல்லாகக் கொள்ளப்பெற்றது.

2. இந்து - சந்திரன்; அலைவாய் - கடல்; அலைவாய்ச் செந்தூர் - கடற்கரையின்கண்ணுள்ள திருச்செந்தூர்; கங்கையின்கண் இடைச்சேரி என்றாற்போல இது விடாத இலக்கணை. உலகு - மேன்மக்கள்; ''உலகெனப்படுவது உயர்ந்தோர் மேற்றே'' என்பது தொல்காப்பியம். யானைச் சிரம் - உவமைத் தொகை.

3. நண்ணி என்பதனை வினையாகக் கொண்டு பொருள் உரைக்கப் பெற்றது. இக் கருத்தினை, ''திருச்செந்தூரிடத்து ஏகி'' (அடி 404) என நூலாசிரியர் பின்னரும் விளங்கக் கூறியுள்ளார். அன்றி, நண்ணி என்பதனை, பிறைசூடி, கரந்தும் விளையாடி, ஒடுங்கி என்பனபோல இகர ஈற்றுப் பெயராகவுங் கொள்ளலாம். அவ்வாறு பெயராகக் கொள்ளுமிடத்து நண்ணி என்பது அறுமுகக் கடவுளைக் குறிக்கும்; நண்ணியின் மீது திருச்செந்தூர் அகவல் செப்புவேன் என முடியும். நண்ணுதல் முக்கரணங்களாலும் இடையறாது வணங்குதலுமாம்.

4. சிந்தூர் என்பது செந்தூர் ஆயிற்று எனலாம்; திருச்செந்தூர்ப் புராணத்தில் சிந்தூர், சிந்துபுரம் என்னும் பெயர்கள் பரக்கக் காணப்படுகின்றன. ''சேந்து + இல் = சேந்தில்; அப்பெயர் காலப்போக்கில் செந்தில், செந்திலூர் என வழங்கப்பட்டு ஈற்றிற் செந்தூராயிற்று'' என திரு. இ. மு. சுப்பிரமணியபிள்ளை அவர்கள், திருநெல்வேலி ஜில்லா கோயில் வரலாறு என்னும் நூலிற் கூறியுள்ளார். ஆராய்ச்சியாளர் இன்னும் பலவாறுங் கூறுவர்.

5. இந்து - முற்றறிவுக்கு அறிகுறி; செஞ்சடை - எங்கும் வியாபகமான திருவருளுக்கு அறிகுறி. விநாயகப் பெருமானது திருவுரு

வத்திலே திருக்கழுத்தின் மேலுள்ள சிரசு, யானைமுகம் போன்றுள்ளது. ''பிரசந்நோ மத்த வாரண'' என்பது நிகண்டு. யானை முகம் பிரணவ சொரூபம். ஓங்காரத்தின் வரிவடிவில் அமைந்துள்ளனவாகக் காமிக ஆகமத்தில் வரையறுத்துக் கூறப்பெற்றன வாகிய நட்சத்திர வடிவம், தண்டவடிவம், குண்டல வடிவம், பாதிச்சந்திர வடிவம், விந்து வடிவம் என்னும் ஐந்தும் விநாயகப் பெருமானது யானை முகத்தில் அமைந்துள்ளன. அன்றியும், விந்து சுழி; நாதம் கீறு. சுழியும் கீறுஞ் சேர்ந்தமைந்த பிள்ளையார் சுழி யானது (மூலசமட்டிப் பிரணவம்) யானையின் துதிக்கை போலத் தோன்றும். சிரசு நிவிர்த்தி மார்க்கத்தாருக்கு ஞானத்தை நல்குவது.

. இந்து ஊருஞ் செஞ்சடையான், யானைச் சிரமுடையான், அன்பிலிகள் நெஞ்சடையான் எனப் பிரணவசொரூபியான விநாயகப் பெருமானைத் துதிக்கும் பகுதிகள் மூன்றும் ஞானசக்தி, கிரியா சக்தி, இச்சாசக்திகளையுங் குறிப்பனவாம்.

. திருவருட் சத்தியைப் பரம்பொருளின் திருவடியாகக் கூறுதல் சைவ பரிபாஷை. (பரிபாஷை-குறியீடு)

''காலுந் தலையும் அறியார் கலதிகள்
காலந் தச்சத் தியருள் என்பர்''

— திருமந்திரம்

பரமபதியின் ஞானசத்தியுங் கிரியா சத்தியுமாகிய பாதம் நினைந்து என்பதாற், பதியின் ஞானங் கிரியைகளினுள்ளே ஆன்மாவின் அறிவுஞ் செயலும் அடங்கி, அவனருள் மயமாய் நின்றநிலை உணர்த்தப் பெற்றது. பாதம் பிரவிருத்தி மார்க்கத்தாருக்கு விக்கினங்களை நீக்கியருளுவது.

**ஒப்புமைப்பகுதி:-**

i. ''உலகம் புகழ்ந்த ஓங்குயர் விழுச்சீரலைவாய்'' -
திருமுருகாற்றுப்படை

ii. ''திருமணி விளக்கின் அலைவாய்'' - அகநானூறு

iii. ''நந்தூர்க் கடற்றுறைச் செந்தூர்'' -
திருச்செந்திற் கலம்பகம்

iv. ''வளைபயில் கீழ்கடல்'' - திருக்கோவையார் - 6

உ

# நூல் (அகவல்)

# 1. உபாசனை

### சற்குரு வணக்கம்

விநாயகமூர்த்தி விக்கினங்களை நீக்குபவர்; முருகமூர்த்தி ஞானதேசிகர் என்பது யாவரும் அறிந்த உண்மை. ஞானசற்குருவைச் சரணடைதலால் முத்தியடைவதற்குச் சாதனமான ஞானத்தைப் பெறலாம் என்ற கருத்தை ஆசிரியர் முதற்கண் ஆறு அடிகளிலே அறியத்தருகின்றார். பர, சூக்கும, தூல உருவங்களை முறையே அகத்தால் வழிபடும் சிவஞானியர், சிவயோகியர், சிவகிரியையாளர்களுக்கு உபதேசித்தவாற்றை, பக்குவ நோக்கி மூவகைப்படுத்தி, முதலிலே உத்தம அதிகாரிகளான சிவஞானியர்க்கு உபதேசித்தவாற்றை உணர்த்துகின்றார்.

ஓமெனுந் தாரக ஒண்பொருள் சிவனுக்(கு)
ஆமென மொழிந்தே அருட்குரு வானோன்

**பொழிப்புரை:-** (சீகண்ட பரமசிவன் திருவிளையாட்டாக) ஓமென்று ஒலிக்கப்பெறும் (பரநாத மாத்திரையாகிய) பிரணவ மந்திரத்தின் (உண்மையான) ஞானப்பொருளினை (நீ அறிவாயோ என்று கேட்டருள ஆம் என்னுஞ் சிவபீசமே (அதன் ஞானப்பொருளாகும்) என்று உபதேசக் கிரமத்தில் (அதைத் தீட்சா மந்திரமாக அவருக்கு) விதிப்படி உபதேசித்துச் சிவகுருநாதன் என்னும் பரமாசாரியர் ஆனவர் என்றவாறு.

**விளக்கம்:-** 1 இது சிவம் வேறு, நான் வேறு என்னும் பேத உணர்வு சிறிதுமின்றிச் சகல சராசரங்களையுஞ் சிவரூபமாகப் பார்க்கும் உத்தம அதிகாரியாகிய சிவசாரூபம் பெற்ற சுத்த சத்துவகுண சீகண்ட பரமசிவனுக்கு உபதேசிக்கப் பெற்றது.

2. **ஓம் எனுந்தாரகம்:-** ஓங்காரம் எனப்படும் குடிலை; வேதங்களின் முதற்சொல். ''மறை எவற்றிற்கும் ஆதியில் நவில்வான் நின்றதோர் தனிமொழி'' என்ற கச்சியப்பர், ''மாசில் தாரகப் பிரமம்'' என அதை விளக்கியுள்ளார். தாரம், தாரகம், தாரகப் பிரமம் என்பன ஒரு பொருட் சொற்கள். ஓங்காரமே ஏனைய மந்திரங்களுக்கு மூலமாகவும், பிறவிப் பெருங்கடலைத் தாண்டுவதற்கு ஆதாரமாகவும் உள்ளது.

''உச்சரித்த மாத்திரத்திற் கருப்பம், பிறப்பு, உடற்சோர்வு, இறப்பு ஆகிய சமுசார மகாபயத்தினின்றுந் தாண்டும்படி செய்வான்; அதனாலே தாரம் எனப்படுவான்'' என அதர்வணவேத அதர்வ சிரோப நிடதங் கூறுகின்றது. இதனைத் தாரக எழுத்து (அடி 201) என்றும் நூலாசிரியர் வழங்குகின்றார். தைத்திரீய முதலிய சங்கிதைகள் சிவ பெருமானைத் தாரகன் என்று கூறுகின்றன. சிவயோகசுவாமிகள் சிவ தொண்டன் இதழுக்கு ஓம் எனுந் தாரக ஒண்முடியே சூட்டியருளினார்.

3. **சிவதாதான்மிய** (பிரிக்க முடியாத) சம்பந்த மிகுதிபற்றித் தாரகம் என்ற பெயர் பிரணவத்திற்கு அமைவதாயிற்று. ஓங்காரம், தாரகம், பிரணவம், சர்வவியாபி, அனந்தன், சூக்குமம், சுக்கிலம், வைத்யுதம், பரப்பிரமம் ஆகிய ஒன்பது பெயர்களுஞ் சிவவாசகங்களாகும். (இதன் விரிவை ஓங்கார விளக்கம் என்னும் நூலிற் பார்க்க.)

4. **ஒண்பொருள்:-** ஞானப்பொருள்; ஒண்மை-ஞானம். ''ஒண்புதல்வா'' (உண்மை விளக்கம் 7) என ஞானப்புதல்வனை அழைத்தபடி காண்க. சைவசமய நுண்ணிய பொருள்களை அவரவர் பக்குவ நிலைக்கேற்ப, புராணார்த்தமாகவும், தத்துவார்த்தமாகவும், ஞானார்த்தமாகவும் விளக்குவர். ஈண்டு ஒண்பொருள் என்றது ஞானார்த்தத்தை. மேல் ''நற் பொருள்'' (அடி 4) என்பதும் இந்த ஞானார்த்தத்தையே. ''தந்தைக்கு முன்னந் தனிஞான வாளொன்று சாதித்தருள், கந்தச்சுவாமி'' (கந். அலங். 69) என்றார் அருணகிரிநாதர்.

5. **சிவனுக்கு -** சீகண்ட பரமசிவனுக்கு. இவர் அணுபட்சத்தவர்; பிரளயாகலருள்ளே பக்குவர்; அதிசூக்கும ஞானங் கைவரப் பெற்றவராயினும் அதிகார மலமுள்ளவர். இவரது திருமேனி மாயா கனம். சித்துப் பிரபஞ்சம், சடப்பிரபஞ்சம் யாவுஞ் சிவபெருமானது திருமேனியாதலின் அவற்றையெல்லாம் பிரமம் என்று வேதம் கூறிற்று. அவற்றுள்ளும் மும்மூர்த்திகள் சிறந்தவராதலின், அவர்களை வேறு பிரித்துத் தனித்தனி பிரமங்கள் என அவ்வேதம் புகழ்ந்தது. அம் மூவருள்ளும் உருத்திரமூர்த்தியே அதிசிறப்பு வாய்ந்தவராதலின் பிரமத்தின் அபேதமாக அவரைப் பாவித்து, அப்பிரமத்திற்குரிய காரண இடுகுறிப் பெயர்களையிட்டு அவ்வேதந் துதித்தது. சிவசாரூப்பியம் எய்திய குணருத்திரரான இச் சீகண்ட பரமசிவனே சைவர்களுள்ளே சமயதீட்சை பெற்றவர்களாலும், மற்றவர்களாலும் வழிபடப்படுந் தெய்வம். புராணங்களிலே எடுத்துப் பேசப்படும் பரமசிவனும் இவரே.

6. **ஆமென மொழிந்தே:-** i ''ஓமென உரைக்குஞ் சொல்லின் உறுபொருள் உனக்குப்போமோ, போமெனில் அதனை இன்னே புகல்'' (கந்தபுராணம்) எனக்கேட்ட சீகண்ட பரமசிவனுக்கு ஆம் எனுஞ் சிவபீசமே

அதன் அதிசூக்குமமான ஞானர்த்தமென்பதைத் தீட்சை விதிப்படி உபதேசித்தருளினர். இவ்வரலாற்றில், ''நாதா குமரா நமவென்றரனர் ஓதாயென''க் கேட்டதைக் கந்தர் அநுபூதியிலும், ''கொன்றைச் சடையார்க்கு ஒன்றைத் தெரியக் கொஞ்சித் தமிழாற் பகர்வோனே'' என உபதேசஞ் செய்ததைத் திருப்புகழிலும் அருணகிரிநாதர் எடுத்துப் புகழ்ந்து பாடியுள்ளார்.

ii ஒலிப்பதிவுச் சாதனத்தில் ஒரு கருவியாற் பதிக்கப்பட்டிருக்கும் பொருள்குறிக்கும் ஒலி வரைகளே, வேறு ஒரு கருவியால் மாற்றி ஒலிக்கச் செய்தால், அவ்வொலி அந்தப் பொருளேயே புலப்படுத்தும். அதேபோல ஓங்கார சிவத்தின் முதலசைவும் நாதமும், ஆம் என்னுஞ் சிவபீசமாகிப் பின்னர் சொல்லுலகும் பொருளுலகுமாக விரிவடையும்; அவ்வாறு விரிவடைந்து தோன்றிய உலக உருவாகவும், உலகின் உள்ளும் புறமும் வியாபகமாகவும், உலகிற்கு அதீதமாகவும், உலகத்தால் வழிபடப்படுவதாகவும் இருப்பது அந்த ஓங்கார சிவமேயாம். ஓம் என்பது சூத்திரமானல், ஆம் என்பது பாடியமாகும். இதனலேயே ஓம் எனும் பிரணவத்தின் ஞானப்பொருள் ஆமென மொழிந்தருளினர். ஆம் என்னுஞ் சிவபீசாட்சரமே ஓங்கார சிவஞானப் பொருளாகவும், ஒப்பற்ற மந்திரமாகவும், சிறந்த சிவநாமமாகவும், சிவரூபமாகவும், சிவசாந்நித்தியத்தைக் கொடுப்பதாகவும் உள்ளது.

iii வடமொழியில் 33-ஆம் மெய்யாகிய ஹகாரம் 2-ஆம் உயிரோடு கூடி அநுச்சுவாரம் பெற்று ஹா0 என்னுஞ் சிவபீசமாயிற்று. ஹ் + ஆ + ○ = ஹா○; ஹா○ எனுஞ் சிவபீசம் ஹகாரம் முதலிற் கெட்டு, உயிரின் பின் நிற்கும் அநுச்சுவாரம் மகரமாகி ஆம் எனத் தமிழ் மொழியில் வருதல் மரபு.

> ''ஓமென் றுதித்த ஓங்காரத் துள்ளே
> ஆமென் றெழுந்த அட்சர வடிவு'' என்றதுங் கருதுக.

7. அருட்குருவானேன்:- அருட்குரு, அறிவுக்கறிவாய் நின்று அறிவிக்கும் அவசர முகூர்த்தம்; இவர் அருளிறை, அருட்கோமான் (அடி 18) எனவும் படுவர். சொல்லாலே சொல்ல முடியாத ஓங்காரத்தின் நுண்ணிய ஞானப் பொருளேச் சற்குருவின் அருள் ஒன்றினலேயே மோனத்தோடிருந்து கிரகிக்க வேண்டும். ''ஓங்காரத்தின் உட்பொருளே ஐயன் எனக் கருளியவாறு ஆர்பெறுவார் அச்சோவே'' என்ற மணிவாசகர் திருவாக்கே இதற்குப் போதிய சான்ருகும். அருள்நிலே எனப்பட்ட ஞானசாரியனுகிய சிவனுக்கே ஞான நுண்பொருளே அருளிச் செய்த ஞானபண்டிதன்; சிவசங்கர தேசிகன்; சுவாமிநாதன். சிவகுருவாகி அருட்குருமரபினே விளக்கியருளிய

உயர்நலங்குறித்தே ஐம்முகச் சிவனைச், சதாசிவோம் என ஒருமுறை மாத்திரந் துதித்த சாமவேதம், சுப்பிரமண்யோம், சுப்பிரமண் யோம், சுப்பிரமண்யோம் என அறுமுகச் சிவனை மும்முறை துதித்தது.

8. அறுமுகச் சிவனுக்கு யானையும், மயிலும் வாகனங்கள், இவை இரண்டுமே பிணிமுகம் என்ற ஒரு பெயரால் அழைக்கப்படுவன. இவையிரண்டும் பிரணவத்தைக் குறிப்பன. அறுமுகப்பெருமான் மயிலில் ஆரோகணிக்குங்கால், மயிலின் தோகையினுள்ளே அடங்கி நடுவே இருந்தருளுவார். மயிலாகிய பிரணவத்தின் மத்தியிலிருந்து, அப்பிரணவத்தின் உட்பொருள் தானே என்பதை விளக்கியருளு வார். ''ஓங்காரத்துள்ளொளிக்குள்ளே முருகன் உருவங் கண்டு'' என்றார் அருணகிரியார். யானைமீது ஆரோகணிக்கும்பொழுது, அதன் மேலே இருந்தருளுவார். பிரணவத்தின் உச்சியிலிருந்து, அதை நடத்துபவர் தாமே என்பதை அதனாலே தெரிவித்தருளுவார். பிர ணவத்துட் பொருளாகவும், பிரணவ அதீதனாகவும் உள்ளவர் ஆதலினாலன்றோ முருகப்பெருமான், அருட்குருவாகி முக்கட்பெரு மானுக்குச் சுருதியின் முற்பட்ட ஓங்கார ஞானநுண்பொருளை உபதேசித்தருளினார். அவ்வுபதேச சந்தான மரபில் வந்த தாரகப் பிரணவமே இன்றும் ஈழத்தமிழ் நாட்டில் ஓம் என்றும், தென் தமிழ்நாட்டில் ஆம் என்றும் வழக்கிலிருந்து வருகின்றது. சிவ யோக சுவாமிகள், ''ஓம் ஆம் நாமென்று சொல்லி – தங்கமே. உருவேற்றி நின்றிடெடி'' என்று பாடியுள்ளதுங்காண்க.

9. உத்தமர், மத்திமர், அதமர் என்பார்க்கு அவரவர் பக்குவத்திற் கேற்ப வெவ்வேறு விதமாக உபதேசம் நிகழினும் அவையாவும் குரு உபதேசம் என்றே கூறப்படும். பிரளயாகலரிற் பக்குவரான ஸ்ரீகண்ட பரமசிவன் ஞானம் பெற்றவர். அறிவே வடிவான சூக் குமை வாக்கால் உணர்பவர். ஆதலால் அருட்குரு உணர்வில் நின்று உணர்த்தியருளினாரென்க.

இருவினை ஒப்பு மலபரிபாகமுடையவரும், யோகத் திறைற்கைவந்த சூக்கும புரியட்டக சம்பந்தத்தாற் பிரகாசிப்பவருமான மத்திய அதிகாரிகள் ஞான யோகியர், அவர்களுக்கு ஞான உபதேசம் அருளிய முறையைக் கூறுகின்றார்.

3. பொற்புறு பொதிய வெற்புறு முனிக்கு
நற்பொருள் விளக்கு ஞான தேசிகன்

பொ—ரை:- ஞானப் பொலிவு மிகுந்த பொதியமலை வாசரான அகத் திய மகா முனிவருக்கு ஞானநுண் பொருளை உபதேசக் கிரமத்தில் உணர்த்தியருளிய ஞானசற்குரு எ—று

**விளக்கம்:-** 1. பொற்புறு பொதிய வெற்பு: — உயர்ந்த ஞானிகள் எக்காலமுந் தங்கியிருந்து தவஞ் செய்யுமிடமாதலாற் பொதியமலைச் சாரல் என்றுந் நடுக்கின்றித் தவஞான ஒளி மிகுந்து விளங்கும்.

2. பொதிய வெற்புறு முனி — அகத்தியமாமுனிவர். ''ஆதித்தனுக்குச் சமமான மிகுந்த ஒளியையுடைய முனிசிரேட்டனான அகத்தியன், தன்மேனி வாடக் கடுந்தவம் புரிந்து பெற்றபேரொளி தோன்ற அங்கு வசித்தான்'' என்று வான்மீகி முனிவரும் வருணித்துள்ளார். வான்மீகி இராமாயண ஆரணிய காண்டத்தில் இலக்குமணன் அகத்திய முனிவரது தவச்சாலையிற் பல தெய்வத் தானங்களுடன் சுப்பிரமணியர் தானத்தையும் பார்த்தான் என்று கூறப்படுவதால் அகத்தியர் சுப்பிரமணியரை உபாசித்தமை தெளிவாகின்றது.

3. முனி:- முன்+இ; முன்பகுதி, இகரம் வினைமுதற் பொருளுணர்த்தும் விகுதி. முன்னம் என்னும் அம்மீற்றுத் தொழிற்பெயர் விகுதி குன்றிமுன் என முதனிலைத் தொழிற் பெயராய் நின்றது. முன்னம் என்பது நினைப்பு, சிந்தனை எனப் பொருள்படும். பரம்பொருளை முன்னுபவர் — சிந்திப்பவர் எவரோ அவர் முனிவர் எனப்படுவர். ''மோனந்தீர்கலா முனிவர்'' என்பது கந்தபுராணம். புற ஆசைகளை முனிந்து மௌனியாகி, அகமுகமாக மெய்ப்பொருளைத் தியானத்துடன் சிந்திப்பவர் அகத்திய முனிவர். அப்பெயர் யோக ருடியாய்ப் பொதியமலை முனிவர்க்காயிற்று. உலக நலங்கருதிச் செய்யப்படுவது அகத்தவயோகம்: உடம்பின் உள்ளத்தேயிருக்கும் அகத்தீயை வளர்க்குந் தவத்தைச் செய்வோர் அகத்தீயர். அஃது அகத்தியர்என மருவி வழங்கிவருகின்றது. புறத்தே தீ வளர்த்துச் செய்யுந்தவந் தன்னலம் பற்றியது.

4. **முனிக்கு நற்பொருள்விளக்கு ஞானதேசிகன்:-** நற்பொருள் என்றது ஓங்கார மந்திரத்தின் ஞானுர்த்தத்தை. நன்மை – ஞானம்; அகத்தியனுர்க்கு ஓங்காரப் பொருள் உபதேசித்தருளியதைக் கச்சியப்பர் கந்தபுராணத்தில், ''மாசறு மறைகளின் மறையதனை மலைமுனி யுணர்வகை அருள்புரியுந் தேசிக முதல்வன்'' (சூ. வ. ப. 87) என விளக்கமாகக் கூறியுள்ளார். அவர் ஓமெனுந் தாரகத்தை மறைகளின் மறை எனச் சுட்டிக் கூறினர். அன்றியும் உமாபதி சிவம் சிவப்பிரகாசத்தில், ''அகத்தியனுக் கோத்துரைக்கும் அண்ணல்'' எனவும், அருணந்திசிவம் சிவஞானசித்தியாரில், ''அகத்தியனுர்க் கோத்துரைக்கும் அருட்குருவாங் குருவை'' எனவும் முருகன் அகத்தியனுக்கு அருட்குருவாகி உபதேசித்தமையை எடுத்துக் கூறித்துதித்துள்ளனர். முருகன் ஆசானுகி அகத்தியனுக்குக் கலை ஞானத்தை உணர்த்தி இருப்பினும், ஈண்டு நூலாசிரியராற் சுட்

டப்பட்ட நற்பொருள் ஓமெனுந்தாரக ஒண்பொருளேயாம். அகத்தியரின் ஞானபக்குவநிலைக்கேற்ப அதனை உணர்த்தியருளினுர்.

5. **ஞானதேசிகன்:-** சிவஞானத்தின் திருவுருவாய்ப் பிரகாசிப்பவனுன ஞானசற்குரு. ''ஞானந்தானுருவாகிய நாயகன்'' என்பர் கச்சியப்பர். முருகப்பெருமான், சிவனுர்க்கும், அகத்தியனுர்க்கும், அருணகிரியார்க்கும்ஞானேபதேசஞ்செய்த ஞானசற்குரு. அகத்தியான யோகப் பயிற்சியுடையவர், சித்தத்தில் நினைவுமாத்திரமாக நிற்கும் பைசந்தி வாக்கால் உலகையறிவர். ஞானதேசிகர் நற்பொருளை முன்னிலையில் மௌனத்தோடிருந்து உணர்த்த அகத்தியர் யோகப் பயிற்சியால் விளங்கிக்கொண்டார்.

சிவோஹம் பாவனையின்றிச் சிவம்வேறு; தாம்வேறு என்னும் பேத உணர்வுள்ள கிரியையில் விருப்பம்மிக்க அதம அதிகாரிகளுக்கு அருளிய முறைமை கூறுகின்றுர்.

## 5. பொய்வழிச் சமணப் புலையிருள் நீக்கிச்
## சைவம் வளர்க்குஞ் சம்பந்த மூர்த்தி

**பொ-ரை:-** பொய்நெறியிலே செலுத்துஞ் சமணசமயமாகிய இழிந்த இருளினையகற்றி மெய்ந்நெறி காட்டுஞ் சைவசமயமாகிய (உயர்வற வுயர்ந்த ஒளி) நெறியினை வளர்த்தருளிய ஞானபானுவாகிய) திருஞானசம்பந்தமூர்த்திநாயனுர் (என்னுஞ் சைவசமய பரமாசாரியர்) எ-று.

**விளக்கம்:-** 1. பொய்வழி - வீடுபேறு அடைவிக்காத வழி; புலையிருள் - இழிந்த இருள். புறஉலகப் பொருள்களை மறைக்கும் பூத இருளிலும் பார்க்க, அகத்தே உயிரறிவை மறைக்குஞ் சமணசமயமாகிய புலையிருள் மிகக்கொடியது; இழிந்தது. சமணசமயம் புலையிருளெனப் பட்டமையால், சைவசமயம் உயர்ந்த ஒளிநெறியென்பது தானே பெறப்படும்.

2. பரசமய நிராகரிப்பும், சைவசமய ஆக்கமுமாகிய இவ்விரண்டுமே திருஞானசம்பந்தர் அவதார உள்ளுறைகளாகும்.

3. (திருஞான)சம்பந்தமூர்த்தி:- திருவருளே நேரே மானுடச்சட்டை சாத்திச் சமய குரவராக வந்து, சிவதரும புத்திரராய் வாழ்ந்து, சிவனடியாரை கிரியை நெறிபற்றி அருள்நெறிப்படுத்தியவர். பரசுப்பிரமணியரின் சாரூபம்பெற்ற அபரசுப்பிரமணியரே ஞானசம்பந்தராய் அவதரித்தார் என்பர். உண்மை இவ்வாறிருக்கவும். உபசாரமாகச் சம்பந்தரை பரசுப்பிரமணியரின் அவதாரம் எனப்பாடுவர். ''ஈனமிகுந்துள பிறவியணுகாதே, ஆன திருப்பதிகம் அருள் இளையோனே'' என அருணகிரியார் பாடியதும் உபசாரமே.

# உபாசனு மூர்த்தி வணக்கம்

நாமதேய ரூபபேதங் கற்பித்துச் சிவசரியையாளர் வணங்கும் முறைமை கூறப்படுகின்றது.

(முன்னமவனுடைய) நாம வணக்கம்

7. முருகன் குமரன் மூவிரு முகன்மால்
மருகன் சிவனருள் மைந்தன் கந்தன்
மலைமகள் பாலன் வயங்கிளர் வேலன்
கலைபயில் புலவன் கார்த்தி கேயன்
வளையொரு மருப்பு வாரண முகவற்(கு)
இளையவன். குகன்மயி லேறும் பெருமாள்
சூரசங் காரன் சுப்பிர மணியன்
வீரருள் வீரன் விரைகமழ் கடம்பன்
சேந்தன் வள்ளி தெய்வ யானை
காந்தன் செவ்வேள் காங்கேயன் சிலம்பன்
ஆயிர நாமத்(து) ஐயன் துய்யன்
சேயருட் கோமான் சேவல் துவசன்

இதன் பொருள் வெளிப்படை.

**விளக்கம்:-**

1. ஆறு தொடையமைந்த பன்னிரண்டு அடிகளில் இருபத்தேழு நாமங்களைக் கூறி வணங்குகின்றார். இந்த நாமங்களை நான்கு முறை செபித்தால் நூற்றெட்டு நாமஜெபமாகும். திருமுருகாற்றுப்படையிலும் பழமுதிர் சோலையில் இருபத்தேழு நாமங்களே காணப்படுகின்றன. இம்மையிற் பாக்கியத்தையும், மறுமையில் முத்தியையுந் திருநாம செபத்தாற் பெறலாம்.

2. வாழ்வுக்குரிய கருப்பொருளாகிய தெய்வம் உறவு முறையும், சமுதாயப்பண்பும், செயற்கருஞ் செயலுமுடையதாக விளங்குகின்றது.

3. முருகன்:- முருகு, கடவுளிற் காணப்படும் சத்து சித்து ஆனந்த இலக்கணங்களைக் குறிக்கும் பண்புப்பெயர். அஃது ஆகுபெயராய் இறை இலக்கணம் அனைத்தும் அமையப்பெற்ற முருகனை உணர்த்திற்று. முருகு என்பது தெய்வத்தன்மை, அழியா அழகு, மாரு இளமை, தெவிட்டாத இனிமை, இயற்கை மணம், அருள், எழுச்சி,

தேன் என்னும் பலபொருள்தரும் ஒருசொல். எனவே முருகன் தெய்வத்தன்மையுடையவன், இளமையுடையவன் .. என்றவாறும். "மணங்கமழ் தெய்வத்து இளநலம்" என்றார் நக்கீரர். "அரும் பெறல் மரபிற் பெரும்பெயர் முருக" என்பது திருமுருகாற்றுப் படை.

4. **குமரன்:-** i. அழிவில்லாத இளமையுடையவன், என்றும் இளையோனாய் விளங்குபவன். குமாரன் என்பது குமரன் எனக் குறுகி வரும்.

ii கு - பாசம், அருவருப்பு. மாரன் - அழிப்பவன். அடியவரது அருவருப்புக்குரிய மலபந்தங்களையும், அஞ்ஞானத்தையும் அழிப்பவன்.

iii கு - இகழ்ச்சி, மாரன் - மன்மதன். தன் அழகால் மன்மதனை இகழ்ந்தவன்.

iv கு - உலகம். மா - திருமகள். ர - தருபவன். உலகிற் செல்வம் பலவுந் தருபவர்.

5. **ஈரிரு முகன்** - அறுமுகப்பெருமான் (திருச்செந்தூர்த் திருக்கோவிலிலே தெற்கு நோக்கி வீற்றிருந்தவாறு காட்சி தருபவன்.)

6. **கந்தன்:** i. கந்தசுவாமி; பகைவர்களுடைய பராக்கிரமத்தைக் காய்ந்து வற்றச் செய்பவன். ii. ஆன்மாக்களுக்குப் பற்றுக்கோடாக உள்ளவன். iii. சேர்க்கப்பட்ட திருக்கோலத்தையுடையவன்.
"சேயவன் வடிவம் ஆறுந் திரட்டிநீ ஒன்றாய்ச் செய்தாய்
ஆயத னாலே கந்த னாமெனுந் நாமம் பெற்றான்" என்பர் கச்சியப்பர். "ஆறமர் செல்வ" என்பர் நக்கீரர். இவையுஞ் சேர்க்கப்பட்டவன் என்ற பொருளைத் தருகின்றன. iv. தோள்வலியுடையவன். அறுமுகப்பெருமானது நாமங்களிற் சிறந்த கந்தன் என்னும் நாமம் ஆறுவதாகக் கூறப்பட்டுள்ளமை கருதுதற்குரியது. கண்ணனும் "நான் சேனைத்தலைவருக்குட் கந்தனாக இருக்கின்றேன்" என்றார்.

7. **மலைமகள் பாலன்**- ஞானசொரூபன் என்னுந் தத்துவத்தைக் குறிக்கும் நாமம். (சிவனுடைய ஞானசக்தியைக் குறித்த நாமம் சிவனருள் மைந்தன் என்பது.)

8. **வயங்கிளர் வேலன்**- வெற்றிவிளங்கும் வேற்படையையுடையவன்.

9. **கலைபயில் புலவன்** — வேதங்களிலுள்ள கலைஞானம் அனைத்தையும் உணர்த்துஞ் ஞானபண்டிதன். "எஞ்சிய பொருள்களை ஏமுற நாடித் திங்கள் போலத் திசை விளக்கும்மே" என்பது முருகு.

10. கார்த்திகேயன்:- கார்த்திகையின் புத்திரன்: என்றது அகச்சமயம் ஆறினுலும் போற்றப்படுபவன் என்ற குறிப்பைக் காட்டுவது. கார்த்திகேயன், காங்கேயன் என்பவற்றிலுள்ள ஏய தத்திதவிகுதி.

11. குகன்-i எல்லா உயிர்களின் இதயகுகைகளின் கண்ணும் உறைந்தருளும் அந்தரியாமி ஆகிய ஞானச்செல்வன். குகையாவது தகராகாசம். தகரமாகிய இதயதாமரையில் சிதாகாசமாகிய வித்தை இருத்தலின் அது தகரவித்தை எனப்படும். யசுர்வேத பிருகதாரணியக உபநிடதத்தில் தகரவித்தை காணப்படுகின்றது. ii பாசஞான பசுஞானங்களால் அறிதற்கரிய இரகசியமானவன். குகன் என்னும் மகா மந்திரம் முருகன் ஒருவனுக்கேயுரியது என்பதைக் குறிக்கப் பன்னிரண்டாவது நாமமாகக் கூறப்பட்டுள்ளது.

12. மயிலேறும் பெருமாள்:- மயில் பிரணவம்; பிரணவத்தில் எழுந்தருளியிருக்கும் பெருமான் என்பது பொருள். பெருமான் என்பது திரிந்து பெருமாள் என வந்தது. பெருமையையுடையவர் என்பது அதன் பொருள். விசாகப் பெருமாள் என்பதும் இத்தகையதே.

13. சூரசங்காரன்:- ஆணவமலத்தை அழிப்பவன். சூரனது தூல உடலான ஆணவத்தை அழித்து, ஆணவம் நீங்கிய அவன் உயிரைச் சேர்த்துக் கொண்டவர். சூரனது தூலஉடல் ஆணவத்தைக் குறிக்கும். சூரன் - சமர்த்தன். சூரசங்காரன் - பற்றை அறுப்பவன் என்பது தத்துவம்.

14. சுப்பிரமணியன்:- i சு + பிரம்ம + ந்யம் = சுப்பிரமணியம். சுயம் பிரகாசத்திலிருந்து தோன்றி அதனின் வேறல்லதாய் விளங்குவது; சுயம்பிரமமானது. ii வேதமந்திர வடிவானவன்; பிரணவ சொரூபியாகவும், பிரணவாதி வேதமெய்ப் பொருளாகிய அநுபூதி ஞானத்தைத் தரவல்லவராகவும், அந்த ஞானத்தால் உணரப்படும் ஞேயமாகிய பரப்பிரமமாகவும் உள்ளவர்.

15, வீரருள் வீரன்:- i படை வீரருக்குள்ளே சிறந்த படை வீரன். இதனுலேயே முருகன் எழுந்தருளி விளங்குந் தலங்களும் படை வீடுகள் எனப்பெற்றன. ii வீ — ஞானம்; ரம்—சம்பந்தம். ஞானியருக்குட் சிறந்த ஞானதேசிகனுக விளங்குபவன்.

16. கடம்பன்:- செங்கடம்பு முருகனுக்குரிய அடையாளமாலை; ஆதலின் கடம்பன் என்பது காரணப்பெயர். கடம்பு கருணையைக் குறிப்பது; அது திருவருள்.

17. சேந்தன்:- திருச்செந்தூரைப் படைவீடாக உடையவன். செந்திறமுடையவன் என்றுமாம்.

18. **வள்ளி தெய்வயானை காந்தன்:-** காந்தன் - தலைவன். பத்தி நெறி, ஆகம நெறிகளிலே பக்குவமெய்திய ஆன்மாக்களுக்குத் தலைவன். இச்சா சத்தி, கிரியா சத்திகளையுடையவன்.

19. செவ்வேள்:- செவ்வனே வேட்கப்படுபவன்; வேள் — விரும்பப் படுவோன். கருவேளாகிய மனமதனை விலக்குவதற்குச் செம்மை என்ற அடைமொழி புணர்த்திக் கூறப்பட்டது காண்க.

20. காங்கேயன்:- கங்காநதி புத்திரன்.

21. சிலம்பன்:- சிலம்பு – மலை; குறிஞ்சிநிலத் தெய்வம்; குன்று தொறுடுபவன்.

22. ஆயிரநாமம்:- அநேகம் பெயர். பல நாமங்கள் செபித்தலை ''பேராயிரம் பரவி'', ''ஆயிரம் பேர் அம்மானை'', ''எண்ணுயிரங் கோடி பேரார் போலும்'' என்னுந் தேவாரங்களிலுங் காண்க. ''முருகன் குமரன் குகன் என்று மொழிந்து உருகுஞ் செயல்தந்து உணர்வென் றருள்வாய்'' என்ற கந்தர் அநுபூதியால், நாமசெபம் பத்தியையும் (அதனுல்) அநுபவஞானத்தையுந் தரும் என்பது பெறப்படுகின்றது.

23. துய்யன்:- தூய்மையுடையவன்; நிருமலன்.

24. சேய்:- செந்நிறமுடையவன்; என்றும் இளையவன்.

25. சேவல் துவசன் – சேவற்கோழியை எழுதி உயர்த்திய வெற்றிக் கொடியையுடையவன். சேவல் நாததத்துவத்தைக் குறிக்கும். சேவல் முருகனது பரிக்கிரக சத்தி என்பாருமுளர். சூரரமகளிர், ''கோழி ஓங்கிய வென்றடு விறற்கொடி வாழிய பெரிது என்று ஏத்தி'' ஆடுதலைத் திருமுருகாற்றுப்படையிற் காணலாம். ஊர்தி எதுவோ அதுவே கொடி என்ற மரபுபற்றிச் சேவல் என்பது மயிலையும் உணர்த்தியதாகக் கொள்ளலாம். ''பல்பொறி மஞ்ஞை வெல்கொடி அகவ'' எனத் திருச்செந்தூர்ப்படை வீட்டில் முருகன் எழுந்தருளுவதை நக்கீரர் வருணிக்கின்றுர். அன்றியும், ''மயூர துவசரத சகிதம்'' எனப் பாம்பன் சுவாமிகளும், ''நினது திருவடி சத்தி மயிற்கொடி நினைவும்'' என அருணகிரிநாதரும் பாடித் துதிக்கின்றனர். ஆண்டலைக்கொடியும் முருகனுக்கு உண்டென் பதை ''ஆண்டலைக் கொடியோடு மண்ணி'' என்ற திருமுருகாற்றுப் படை அடிக்கு நச்சினர்க்கினியர் உரைத்த உரைநோக்கி அறிக. உடலோடு கூடாத கேவலநிலை, இரவு இருட்டுப் போன்றது. உடலோடு கூடியும் உடற்பற்று அற்ற சுத்தநிலை, பகல்வெளிச்சம் போன்றது. உடலோடு கூடியும் உடற்பற்றுள்ள சகலநிலை, இரவு

இருட்டுப் போகவும், பகல் வெளிச்சம் வரவும் உள்ள வைகறை போன்றது. உடலோடு கூடிய வைகறை போன்ற நிலையிலுள்ள ஆன்மாக்களைச் சேவலே துயிலெழுப்புகின்றது. ''அலகில் பவத் துயிலறக் கூவு சேவலுடன் அம்புலீ ஆடவாவே'' என்றதுங் காண்க. எனவே துயிலுணர்த்துஞ் சேவல் ஆன்மாக்களை விழிப் புறச் செய்யும் நாததத்துவத்தைக் குறிக்கும். நாதங்கொண்டே இறைவனை அடையவேண்டும். யாவும் நாதத்தில் ஒடுங்க அதுவும் இறைவனிடம் ஒடுங்கும் என்பதைக் காட்டவே கொடி மேல் உயர்ந்திருக்கும். கொக்கறுகோவென இறைவன் நாமத்தைக் கூறும் சேவலை இறுதிநாமத்தில் வைத்த அருமை உணர்ந்து இன்புறற் பாலது. சே+அல் = சேவல். அல் - பாசக்கங்குல். சே - காவல். பாச இருளிலிருந்து அருள்நாத ஒலியால் அடியா ரைக் காப்பது. நூலாசிரியரை (399ஆம் அடி) சேவற்பெருமான் ஆட்கொண்டதாக வருதலையுங் காண்க. சேவலாகிய சக்தி, கன் மங்களை நுகர்வித்து இருவினையொப்பும் மலபரிபாகமும் வருவிப்ப தாகும். சேவல் அசுத்தமாயையைக் காரியப்படுத்துஞ் சக்தி.

26. இறைவன் சுட்டியறியப்படாதவன், ''தனக்கென நாமமில்லான்'' (ஞானாமிர்தம்), ''உரைக்கும் பெயரிலான்'' (கந்தபுராணம்), ஆயினும் உயிர்களுக்கு அருள்செய்யும் பொருட்டுப் பல திருவடி வங்களைக் கொண்டருளினன். அத்திருவடிவங்களுக்கு அன்பராயி னோர் இட்ட திருநாமங்களும் ஆயிரக்கணக்காயின.

27. முருகன் என்னும் நாமத்திலே தொடங்கி, சேவல்துவசன் என்னும் நாமத்தில் முடித்து, ஒடுக்கக்கிரமமாக இருபத்தேழு நாமங்களை நட்சத்திரமாலையாகத் தொடுத்துத் தந்திருக்கின்றார் ஆசிரியர்.

> முன்னமவனுடைய நாமங்கேட்ட முருகனடியார்கள் பின்னை அவனுடைய ஆரூர்கேட்டதும் பக்திமேலிடப் பெறுவர். ஆதலின் ஆயிரநாமத்து அழகனது படை வீடுகள் கூறப்படுகின்றன.

## ஆறுபடை வீடுறை அழகன்

19 வரங்கிளர் கருணைப் பரங்கிரி உறைவோன்
மாவினம் விளங்கும் ஆவினன் குடியோன்
நந்தூர் அலைவாய்ச் செந்தூர்க் கடவுள்
பாரகம் விளக்கும் ஏரகத் தமர்வோன்
மாலயன் இறைஞ்சுஞ் சோலைமா மலையோன்
குன்றுதோ றாடல் நன்றெனை மகிழ்ந்தோன்.

**பொ—ரை:-** (அடியார்களுக்கு) அருட்சிறப்பு விளங்குங் கருணை புரிவ தற்காக எளிவந்து திருப்பரங்குன்றத்தில் எழுந்தருளி இருப்பவர்; மாஞ்சோலையும் விலங்குக் கூட்டமுங்காணப்படுந் திருவாவினன்குடியில் எழுந்தருளியிருப்பவர்; வலம்புரி முதலிய திரவியங்கள் விளங்குங் கட லருகேயுள்ள திருச்செந்தூரில் எழுந்தருளியிருக்குஞ் செந்திலாண்டவர்; உலக உயிர்களின் உள்ளங்களிலே திருவருள் விளங்கித் தோன்றச் செய் யுந் திருவேரகத்திலே (திருவுளம் மகிழ்ந்து) விரும்பி வீற்றிருந்தருள் பவர்; திருமால், பிரமன் முதலிய தேவர்களும் வந்து வணங்கும் (சிறப்பினையுடைய) பழமுதிர்சோலையில் எழுந்தருளியிருப்பவர்; (ஆன் மாக்களுக்கு) உய்திதருமெனத் திருவுளங்கொண்டு உவந்து மலையிடங் கள்தோறும் எழுந்தருளித் திருவிளையாடல் புரிபவர் எ-று.

**விளக்கம்:-** 1. மறைகளின் முடிவாலும், மனத்தாலும், வாக்காலும் அறியவொண்ணுமல் எங்குந் திருமுகங்களும், எங்குந் திருக்கண் களும், எங்குந் திருச்செவிகளும், எங்குந் திருக்கைகளும், எங்குந் திருவடிகளும், எவ்விடமுந் திருவடிவுமாகப் பெற்ற சிவபரம் பொருளே, ஆயிரந் திருமுகங்கள், ஆயிரந் திருக்கரங்கள் முதலிய வற்றை அடக்கி உலகமெல்லாம் உய்யும் வண்ணம் ஆறு திரு முகங்களும், பன்னிரண்டு திருக்கரங்களுங் கொண்டு முருகப்பெரு மானுகத் திருவவதாரஞ் செய்தருளியது.

2. பலதிறப்பட்ட ஆன்ம பக்குவநிலைகளுக்குத் தக்கதாக இறைநிலை யையும், வழிபாட்டையும் வெவ்வேருகக் கூறி, அவ்வவ்வான் மாக்களை நினைவுகூர வைக்கின்ருர்.

3. பரங்கிரி:- இது திரு என்னும் அடைபெற்றுத் திருப்பரங்குன் றம் என வழங்கப்படுகின்றது. கந்தமலை எனப்படுவதும் இதுவே. இங்கேயே முருகன் தெய்வயானை அம்மையாரைத் திருமணஞ் செய்தருளினுர். இந்தத் தலத்திலேதான் நக்கீரனுர் திருமுரு காற்றுப்படையைப் பாடினுர் என்பது வரலாறு. ''அந்துவன் பாடிய சந்துகெழு நெடுவரை'' எனப்பரிபாடல் இம்மலையைப் பாராட்டுகின்றது.

4. வரங்கிளர் கருணை:- ''அருமுனி மரபின் ஆன்றவர் (தேவர்) நுகர்ச்சிமன் இருநிலத்தோரும் இயைகென'' என்ற பரிபாடலால் இதன் பொருள் விளக்கப்படுகின்றது. மும்மூர்த்திகள், நால் வகைத் தேவர், எட்டுத்திக்குப் பாலகர் முதலானேரும் இத்திருப் பரங்குன்றில் வந்து திருமுருகனைத் தரிசித்துத் துதித்து வரம் பெறுவர். இப்பொழுது முருகனுக்கும் சிவனுக்கும் உரிய தலமாக விளங்குகின்றது. இங்கே முருகன் ஒளிவடிவில் விளங்குகின்ருன்; இயற்கை அருவுருவ நிலையில் வருணிக்கப்படுகின்ருன். இது முல்லை நிலத் தலம்.

5. திருவாவினன்குடி:- பழனிமலையின் அடிவாரத்திலுள்ளது. பழனித்தலம், மலைமேலுள்ளது. பொதினி என்னுஞ் சொல் பழனி என மருவிற்று; இத்தலம் சித்தன் வாழ்வு எனவும் படும். ஆவியர் தலைநகர் ஆவினன்குடி என்பர். திரு+ஆ+இனன்+கு+டி எனப்பிரித்து திரு வாகிய இலக்குமியும், ஆ வாகிய காமதேனுவும், இனன் ஆகிய சூரியனும், குவ்வாகிய பூமிதேவியும், டி ஆகிய அக்கினியும் வணங்கியதாலேயே, திருவாவினன்குடி எனப் பெயர் பெற்றதென்பர் தலபுராணகாரர்.

மேற்கூறிய ஐந்து உருவங்களையுங் கோவிலில் அமைத்துள்ளார்கள். இது வையாபுரி எனவும்படும். இங்கு முருகன் தவவடிவில் விளங்குகின்றான். திருமுருகாற்றுப்படையில் மூன்றாவது படைவீடாகக் கொள்ளப்பட்ட இதனை, இந்நூலார் இரண்டாவதாகக் கொண்டுள்ளார். அருவமாய்க் கடந்தநிலையில் வருணிக்கப்படுகின்றார். இது குறிஞ்சித்தலம்; ஆறு ஆதாரதலத்தில் ஆறாவதான ஆஞ்ஞைத் தலம்.

6. திருச்செந்தூர்:- முருகப்பெருமான் சூரனுடன் போர்புரிய நேர்ந்தபொழுது இங்கிருந்தே வீரவாகு தேவரைத் தூதனுப்பியருளினார்: சூரனை வென்று வெற்றி கொண்டாடிய இடமாதலின் இவ்விடம் செயந்தி புரம் எனப்பட்டது என்றும், அப்பெயர் செந்தி, செந்தில், செந்தூர் எனத் திரிந்தது என்றுங் கூறுவர். யோகியர் செந்தூரைத் தியானித்தலால் மனம், வாக்கு, காயங்களைக் கடந்த கடவுட் காட்சியைப் பெறுவர். கந்தமாதன தீர்த்தத்தில் முழுகினபொழுதே கடவுள் காட்சி கொடுப்பாராதலின் செந்தூர்க் கடவுள் எனப்பாடியருளினார். அகவலில் (அடி 130 இல்) மதிமுடிக்கடவுள் எனச் சிவன் உணர்த்தப்படுகின்றார். வாக்கு மனம் கடந்ததே கடவுள் என்று தைத்திரிய உபநிடதங் கூறுகின்றது. கடவு + உள் = கடவுள் — ஆன்மாவின் உள்ளக் குகையிலிருந்து அவ்வான்மாவை இயக்குபவர். முருகனே சமட்டிக் கடவுள் என்பதை இங்குச் சிறப்பாக எடுத்துக் கூறியுள்ளார். (அகவல் அடி 202 — 204 பார்க்க)

7. நந்தூர் அலைவாய்ச் செந்தூர்:- அலைவாய் — கடல். சுத்துந்தரங்கம் எடுத்தெறியும் வலம்புரி, முத்து, பவளம் முதலிய திரவியங்களை உடையதாதலின் நந்தூர் அலைவாய் எனப்பட்டது. ''வெண்டலைப் புணரி யலைக்குஞ் செந்தில்'' என்பது புறநானூறு. நந்து — சங்கு; இது கடலலை எழுப்பும் ஓங்கார நாதத்தைக் குறிப்பால் உணர்த்திற்று. ''நம் செந்தில் மேய வள்ளிமணாளன்'' அருளுருவ வடிவில் விளங்குகின்றான். முருகாற்றுப்படையில் இரண்

வது படைவீடாகக் கொள்ளப்பட்டதை இந்நூலார் மூன்றாவதாகக் கொண்டுள்ளார். இது நெய்தல் நிலத்தலம்.

8. பாரகம் விளக்கும் ஏரகம்:- சுவாமிமலை எனப்படும் திருவேரகம். குடந்தை (கும்பகோணம்) என்னுமிடத்தைச் சேர்ந்த அற்புதம் மிக்க மலையாகும். பிரமன் அறியாத குடிலைப் பொருளை அரனார்க்கு ஓதிய சுவாமிநாதன் எழுந்தருளியுள்ள இடமாதலின் சுவாமிமலை எனப் பெயர்பெற்றது. சிவயோக சுவாமிகளும் தமது குருநாதனை, ''ஏரகத்தமர் ஏந்தலை ஒப்பவர்'' எனத்துதித்துள்ளார் வேதத்தின் உட்பொருளான முருகன் இங்கு மந்திரவடிவில் விளங்குகின்றான். முருகாற்றுப் படையிலும் இந்நூலிலும் இத்தலம் நான்காவது படைவீடாகவே விளங்குகின்றது. பார் அகம் - உலக ஆன்மாக்களின் உள்ளங்கள். எந்தக் காலத்திலும் குருடர்க்கு ஊனக்கண்ணும், பக்குவான்மாக்களுக்கு ஞானக்கண்ணுங் கொடுத்து விளக்குவதால், அஞ்ஞான இருள் ஓட்டி மெய்ஞ்ஞான விளக்கஞ் செய்யும் ஏரகம் என்பார், பாரகம் விளக்கும் ஏரகம் என்றார். பார் அகம் என்பன, பாசஞான பசுஞானங்களாகிய அஞ்ஞானத்தைத் குறிப்பாலுணர்த்தின. இது மருத நிலத்தலம். இத்தலத்தை நச்சினார்க்கினியர் மலைநாட்டகத்ததொரு திருப்பதி என்றார். கன்னியா குமரி மாவட்டத்திலுள்ள வேளிமலையெனவும், நாகர்கோவிலை அடுத்த குமாரகோவில் எனவுங்கூறுவாருமுளர்.

9. சோலைமாமலை:- பழமுதிர்சோலை எனப்படும் அழகர்மலை. முருகனும் அழகனும் ஒருவரே. வைணவர் இதனைத் திருமாலிருஞ்சோலை மலை என்பர். விசாகப் பெருமாளுக்கும் பெருமாளுக்குமுரிய தலமாயினும் இக்காலத்தில் அழகர்கோயில் என்னும் விஷ்ணு தலமாகவே விளங்குகின்றது. திருமாலும், பிரமதேவனும் மண்ணுலகத்தில் வந்து இந்தத் தலத்தை வழிபட்டுத் தத்தம் பதவிகளை நிலையாக்கிக் கொண்டனர். இங்கு முருகன் வியாபக வடிவில் விளங்குகின்றான். முருகாற்றுப் படையில் ஆறாவது படைவீடாகக் கொள்ளப்பட்ட இதனை இந்நூலார் ஐந்தாவதாகக் கொண்டுள்ளார்.

10 குன்றுதோறாடல்:- திருத்தணிகை, கதிர்காமம், விராலிமலை முதலிய சிறந்த மலைத்தலங்கள் தோறும் வீற்றிருந்து அருட்டிருவிளையாடல் புரிதல். குன்றுகள் யாவும் சேர்ந்த தொகுதியாதலின் குன்றுதோறாடலைத் தொகைவீடு என்பர். திருப்புகழ் குன்றுதோறாடற் பகுதியில் 32 குன்றுகள் தொகுக்கப் பெற்றுள்ளன.

''பதினெங்கி லுமிருந்து விளையாடிப் பலகுன்றி லுமமர்ந்த பெருமாளே'' என்றார் அருணகிரிநாதர். யோகியர், குண்டலி சத்தி சுழுமுனை நாடிவழி மேனோக்கிச் செல்லும் பொழுது ஆறு ஆதார இதழ்களிலுஞ் சஞ்சரித்துச் செல்லும் என்றும், ஆறு ஆதாரங்களிலுமுள்ள 51 இதழ்களுமே குன்றுகளாக உவமிக்கப்பட்டன என்றுங்கூறுவர். தோறும் — தான் சார்ந்த மொழிப்பொருளுக்குப் பன்மையும் இடமாதலும் உணர்த்தி நிற்குந் தொறும் என்னும் இடைச்சொல் முதனீண்டு தோறும் என்றாயிற்று. நூலில் (அடி 55) முகந்தொறும் என வருதலுங் காண்க.

11. நன்றென மகிழ்ந்தோன்:- வேண்டுதல் வேண்டாமையில்லாதவன் முருகன்; மலைவாழ் வேடர் முதலிய அடியார் மேலும், அநுபூதிமான்கள் மேலுங்கொண்ட கருணையால் மார்ச்சார சம்பந்தம் பற்றி அவர்களிருக்குமிடங்கள் தோறும் வெளிப்படஇருந்து அருள் புரிதலையே அவர்களுக்கு நன்மைதருமென உவப்பவன். முக்காலத்தும் உவப்பான் என்னுந்துணிவுபற்றி எதிர்காலத்தை இறந்த காலத்தாற்கூறினார். இங்கு முருகன் எளிமை வடிவில் விளங்குகின்றான். திருமுருகாற்றுப்படையில் ஐந்தாவது படைவீடாகக் கொள்ளப்பட்ட இதனை இந்நூலார் ஆறாவது படைவீடாகக் கொண்டார். ஆடல்மகிழ்ந்தோன் என்பதனை மகிழ்ந்து ஆடுவோன் எனக்கூட்டுக.

12. திருமுருகாற்றுப்படையில் நக்கீரனார் ஆறு படைவீடுகளையுந் தனித்தனியே அமைத்து 317 வரிகளிற் பாடியருளினார். கந்தபுராணத்திற் கச்சியப்பரும் ஆறு படைவீடுகளையும் அவ்வாறே அமைத்து, ஆறு திருவிருத்தங்களாற் பாடியருளினார். இந்நூலாசிரியரோ (2 ஆம், 3 ஆம் படை வீடுகளையும், 5 ஆம், 6 ஆம் படை வீடுகளையும் முன்பின்னாக மாற்றியமைத்து) ஆறு அடிகளால் அழகுற வருணித்துள்ளார். முருகன் பரங்கிரியிற் சிவனாகவும், பழமுதிர் சோலையிலே திருமாலாகவும் வழிபடப்படுகின்றான். வைதிகசமயங்கள் ஆறும் முருகனைக் கொண்டாடுகின்றன. அறுவர் பயந்த ஆறமர்செல்வனிவன். ஆறுபடை வீடுகளையும் புற உலகத்திற் காணப்படும் ஆறு ஊர்களாகக் கொள்ளாது, உடம்பின் அகத்தே அமைந்திருக்கும் ஆறு ஆதார சக்கரங்களாகக் கொண்டனர் ஆன்றோர். அவர் குண்டலி சத்தி ஆறு ஆதாரங்களையும் பேதித்துக்கொண்டு சுழுமுனைநாடி வழியாக மேலே செல்லுங்கால் ஏற்படும் அநுபவமே ஆங்காங்கு முருகனாகக் கூறப்படுகின்றதென்பர். ஆறு ஆதாரங்களுக்கும் ஆறு படைவீடுகளுக்குமுள்ள ஒப்புமையை யோகநூல் வல்லார்வாய்க் கேட்டுணர்க.

அகண்டவியாபக சச்சிதானந்தப் பரம்பொருளுக்கு, ஆன்ம தியானபக்குவ நிலேக்கேற்ப அவயவமுந் திருவுருவமுங் கற்பித்துக் கூறப்படுகின்றது.

## அழகன் அலங்காரம்

### திருவடி

பாசக் கங்குல் பசையறப் பருகி
நேசர்க்கு இன்ப நிறையொளி பரப்பித்
திருவளர் செழும்பொற் செந்தா மரைக்கு
மருவுமோர் சான்ருய் மலர்ந்தபொற் பதமு(ம்)

பொ—ரை:- (முருகன்) தன் அடியாரது மலஇருள் வாசனேயுமற்று நீங்குமாறு முற்ருக அழித்து, இன்பம் நிரம்புவதற்கு ஏதுவாகிய அருளொளியைப் பரவச்செய்து, அழகு மிகுந்து, மாற்றுயர்ந்து விளங்கும் பொன்னுக்கும் ஞானத்திருவளரும் ஞானத்தாமரை மலருக்கும் உவமையாகக் கூறப்படும் அமைதியுடையனவாய் எங்கும் ஒழிவற நிறைந்த, பொலிவினேயுடைய திருப்பாதங்களேயும் எ - று.

விளக்கம்:- 1. கடவுளரைப் பாதாதிகேசமாய் வருணித்தல் மரபு. இப்பகுதியில் முருகக் கடவுளின் நால்வகை உருவங்களான அங்க, பிரத்தியங்க, சாங்க, உபாங்கங்கள் முப்பத்தாறு அடிகளில் வருணிக்கப்பட்டுள்ளன.

2. பாசக்கங்குல் - தன்னேயுந் தலேவனேயும் அறியமுடியாது (இருபொருளேயும்) மறைப்பதாகிய இருள். இஃது உருவகம். பசை—வாசனே; பற்று. இருளேப் பாசத்திற்கும், ஒளியைத் திருவருளுக்கும் உவமித்தல் சித்தாந்த மரபு. திருப்பாதம் திருவருட்சத்தி வடிவு. இரண்டுதிருவடிகளில் ஒன்று கிரியாசத்தி; அது மலத்தைப் பக்குவப் படுத்திமேலிடாது அழுத்தி வினேயை அதன் வாசனேயுமற நீக்கும்; மற்றையது ஞானசத்தி; ஆன்மாவின் வியாபகம் முழுவதுந்தான் மேற்பட்டுநின்று, சிவானந்த பூரணப் பிரகாசத்தை நித்தியமாகப் பதிக்கும். ''உறுநர்த் தாங்கிய மதன்உடை நோன்தாள்'' என்ருர் நக்கீரர். திருவடிதீட்சையைக் குறிப்பாலுணர்த்தியவாறு.

3. திருவளர் செந்தாமரை:- திரு - முத்தித் திருவின் தெய்வமாகிய ஞானமுதல்வி. செந்தாமரை, உச்சிக்கு மேலுள்ள ஆயிரஇதழ் ஞானத்தாமரையாகிய யோகத்தானம். இதில் வீற்றிருக்கும் ஞானம்பிகையை, ''சகஸ்ரதள புட்பமிசை வீற்றிருக்கும் நாரணி''

எனவும், ''நாதாந்த சக்தி எனவுந் தாயுமானவர் பாடிப்பரவுவர். அடியவரை அடுத்து வரம்பெறுபவரும், பலகாலும் பிறந்திறந்துழல் பவருமான தேவமாதர் வாழும் வெண்டாமரை, செந்தாமரைப் பூக்களைக் குறித்ததாகக் கொள்ளல் இவ்விடத்துப் பொருந்தாது. சுத்தமாயை சம்பந்தம் என்பதைக் குறிப்பால் உணர்த்தியவாறு.

4. பொற்பதம் — திருவடியே வீடு எனப்படும்; சிவபெருமானுக்கும் முருகப்பெருமானுக்கும் வேறுபாடின்று. சிவபெருமானது எண் குணங்களுமே திருவடியாகும். மெய்ஞ்ஞானத்தால் அறிதலைக் கைவிட்டுச் சும்மாவிருக்கும் சுத்த அறிவுமயமாகிய நிலையில் (சிவத் துவமாகிய) எண்குணங்களும் விளங்கித் தோன்றும். இதுவே பாச வீடும், திருவடிப் பேறுமாகும். நக்கீரனும் புலம் பிரிந்து உறை யும் திருவடியே வீடாயிருக்கும் என்ற கொள்கையினர். ஆளுடைய அடிகளும், ''தென்னன் பெருந்துறையான்... தாட்டாமரை காட் டித் தன்கருணைத் தேன் காட்டி'' என்பதனால் இதனை உணர்த் தியருளினர்.

29 நினைப்பொடு மறப்பு நீங்கிடும் அதீதம்
அனைப்பர நாத மறையொலி அலம்பும்
பாந்தளஞ் சுடிகைப் பண்மணி இழைத்த
காந்துசெஞ் சுடர்க்காற் கழற்பரி புரமும்

பொ—ரை:- சகலாவத்தையொடு கேவல கேவலம், சகல கேவலம் என்னும் நிலைகளைக் கடந்த நின்மல துரிய நிலையிற் கேட்கப்படுகின்ற, சத்தப்பிரபஞ்சம் அனைத்திற்கும் பிறப்பிடமான பரநாதத்தின் சூக்கும ஒலியையும், வேதத்தின் தூல ஒலியையுங் கலந்து ஒலிப்பனவும், பாம் பின் அழகிய தலைச் சூட்டிலுள்ள நாக ரத்தினங்கள் பல பதிக்கப் பெற்றுப் பிரகாசமான சிவந்த ஒளியை வீசுவனவுமாகிய வீரக்கழலை யும் சிலம்பையும் எ—று.

விளக்கம்:- 1. நினைப்பு — சகலாவத்தை; நினைப்பாக நிற்கும் 36 தத்துவங்கள். மறப்பு — கேவல கேவலம், சகல கேவலம்; மறப் பாய் நின்ற ஆணவமலம். அதீதம் — சிந்தனாதீதமாகிய துரியநிலை; அதாவது அறிவு அறியாமை அகன்ற இராப்பகலற்ற இடமாகிய சுத்தாவத்தை. (அகவல் அடி 227 - 234 ஒப்புநோக்குக) அருண கிரியாரும் ''நினையா மறவா நிலை'' என்பர். தூய அமைதி மோன த்தில் இறையொலிகேட்கும்.

2. கழல் அருளின் வெற்றிக்கு அறிகுறி. பரிபுரம் — சிலம்பு; பர விந்து. அனை - அன்னை (யாகிய பரை); பரநாத ஒலி — பரநாதப்

பிரணவ சூக்கும ஒலி; மறையொலி - வேதத்தினது தூல ஒலி. அலம்பும் — கலந்து ஒலிக்கும். பரநாத மறையொலி அலம்புங் கழல் என நிரனிறையாகக் கொள்க. பரநாத சூக்கும ஒலி கேட்குமிடம் சுத்தாவத்தையிலுள்ள துரியநிலையாகும். சூக்கும, தூல ஒலிகள் அலம்புதலை ''நிரைகழல் அரவஞ் சிலம் பொலி அலம்பும் நிமலர்'' எனத் திருஞான சம்பந்தர் திருகோணமலைத் திருப்பதிகத்தில் முதலிலே அமைத்துப் பாடியருளினர். தூல சூக்கும ஒலிமூலம் அழைத்துத் திருவடி சேர்க்குங் கருணைத்திறம் உணர்த்தப் பட்டது. பாந்தள் - பாம்பு; பா என்னும் அடியிலிருந்து தோன்றிய பெயர். சுடிகை — தலைச்சூட்டு, காந்து செஞ்சுடர் – பிரகாசிக்கும் சிவந்த ஒளி. பாதம் — திருவருள். அத்திருவருட் சத்தியின் நிறம் சிவப்பு. ''பரந்த செஞ்சுடரைப்பரையெனக் கண்டேன்'' (அகவல் அடி 368) என்பர். ஆதலாற் பாதச் செவ்வொளி கழலிலும், சிலம்பிலும் பட்டுப் பிரகாசித்தது.

3. பன்மணி என்றது ஞானத்தால் முத்திபெற்றோரைக் குறிப்பாகச் சுட்டியது. ஈண்டுச் சுருக்கமாகத் தொகுத்துக் கூறப்பட்டவை பின்னர் விரித்துக் காட்டப்படுகின்றன.

## திருவரை

33 கண்குளிர் கனகக் கவின்கிடந் திலங்குங்
கிண்கிணி யிசைக்குங் கிளர்திரு அரையும்
வட்டுடை வரிந்து தொட்டகூர் வாளும்
கட்டுறு யோக பட்டிகைச் சிறப்பும்

பொ—ரை:- (அடியார்களது) கண்கள் மகிழ்ச்சியாற் பார்த்துக் குளிர்ச்சியடையச் செய்யும் இயற்கை அழகு வாய்ந்ததும், பொன்னரைஞாண் பூந்துகிலாடைகளின் அழகு திகழ்வதும், பொன்னாற் செய்யப்பெற்ற ஒலிக்குஞ் சிறு சதங்கை என்னும் அணிகலம் அணியப்பெற்று விளங்குவதுமாகிய திருவரையையும், உடையைத் திரட்டிக் கொடுக்காக வரிந்து கட்டி அதிலே தொங்குமாறு கட்டப்பெற்ற கூரிய உடைவாளையும், திருவரையிற் கட்டும் யோகபட்டிகையையும் எ—று

விளக்கம்:- 1. கண்குளிர் கவின் எனவும், இசைக்குங்கனகக் கிண்கிணி கிடந்து இலங்குங் கிளர்திருவரை எனவுங் கூட்டுக.

2. கண்குளிர் கவின்:- கண்ட அடியாரது பிறவி வெப்பத்தை நீக்கியருளும் இயற்கையழகு. ''கைபுனைந்தியற்றாக் கவின்'' என்றார் நக்கீரர். கண்குளிர்தல் — பத்திமிகப் பார்த்துக்களித்தல்.

3. கிண்கிணி — திருவரையிற் கட்டுஞ் சிறுசதங்கை; அரைஞாண் மணி. கிண்கிணி ஓசை பரநாதமாகிய ஞானத்தைக் குறிக்கும்.

4. வட்டுடை — வீரர் முழந்தாள்வரை வரிந்து கட்டும் ஓர் வித உடை. பட்டுடை எனவும் பாடம். தொடுதல் — கட்டுதல். வட்டுடை — திருவருளைக் குறிக்கும்.

5. யோகபட்டிகை — யோகஞ்செய்யும் பொழுது யோகியர் மடக்கிய முழந்தாள்களையும், அரையையுஞ் சேர்த்துக் கட்டுங்கயிறு (பட்டி). முருகன் யோக நெறித்தலைவன். யோக ரூபி என்பதை உணர்த்தவே யோகபட்டிகை கூறப்பட்டது. சிறப்பும் என்பதிலுள்ள உம்மையைப் பிரித்துப் பட்டிகையுடன் கூட்டிப் பொருள் கொள்க. ''உல்லாச நிராகுல யோகவிதச் சல்லாப விநோதனுநீ அலையோ'' எனவும், ''யோகா சிவஞானோபதேசிகனே'' எனவும், ''சிவயோக தயாபரனே'' எனவும் கந்தரனுபூதியில் அருணகிரி நாதர் பாடிப்பரவுகின்றார்.

## திருவிரலுந் திருக்கரமும்

37 இந்திர வில்லிரண் (டு) எதிர்பொருந் துவபோற்
சுந்தர ஆழி சூட்டுமங் குலியு (ம்)

பொ—ரை:- வானவில் இரண்டும் எதிரெதிராக (முழுவட்டமாக) ச் சேர்ந்தாற் போன்று அழகிய மோதிரங்களை (இரட்டையாக) அணியப் பெறும் திருவிரல்களையும் எ—று.

விளக்கம்:- 1. இந்திரவில் -வானவில், இந்திரனுக்குரிய வில் இரண்டும் அரைவட்ட வளைவும், எழு நிறமுங் கொண்டவை. அவை எதிர்ப் புறமாக ஒன்றோடொன்று பொருந்தினால் முழுவட்ட வடிவமான மோதிரம்போலத் தோன்றும். ஆணவத்தைக் குறிக்கும் நடு விரல் நீங்கலாக ஏனைய நான்கு விரல்களுக்கும் இவ்விரண்டாக மோதிரம் அணியப்படும். சுந்தரம் — அழகு. வண்ண அழகும் வடிவ அழகுமாகும். ஆழி — மோதிரம். அங்குலி — விரல். சுந்தர வேடம்போல் தேசிகர் அணியும் சுந்தர ஆழியுமாம்.

2. அறுமுகப்பெருமானின் திருப்பாதம், திருவரை, திருவிரல் என்னும் மூன்று உறுப்புக்களிலும் ஆறு பொருள்களை அணிந்து அகங் குளிர்கின்றார் ஆசிரியர்.

39 மன்னிரு முகிலான் மணிதரு நிதிசேர்
பன்னிரு கமல பாணியும் அவற்றிற்
சூலமும் வேலுந் துரோணமுஞ் சரமும்
பாலமுங் குலிசமும் பரிசையும் வாளும்
ஆழியு மழுவும் அபயமும் வரதமுஞ்
சூழுமுன் கைகள் துலங்குபொற் கடகமு(ம்)

**பொ—ரை:-** கருநிறம் நிலைக்கப் பெற்ற மேகத்தை வாகனமாகக் கொண்ட இந்திரனுடைய சிந்தாமணி, கற்பகதரு, சங்கநிதி, பதும நிதி ஆதிய (இந்திரச்) செல்வங்களை அவனுக்கும் வேண்டும் அடியார்க்கும் ஈந்தருளுவதாற் செந்தாமரை மலர்போலச் சிவந்து விளங்கும் பன்னிரு திருக்கரங்களும், அத்திருக்கரங்களிற் சூலம், வேல், வில், அம்பு, எறிதண்டு, வச்சிராயுதம், கேடகம், வாள், சக்கரம், மழு என்னும் ஆயுதங்களையும் அபயவரதக் குறிகளையும், முன்னங்கைகளின் இறைகளிலே சூழ்ந்து விளங்கும் பொன்னாற் செய்யப்பெற்ற காப்புகளையும் எ—று.

**விளக்கம்:-** 1. மன் — நிலைபேறு. இருமை — கருமை. முகிலான்- மேகவாகனனாகிய இந்திரன். மணி — சிந்தாமணி; சிந்திப்பதைக் கொடுப்பது. தரு - கற்பகதரு; கேட்பதைக் கொடுப்பது. அடியார் நினைத்தவற்றையுங் கேட்டவற்றையும் வற்றாது கொடுக்குங் கொடைத் தொழில் சேர்பாணி என்க. சேர்பாணி வினைத்தொகை. தானஞ் செய்தல் கையின் தொழில் என்பது தத்துவம். தானஞ் செய்வார்க்கிடஞ் சுவர்க்கம்; இந்திரபோகம் என்பதைக் குறிப்பாயுணரவைத்தார். பன்னிருதிருக்கரங்களும் பாசநீக்கஞ் செய்வன.

2. ''முன்னியது முடித்தலின் முருகொத்தீயே'' என்பது புறநானூறு. முருகன்கொண்ட திருப்பெருவடிவில் உலக போகங்கள் கைகளிலேயே காணப்பட்டன.

''எண்ணுந் தாருவும் இனிய தேனுவும்
பண்ண மைந்தமா மணியும் பண்பினால்
உண்ணி னைந்துளார்க் குதவி ஞானத்தி
னண்ணு வாய்சகந் நாத போற்றியே'' என்பது செந்தூர்ப் புராணம்.

3. சாங்க வகுப்பில் ஆயுதங்கள் கூறப்பட்டுள்ளன. சூலம் மூன்று தலைகளையுடைய படை; அது முக்குணங்களை உணர்த்தும். வேல் ஆறு கருக்கொண்ட படை. ''இவ்வேல் ஆதிசத்தியினின்றும் உண்

டானது; அனைவராலும் பூசிக்கப் பெறுவது; இச்சை, ஞானம், கிரியை சொரூபமாயுள்ளது'' எனக் குமார தந்திரம் கூறுகின்றது. வேலாயுதத்திற்கு மேலாயுதமில்லை; படை அரசு. வெல்வது வேல் என வந்தது. உண்மையாக வெல்வது எதுவென்று ஆராயுமிடத்து எங்ஙனம் வெல்வதென முடிவுகட்டும் ஞானமே வெல்வதாக முடியும். ஆகவே வேல் என்பது ஞானத்தைக் குறிக்கும். வடமொழியார் வேலைச்சக்தி என்பர். ''சக்திதான் தடையிலா ஞானமாகும்' என்பது சிவஞானசித்தியார்.

துரோணம் - வில்; சரம் - அம்பு; பாலம் - பிண்டிபாலம் = எறிதண்டு; குலிசம் - இருபுறமும் மூன்று கருவுள்ள வச்சிராயுதம். இதைத் துரகபேத்தியம் என வடமொழியில் அழைப்பர். பரிசை- கேடகம். வாள் பிரதாபத்தைக் குறிக்கும்; மழு - சத்தியத்தைக் குறிக்கும்; ஆழி - சக்கராயுதம்.

4. அபயம், அஞ்சல் என்ற அநுக்கிரக முத்திரையாக அமர்த்துங்கை; பிறவிப்பயத்துடன் ஏனைய பயங்களையும் போக்கி. உலகபோகந் தருவது. வரதம் - வரந்தருதலுக்கு முத்திரை (அறிகுறி) யாக அமையுங்கை; மோட்சந்தருவது. பன்னிருகரங்களிலுமுள்ள ஆயுதங்களும் பாசநீக்கஞ் செய்வன.

5. முருகப்பெருமானுடைய பல்வேறு முகூர்த்தங்களுக்குமேற்ற அமைப்பிற் பன்னிரு கைகளுக்கும் ஆயுதங்கள் மாறுபாடாக நூல்களிற் கூறப்படுகின்றன. கந்தபுராணத்திற் சயந்தனுக்குக் காட்சிகொடுத்தருளிய பொழுது,

''வீறு கேதனம் வச்சிரம் அங்குசம் விசிகம்
மாறி லாதவேல் அபயமே வலமிடம் வரதம்
ஏறு பங்கய மணிமழுத் தண்டுவில் இசைந்த
ஆறி ரண்டுகை யறுமுகங் கொண்டுவே ளடைந்தான்''

எனக் கச்சியப்பர் பாடுகின்றார். இன்னும் சிவபெருமான் வேல் தரும் சமயத்திலே தந்த ஆயுதங்களையும், திருமுருகாற்றுப்படை கந்தர் கலிவெண்பா என்பவற்றிலே கூறப்படும் ஆயுதங்களையும் நோக்கினுல் இவ்வுண்மை புலப்படும்.

6. சான்றோர், கடவுள் வணக்கம் பாடுங்கால் மற்றைய தெய்வங்களின் இயல்பை, எடுத்துக்கொண்ட வடிவத்திற்காட்டி, பிறதெய்வங்களின் படைகளையும் அவ்வடிவத்தில் அமைத்து, அவர் சமஷ்டிக் கடவுள்என்று தெளிவுபடுத்துவர். ஈண்டுக் கூறப்பெற்ற

ஆயுத வருணனையால் முருகன், ஏனைய தெய்வங்களின் தொழில்களையும் ஆற்றுந்திறலுடைய சமஷ்டிக் கடவுள் என்பது வெளிப்படையாகின்றது. அகவலில், ''வாரண முகவன், மலரோன், திருமால், வருத்தமில் உருத்திரன், மகேச்சுரன், சதாசிவன் உருத்தெளிந்திட நம்முருவேயாகும்'' (அடி 204 — 206) என முருகப்பெருமானே திருவாய் மலர்ந்தருளியுள்ளதுங் காண்க.

## திருப்புயம், திருமார்பு, திருக்கழுத்து

45 மந்தரந் தழுவும் வாசுகி யன்ன
சந்தத மொய்ம்பு தழைத்தகே யூரமும்
பரிதிமண் டலம்போற் பதக்கமுத் தாரந்
தருசரப் பணிகள் தயங்குபூண் மார்பும்
அட்டிகை பணிநல் லக்கிருங் குவளை
விட்டொளி விரிக்கும் வியன்கந் தரமு(ம்)

பொ - ரை:- மந்தரமலையைச் சுற்றியிருக்கும் வாசுகிபோன்று (வலிமை மிகுந்த) திருப்புயங்களில் எப்பொழுதும் ஒளிவீசிக் கொண்டிருக்குந் தோளணிகளையும், சூரிய மண்டலம் போன்று (பிரகாசிக்கின்ற) வட்ட வடிவமான பதக்கம் முத்துமாலை சரப்பணிகள் என்பன அணியப்பெற்று விளங்குகின்ற திருமார்பையும், அட்டியல், வேலைப்பாடு செய்யப்பெற்ற சிறந்த உருத்திராக்க மணிமாலை, கருங்குவளை அரும்பு மணிமாலை என்பன (அணியப் பெற்று) விட்டுவிட்டு ஒளி வீசுகின்ற பெருமை பொருந்திய திருக்கழுத்தையும் எ-று.

விளக்கம்:- 1. பாற்கடலைக் கடைந்த ஞான்று மந்தரமலையை மத்தாகவும் வாசுகியை நாணாகவுங் கொண்டனர். மந்தரம் தோளுக்கும் அதனைச் சூழ்ந்த வாசுகி தோளணிக்கும் உவமை. [சந்ததம் - எப்பொழுதும் அழகு; மொய்ம்பு - வலியதோள்; கேயூரம் - தோளணி; மந்தரம் - பிரகிருதி மாயை; வாசுகி அசுத்த மாயை. மந்தரந் தழுவும் வாசுகி, பிரகிருதி மாயை அசுத்த மாயையாற் பிரேரிக்கப் படுதலைக் குறிக்கும்.

2. பரிதி மண்டலம் - சூரிய வட்டம்; சரப்பணி - பொன்னிலே வைரமணி அழுத்திச் செய்யப் பெற்றுத் தொங்க அணியும் கழுத்தணி. தயங்குபூண் மார்பு என்பதைப் பூண்தயங்கு மார்பு என மாறிக் கூட்டுக.

3. அட்டிகை - மகர பதக்கம் என்னுங் கல் இழைத்த அட்டியல்; பணி - நுட்ப வேலைப்பாடு; நல்அக்கு - உத்தமசாதி உருத்திராக்க மணி; அருட்பேற்றுக்கு அறிகுறி. இருமை + குவளை = இருங்குவளை; கருங்குவளை அரும்பாற் கட்டப்படும் மாலை. இருமை - கருமை.

4. விட்டுஒளி விரித்தல்:- ஒளிவிட்டுவிட்டு இமைப்பின் கண்ணைக் கவரும். "ஓவற இமைக்குஞ் சேண்விளங்கு அவிர் ஒளி" என்பது முருகு. வியன் - பெருமை; கந்தரம் - திருக்கழுத்து.

## திருமுகம், திருக்கண், திருவாய்

51 மூவிரு திங்கள் முதிர்ந்தபூ ரணம்போல்
மேவுசண் முகங்கள் விளங்குநற் பொலிவு
முளரிமுந் நான்கு மூவிரு குமுதம்
வளர்மதி யுதயத் திடைவளர்ந் தனபோல்
முகந்தொறுங் கருணை யுகந்தகண் களுஞ்சீர்
உகந்தபொற் குதலை யொழுகுவாய் வனப்பும்

பொ—ரை:- பதினாறு கலைகளும் நிரம்பப்பெற்ற பூரண சந்திரர் அறுவரைப்போலப் பிரகாசிக்கும் நல்ல தோற்றப் பொலிவினையுடைய ஆறு திருமுகங்களையும், உதித்தெழுகின்ற பூரண சந்திரனிடையே பன்னிரண்டு செந்தாமரை மலர்களும் ஆறு செவ்வல்லிப் பூக்களும் பூத்து விளங்கினாற்போல முகங்கள்தோறும் கிருபா நோக்கம் பாலிக்கின்ற (பன்னிரண்டு) திருக்கண்களையும், (அடியாரது) சிறப்பினை விரும்பிய அரிய இனிய மொழியைத் திருவாய் மலர்ந்தருளும் அழகிய ஆறு திருவாயினையும் எ—று.

விளக்கம்:- 1. முதிர்ந்த மூவிரு பூரண திங்கள்போல் எனக் கூட்டுக. சண்முகம் — ஆறுமுகம்; சிலர்பிரணவமும் இச்சை, ஞானம், கிரியை, ஆதி, பரை ஆகிய சத்திகள் ஐவருமே ஆறுமுகம் எனப்படும் என்பர். "ஒருமுகம் எஞ்சிய பொருள்களை ஏமுற நாடித் திங்கள் போலத் திசைவிளக்கும்மே" என்ற திருமுருகாற்றுப்படை அடிகளுக்கு நச்சினார்க்கினியர், 'ஒரு முகம் ஈண்டு வழங்காத, வேதங்களினும் நூல்களினுமுள்ள பொருள்களை ஆராய்ந்து, இருடிகள் ஏமுறும்படி உணர்த்தித், திங்கள்போலத் திசைகளெல்லாம் விளக்குவிக்கும். கலை நிறைதலில் திங்கள் உவமையாயிற்று' என்று எழுதிய உரைப்பகுதி ஒப்பு நோக்குதற்குரியது.

2. முளரி- தாமரை; தாளிலே முள்ளுடைமை பற்றிவந்த காரணப் பெயர். குமுதம்- செவ்வல்லி மலர்; ஆம்பற் பூ. முளரி குமுதம் என்பன ஆகு பெயர். குதலை முருகனது அரிய இனிய மொழி; எழுத்து நிரம்பா மொழியன்று.

3. உதித்தெழும் பூரண சந்திரர் இளம் பூரணனது திருமுகங்களுக்கும், அப்பொழுதலர்ந்த செந்தாமரை மலர்கள் அவனது திருக் கண்களுக்கும், செவ்வல்லிப் பூக்கள் திருவாய்களுக்கும் உவமை. சந்திரோதயத்து உலகத்தாமரை மலர்வதில்லை. இமையாநாட்டத்து இறைவரது என்றும் வாடாத திருவிழியாகிய தெய்வத் தாமரைப் பூ, பூரண சந்திரோதயத்திலும் வாடாது மலர்ந்திருத்தல் இயல்பே. கருணை உகத்தல் திருக்கண்களுக்கும், அடியாரது சீரை உகத்தல் அவரது குதலைக்கும் இயல்பு.

## திருச்செவி, (திருநுதல்), திருச்சிரசு

57 தொட்டபொற் குழைகள் தூக்குகுண் டலமுஞ்
சுட்டியு நுதலி லிட்டவெண் ணீறு
மன்னிரு மகளிர் மாட்டலால் வணங்காச்
சென்னிசேர்ந் தொளிருஞ் சேகரச் சிறப்பு (ம்)

பொ—ரை:- தூங்கி அசையுமாறு மகரகுண்டலங்கள் அணியப்பெற்ற அழகிய திருச்செவிகளையும், திருநெற்றியிலணிந்த இரத்தினச் சுட்டியையும், வெண்மையான திருநீற்றையும், நிலைபேற்றினை எய்திய வள்ளி தெய்வயானை என்னும் மங்கையர் இருவரிடத்தில் வணங்குவதல்லாது ஏனையோரை வணங்காத திருச் சிரத்திலே பொருந்தி விளங்குஞ் சிறந்த திருமுடியையும் எ—று.

விளக்கம்;- 1 தூக்கு குண்டலம் தொட்ட பொற்குழைகளும் எனக் கூட்டியுரைக்க. தூங்கு எனற்பாலது தூக்கென வலித்தல்விகாரம் பெற்றது.

2. குழைகள் — காதுகள். குண்டலம் — சுறுமீன்வடிவாகச் செய்யப் பெற்று ஆண்கள் அணியுங் காதணி. சுட்டி – நெற்றி. ஈண்டு நெற்றியிலணியப்படும் இரத்தினச் சுட்டி என்னும் ஆபரணத்தைக் குறித்தது, வெண்ணீறு — அடியார்மேற் கொண்ட அளவிறந்த கருணையால் அவ்வடியாரது வினைவளம் நீறுகும்படி முருகப்பெருமான் தானே அணிந்தருளுந் திருநீறு. **சேகரம் - முடி.**

3. இல்வாழ்க்கை மூலம் யாவருக்கும் உலகபோகம் நிரம்புதற் பொருட்டுக் காமநுகர்ச்சியற்ற முருகக் கடவுளே போகியாயிருந்து மகளிர்மாட்டு வணங்கினன். முருகனேடு பிரிப்பின்றி நிற்கும் ஞானம் கிரியை என்னுஞ் சக்திகளே ஈண்டு மனைவியராக உபசரிக்கப்பட்டன. இவ்வாறு முருகன் இல்வாழ்க்கையை வாழ்ந்து காட்டாவிட்டால் இரு நிலத்தோர் யோகெய்தி விடுவர் என்பது நிச்சயம். "ஆகத்து மென்மையின் மகளிர்க்கு வணங்கி" எனப் புறநானூற்றிலும் வருதல் காண்க.

4. ஆன்ம எழுச்சிகளை நெறிப்படுத்தி ஆர்வலர் ஏத்த, அன்பருக்கன்பனுன அறுமுகப்பெருமான் அவர்களைத் தேடிக், காடும் புனமுங் கடந்து, ஞானசாரியனுக வந்து, "ஒன்றியிருந்து நினைமின்கள் உந்தமக்கு ஊனமில்லை", "இரண்டுற மனம்வையேல்" என்பன போன்ற வாசகங்களாற் பராமுகந்தவிர்க என ஞானஉரை பகர்தலே மகளிர்மாட்டு வணங்குதல் என்பதன் உட்பொருள். குருவாய்வந்து உபதேசஞ் செய்தவற்றைப் புறக்கணியா நின்ருள் வள்ளி. அப்பொழுதும் முருகன் புறக்கணியாது நின்று உபதேசஞ் செய்தார். புராணகாரர் புறக்கணியாநின்ற முருகனை, வெளிப்பட வேங்கை மரமாக நின்ருன் என்ருர். புறம் - வெளி; கணி - வேங்கை மரம்.

5, (25 ஆம் அடிமுதல் 60ஆம் அடி முடியவுள்ள) 36 அடிகளில் அறுமுகப் பெருமானுடைய 12 திருஉறுப்புக்கள் கூறப்பெற்றுள்ளன. அவற்றுள்ளே திருமுகம் அங்கம்; ஏனையவை பிரத்தியங்கம்; ஆயுதங்கள் சாங்கம்; சிலம்பு கடம்பு முதலியவை உபாங்கம். இவற்றின் விரிவைச் சிவஞான சித்தியார் (செய்யுள் 67) திருவிளங்கம் உரையிலும், வாதுளம், "அங்க பிரத்தியங்க ஸாங்கஞ்ச உபாங் ஞ்ச" என்று தொடங்கும் அடிகளிலுங் காணலாம். அருள் வடிவான இவை ஒருங்கு சேர்ந்து அருளுருவான குருவடிவாயின.

6. "அந்தமில் ஒளியின் சீரால், அறுமுகம் படைத்த பண்பால்
எந்தைகண் நின்றும் வந்த இயற்கையாற், சத்தி யாம்பேர்
தந்திடும் பனுவல்பெற்ற தன்மையால் தனிவேற் பெம்மான்
கந்தனே என்ன நின்னைக் கண்டுள கவலை நீத்தோம்" என்ற

வீரவாகுதேவர் கூற்றுக்கிணங்க, முருகப்பெருமானுக்குப் பதிலாக வேலை வைத்து வணங்கும் வணக்கமுறையும் உண்டு. வேலாயுதம், பக்குவான்மாக்களுக்கு முத்திகொடுக்கும் இச்சாசத்தியும் அதற்கு வேண்டியவற்றை அறியுஞ் ஞானசத்தியும், அறிந்தவற்றைச் செய்யுங் கிரியா சத்தியுமாகிய மூன்று சத்திகளினதும் அடுக்குவடிவங்

கொண்டது. நூலாசிரியர் திருவடி முதல் திருமுடியீருகவுள்ள பன்னிரண்டு உறுப்புக்களும் படிப்படியே ஒன்றன்பின் ஒன்ருக ஆழ்ந்து அகன்று நுண்ணிதாயுள்ள மூவடுக்கு வேல்வடிவம் அமையவே கூறியுள்ளார் என்பதைத் தியானபாவனையால் உணர்க. நூலில் வேலை எடுத்துக் கூருமையுமறிக.

## ஏறுமயில் ஏறிவருங் காட்சி

61 மகபதி மகளும் வள்ளியந் திருவுஞ்
சுகமணஞ் சூட்டுந் தொங்கலுங் கடம்புங்
கோதைசூழ் அன்னோர் கொங்கையாற் பூசும்
ஏதமில் சுகந்த லேபனப் பூச்சு(ம்)

பொ - ரை:- இந்திரன் வளர்த்த தெய்வயானையம்மையாரும் (வள்ளிக் கிடங்கிலே தோன்றிய) வள்ளிநாயகியாரும் திருக்கலியாணத்தின் பொழுது சூட்டும் (நன்மணங் கமழும்) மணமாலைகளையும், செங்கடப்ப மலர்மாலையையும், பூமாலையை அணிந்த மனைவியர் இருவராலுந் தனவன்புறக்கதிராலே தடவப்பெற்ற குற்றமற்ற வாசனை கமழும் (சந்தன குங்குமக் கலவையாகிய) வெளியே தெரியும் பூச்சினையும் எ-று.

விளக்கம்:- 1. மகபதிமகள்:- மகபதி - இந்திரன்; மகம் - யாகம்; இந்திரன் நூறு வேள்விகள் செய்தவனுகையால் ''சதக்கிருது'' எனப்படுவான். தெய்வயானை அம்மையார் இந்திரனுடைய ஐராவத யானையால் வளர்க்கப்பெற்றவர் உபசாரமாக இந்திரன் மகள் என்பர். ஆகமநெறியாற் பக்குவமெய்திய உயிரினைத் தெய்வயானை என்பது தத்துவம். இந்திரன் – மலங்களின் நீங்கிப் பதமுத்தி பெற்ற ஆன்மா. முருகன் கிரியாசத்தியையுடையவன் என்பதைச் சுட்டியவாறு.

2. வள்ளியந்திரு:- 'வள்ளிக்கிடங்கிலே மானீன்ற குழந்தை வள்ளியென நாமம் பெற்றது' என்பது புராணம். நம்பிராசனால் வளர்க்கப்பெற்றமையும், முருகனால் வலிந்து ஆட்கொள்ளப்பெற்றமையுந் தோன்ற வள்ளியந்திரு என்ருர். பத்தி நெறியாற் பக்குவ நிலையடைந்து பேரானந்தம் பெற்ற உயிர் வள்ளி. முருகன் ஞானகுரு என்பதை உணர்த்தினார்.

3. சுகமணம்- இன்பந்தருந் திருமணம். மணமாலை மார்பில் அணியப்பெறும்; சுகமணஞ்சூட்டுந் தொங்கல் - போகத்திற்

குரியமாலே. நக்கீரரும் ''மாலே மார்ப'' என்முர். மணம் - பக்குவான்மாக்களே விரும்பி ஆட்கொண்டு சுத்தநிலேயில் வாழவைத்தல்.

4. கடம்பு- செங்கடப்பமாலே. முருகன் தலேயிற்சூடும் அடையாள மாலே; இது முருகனது சொரூப இலக்கணங்களில் ஒன்முன ஞானத்தைக் குறிக்கும். கோதை என்றது, இல்வாழ்க்கை நிகழ்த்தற்பொருட்டு வதுவையின்போது முருகனது திருக்கரத்தாற் சூட்டப்பெற்ற மணமாலேயை. இலேபனம் - வாசனேயுள்ள சந்தன, குங்குமக்கலவைப்பூச்சு; திருமேனியிற் பூசப்பெற்று அழகு செய்வது. தானியம் நீக்கப்பெற்ற கம்புக்கொங்கையால் இலேபனப் பூச்சுப் பூசுவதுமுண்டு.

5. களவுமணத்தில் வள்ளியம்மையாரையும், கற்பு மணத்திலே தெய்வயானேயம்மையாரையுந் திருமணஞ்செய்து, களவுமணத்தின் வழி வந்ததே கற்புமணம் என்பதை உலகோர்க்கு முருகப்பெருமான் உணர்த்தியருளினுர்.

65 மரகதப் பொருப்பும் வயிரவான் பொருப்பு
நிரல்வல மிடமார் நெடியபொற் கிரிபோல்
அகிலமு மீன்ற அன்னேய ரிருவர்
மகிழ்வுற இருபால் மன்னிவாழ்ந் திருப்பப்
பன்னிறந் தளிர்க்கும் பச்சைவான் கிரிமேல்
துன்னிரு கோடி சூரியர் உதித்தாங்(கு)
அவரவர் அச்சம் அடுதிறல் மயூரக்
குரகதம் ஏறிக் குலவு காட்சியு(ம்)

பொ - ரை:- நீண்ட பொன்மலேயின் வலப்புறத்தும் இடப்புறத்தும் முறையே தங்கியுள்ள மரகதமலேயுஞ் சிறந்தவயிரமலேயும் போன்று உலகம் முழுவதையும் பெருது பெற்றெடுத்த தாயரிருவரும் இருபக்கத்திலும் மகிழ்ச்சிகூர நிலேயாகப்பொருந்திப் பெருவாழ்வுற்றிருப்ப, பலநிற ஒளிவீசும் பெரிய பச்சைநிற மலேயின்மீது சூரியர் கோடிக்கணக்காஞேர் நெருங்கி ஒருங்கே உதயஞ் செய்தாற்போல அவரவர் மல மாயா கன்மங்களே வலிகெடுத்து வெற்றிகொள்ளும் மயிலாகிய ஆடும்பரிமீது ஆரோகணித்தருளி வெளிப்பட விளங்குந் திருக்கோலத்தையும் எ-று.

விளக்கம்:- 1. பொன்மலே செந்நிற முருகனுக்கும், மரகதமலே பச்சைநிற வள்ளிக்கும், வயிரமலே தூய ஒளிமேனியுள்ள தெய்வயானேக்கும் நிறஒப்புமை பற்றிவந்த வண்ண உவமைகள்.

பொருப்பு, கிரி என்பன மலையின் பரியாய நாமங்கள். பொற்கிரி- பொன்மலை.

2. முருகப்பெருமானுக்கு வலப்புறத்தே வள்ளிநாயகியும், இடப் புறத்தே தெய்வயானையும் அமர்ந்திருப்பர். திருமணவறையிலே தாலிகட்டுமுன் மணமகள் மணமகனுக்கு வலப்புறத்தும், தாலி கட்டியபின் இடப்புறத்தும் இருத்தப்படுதலையும் ஈண்டு நோக்குக. வள்ளி - ஞானசத்தி; தெய்வயானை - கிரியாசத்தி. பின்வருங் கச்சியப்பர் வாக்காலுமறியலாம்.

> கல்லகங் குடைந்த செவ்வேற் கந்தனோர் தருவ தாகி
> வல்லியர் கிரியைஞான வல்லியின் கிளையாய்ச் சூழப்
> பல்லுயிர்க் கருளைப் பூத்துப் பவநெறி காய்த்திட் டன்பர்
> எல்லவர் தமக்கு முத்தி யிருங்கனி உதவு மென்றும்
> (கந்தபுராணம்)

3. மயில் திரோதான சத்தி. மயிற்பீலியில் அமைந்துள்ள ஐந்து நிறமும் ஐந்து சுத்ததத்துவங்கள். அன்றி மயிலைப் பிரணவ ரூப மாகவும், மயிற்பீலியிலமைந்துள்ள ஐந்து நிறங்களையும் பிரணவ மந்திரத்திலமைந்தொளிரும் திருவைந்தெழுத்தாகவுங் கொள்வர்.

4. அவரவர் அச்சம் அடுதிறல் மயூரம் என்பது திரோதான சக்தி மலத்தைச் சார்ந்துநின்று மாயாகாரியங்களைக் காரியப்படுத்தி, ஆன்மாக்கள் கன்மங்களை நுகருமாறு செய்து பிறவியை நீக்கித், தத்துவங்களுக்கு அப்பாலுள்ள அருள்வெளியிலே ஒடுங்கச் செய் தலை உணர்த்தியது. ''சங்கிராம சிகாவல சண்முகனே'' என்றார் அருணகிரிநாதர்.

5. துன்னிருகோடி சூரியர் உதித்தாங்கு என்ற உவமை முருகனது சுயம் பிரகாசமான சொருபத்தை விளக்கியது. நக்கீரரும் ''பலர் புகழ் ஞாயிறு கடற்கண்டாங்கு'' என்ற உவமையாற் பச்சை மயிலிற் செவ்வேள் பவனிவருங் காட்சியை விளக்கியுள்ளார். பச்சை நிற மலையிற் செவ்வொளியாய்த் தோன்றுஞ் சூரியன், உலகிற் புற இருளை நீக்கி எங்குந் தன்னொளியை நிரப்புகின்றான். அவ் வாறே பச்சை மயில்வாகனத்தில் ஆரோகணிக்குஞ் செந்நிறமுரு கன் அகவிருளைப்போக்கிப் பக்குவான்மாக்களுக்கு ஞானஒளி யைக் கொடுத்து உய்விக்கின்றார். **மயூரக் குரகதம்** — மயிலாகிய குதிரை. ''பட்சியெனும் உக்கிரதுரகம்'' என்பது திருப்புகழ்.

6. ஆணவமலம் வலிகுன்றிய காலத்துச் சிவஞானம் மேலிட்டுப் பிரகாசித்தலை மயிலின்மீது முருகப்பெருமான் அமர்ந்தருளுங் காட்சி குறிக்கும். அக்காட்சி ஓங்காரத்தின் உள்ளொளிக்குள்ளே முருகன் உருவையுங் காட்டும். இருவினையொப்பு மலபரிபாகம் எய்திய பக்குவத்து திரோதான சத்தி அருட்சத்தியாகிக் குருவடியாய் வெளிவந்து அருள்புரியும். உபாசனு மூர்த்தியே குருவாய் வந்து அருளுதலை இதனை அடுத்துவரும் பகுதியிற்காண்க. அருணகிரி நாதருங், ''குருவாய் வருவாய் அருள்வாய் குகனே'' என வேண்டினார்.

7. ஈண்டுக் கூறப்பெற்றது மயூரவாகனர் என்னும் மூர்த்தமாம். சிவபெருமானுக்கு மகேசுரமூர்த்தம் 25 உள்ளவாறே முருகப்பெருமானுக்கும் ஞானசத்திதரர், கந்தர், தேவசேநாபதி, சுப்பிரமணியர், கஜாரூடர், சரவணபவர், கார்த்திகேயர், குமாரர், சண்முகர், தாரகாந்தகர், சேநாபதி, பிரமசாத்தர், கல்யாணர், பாலசுப்பிரமணியர், கிரௌஞ்சசத்துவஞ்சர், மயூரவாகனர் எனப்பதினாறு மூர்த்தங்கள் குமாரதந்திரத்திற் கூறப்பெற்றுள்ளன.

8. ''மரகதப் பொன்னுக மானுங் கேகயத்திற் கதிர்விரிக்கும் இளம் பரிதி போற்குலவும், கிரணவேல் விசாகன்'' எனச் செந்தூர்ப் புராணத்திற் கூறப்பட்டுள்ளதை இதனோடு ஒப்புநோக்குக.

9. முருகப்பெருமான் தன் சத்திகள் இருவரோடும் வேலோடும் மயில் மீதேறிவருங்காலை, அம்முருகனைக் கடவுளாகவும், வேலையும் துணைவியர் இருவரையும் அறிவு விழைவு செயல்களாகவும், மயிலினை வீடுபேறெய்திய உயிராகவுந் கொள்வதே சமய நூற்றுணிபு. பேரின்ப வேட்கையினர், இறைவன் அறிவை வேல் எனவும், அவ்வறிவுக்குட்பட்ட உயிரறிவை மயில் எனவுங் கொண்டு, வேலும் மயிலுந்துணை என எழுதியுஞ் சொல்லியும் வருவது வழக்காறுகும் என்பர்.

10. தியானபாவனை ஆரம்பத்தில் கடவுளின் அங்கங்கள் ஒவ்வொன்றையும் தனித்தனியாகத் தியானித்து. முதிர்ந்த நிலையில் திருவுருவம் முழுவதையும் தியானிக்கும் முறைபற்றியே திருப்பாதத்திலிருந்து திருமுடிவரை அங்கங்களைத் தனித்தனி வருணித்து முடிவில் முருகமூர்த்தியின் திருவுருவம் முழுவதையும் வருணித்துக் காட்டியுள்ளார்.

## குருவாய் வந்தருளுங் குகன்

73 கரந்தெனை யாளுங் கருணையாற் புவிமேற்
சரந்தரு மானுடச் சட்டை சாத்தி
அழியா ஒளிவந்து அழியா மொழியை
வழியா மொழிய வந்தனங் குருவாய்
ஆணவக் கடற்குள் அலைபடு துரும்பும்
பூணுறு மாயைப் புலிவாய்ப் பசுவுங்
கருமச் சூறைக் காற்றுறு சருகுந்
தருமிச் சுழலைச் சார்ந்திடும் எளியநின்
வருத்தங் குறித்து வருந்தேல் உனக்குத்
திருத்தகும் உணர்வு செப்ப வேண்டி
வந்தன முத்தி வழங்குதும் என்றான்,
அந்தநன் மொழிகேட்டு அன்பொடுந் துதிப்பேன்.

பொ—ரை:- (பத்தியுடன் வழிபட்ட தவத்தாலே) சுயஞ்சோதி மயமாண திருச்செந்தூர்ப் பெருமான் அடியேனை ஆண்டு அடிமை கொள்ளும் கருணையினால் (மேலே கூறப்பெற்ற) தனது திருஉருவத்தை மறைத்து, இந்தப் பூமியினிடத்தே சஞ்சரிக்கின்ற மானிடப் போர்வையில் மறைந்து என்முன்தானே தானாக எழுந்திருளி, அழிவில்லாத ஓர் வார்த்தையை உரிய விதிப்படி உபதேசிக்கக் குருவடிவாக வந்தோம்; ஆணவம் என்று சொல்லப்படும் பெரிய சமுத்திரத்தினுள்ளே கிடந்து அதன் அலையில் அகப்பட்டு அலமருஞ் சிறு துரும்பு போலவும், உடல் முதலியனவாகப் பூண்டுள்ள மாயையாகிய புலியின் வாயில் அகப்பட்டுத்தவிக்கும் பசுப்போலவும், கன்மமாகிய சுழல்காற்றில் அகப்பட்டுச்சுழலும் உலர்ந்த இலைபோலவும் பிறவித் துயரைத்தரும் இந்த நிலையற்ற பாசவாழ்வுச் சுழற்சியை நிலையெனப்பற்றி நிற்குந்தாழ் நிலையுடைய நீ உனது (தாபத்திரய) துன்பத்தை எண்ணிவருந்தாதே; பக்குவநிலையுள்ள உனக்கு முத்திச் செல்வத்தைத் தரத்தக்க மெய்ஞ்ஞானத்தை உபதேசிக்க விரும்பி(க் குருமூர்த்தமாக) வந்தோம்; (பாசநீக்கஞ் செய்து) சிவப்பேற்றை (அடையும் வழியைத்) தந்தருளுவோம்'' எனத் திருவாய் மலர்ந்தருளினார். நன்மைதரத்தக்க அத்திருவார்த்தைகளைக் கேட்டுப்பத்தியோடும் புகழ்ந்து தோத்திரஞ் செய்வேனாயினேன் எ—று.

விளக்கம்:— 1. பிறப்பு இறப்பினால் மலசத்தி தேய, விபரீத உணர்வு நீங்கும்; ஆன்மா பரிபாகம் அடையும். இந்நிலையை எதிர்பார்த்

திருக்கும் இறைவன், குருவடிவாக எழுந்தருளுவான். குருவாக வருபவர் பிறந்தவர், இருந்தவர், இறந்தவர் என்ற பேச்சுக்கே இடமில்லாதவர்; பிறப்பு இறப்பு அற்றவர். அவர் என்றும் எங்கும் உள்ளவர். மும்மலமுடைய சகலவர்க்கத்து ஆன்மாக்களின் இருவினையொப்பு, மலபரிபாகம் நோக்கி மானுடச்சட்டை சாத்தி அருள்புரிய வந்த பொருளைப், பக்குவான்மாக்கள் இவ்வாறே கொண்டு பத்தியைப் பெருக்கி உய்வடைவர். தூலவடிவு இருப்பினும் மறையினும், குருவருள் என்றும் ஒரு தன்மையாகவே இருந்து அடியார்களுக்கு வழிகாட்டும். சுயம்பிரகாசமான பரமசிவமே, சிவமாந்தன்மையுள்ள ஆன்மாவை உடலாகவும், அவ்வான்மாவின் சரீரத்தைச் சட்டையாகவுங் கொண்டு குருவடிவிற் காட்சி தரும். பார்வை மிருகத்தைக் கொண்டு அவ்வவ்வின வனவிலங்குகளை வசப்படுத்துவதுபோலச் செந்தூர்ப் பெருமான், அஞ்ஞான இருளின் வசப்பட்ட ஆன்மாக்களை அருள்வசப்படுத்தத் தமது சுய வடிவத்தை மறைத்தருளி மானிடச்சட்டை சாத்திக் குருவாய் எழுந்தருளினர்.

கண்ணுதலுங் கண்டக் கறையுங் கரந்தருளி
மண்ணிடையின் மாக்கள் மலமகற்றும்—வெண்ணெய்நல்லூர்
மெய்கண்டான் என்றொருகால் மேவுவரால் வேறின்மை
கைகண்டார் உள்ளத்திற் கண் —(இருபா இருபது)

2. இந்நூலாசிரியர் நந்தூரலே வாயில் நண்ணி - திருச்செந்தூரிடத்துச் சென்று, தலவாசஞ் செய்து, தீர்த்தமாடிக் குமரவேளைச் சரணடைந்து, சரியை ஆதி ஞானசாதன வழிநின்று மாதவஞ் செய்து செந்திலாண்டவரைச் சற்குருவாகப் பெற்றவர்.

''மூர்த்திதலந் தீர்த்த முறையால் தொடங்கினர்க்கோர்
வார்த்தைசொலச் சற்குருவும் வாய்க்கும் பராபரமே''
என்றார் தாயுமானவர்.

3. சரந்தரு மானுடச்சட்டை :- மானுடச்சட்டை - இறைவனுக்கு உயிர் உடலாகவே (மானுட) சரீரம், (உயிராகிய அவ்விறைவனின்) உடம்பின் வெளிச்சட்டையாகும்.

''அகளமாய் யாரும் அறிவரி தப்பொருள்
சகளமாய் வந்ததென் றுந்தீபற'' என்பது திருவுந்தியார்.

''அருவனுய் நின்றானை ஆரறிவார் தானே
உருவனுய்த் தோன்றிலனேல் உற்று'' என்ற சிவஞானபோத வெண்பாவின்படி மானுட உருவமான நமக்கிரங்கி இறைவனும்

உருவத்திருமேனி கொண்டு வருகின்றான். "தீவகமாம் என உருவாய் வந்து" என்பது சிவப்பிரகாசம்.

4. அழியா ஒளி வந்து அழியாமொழியை வழியாமொழிய வந்தனங் குரு வாய்:- அழியா ஒளி - சொரூப இலக்கணம்; சுயம்பிரகாசம் என்ற படி. "பருவங் குறித்துப் பரம ஒளிவந்திவ்
வுருவந் தரித்தால் ஒருதவந்தான் வேணுமோ"

— அநுபூதிவிளக்கம்.

அழியாமொழி என்றது ஞானசற்குருவின் வேத ஆகம சாத்திர உபதேசமும், மலத்தை ஒழிக்கும் 'சும்மாஇரு' போன்ற ஒரு மொழி யுமாம். ஒருமொழி ஞானத்திற்கு ஏதுவானது; சகல வேதாகமங் களின் பரமரகசியமானது; அநுபவத்தால் மட்டும் அறியக்கூடி யது; குருகடாட்சம் பெற்ற அக்கணமே அறியக்கூடியது; தெய்வ பத்திபோலக் குருபக்தி உள்ளவருக்கே விளங்கக்கூடியது.

"சீரா மறையுஞ் சிவாகமமுஞ் செய்நூலும்
ஓரா வுணர்வும் ஒருமொழியாய்த் தந்தவர்"

— நிகழ்காலத்திரங்கல்

"ஒருமொழி யாலே சுருதியா கமநூல்
உயர்பு ராணமுமெலாம் ஒழியும்
ஒருமொழி யாலே சரியைநற் கிரியா
யோகபா வனையெலாம் ஒழியும்
ஒருமொழி யாலே யண்ட பூதங்கள்
ஒடுங்கிடுந் தன்னிலை தோன்றும்
ஒருமொழி சும்மா விருத்தலா மதனல்
ஒப்பிலாச் சிவபத மடைவார்"—நிட்டானுபூதி சாரம் 15.

5. வழியா மொழிதல் - தீட்சைக் கிரமத்தில் (படிக்கிரமமாக) உப தேசித்தல். சகலவர்க்கத்து ஆன்மாக்கள் பக்குவமெய்திய இடத்து, இறைவன் மானிட வடிவத்திற் குருவாக வந்து உபதேசமுகத்தால் மெய்ஞ்ஞானத்தை யுணர்த்துவார்; மலமகற்றித் தாளுக்கி அருள் புரிவார். "தம்முதல் குருவுமாய்த் தவத்தினில் உணர்த்த" என் றார் மெய்கண்டார். கு - அஞ்ஞானம்; ரு - ஒழிப்பது. குரு - அஞ் ஞானத்தை (ஞானத்தால்) ஒழிப்பவன். வள்ளியை மணம்புரிய முருகன் அவளைத் தேடி வந்த கதையின் தத்துவமும் இதுவே.

6. ஆணவக்கடல்... சருகும்:- ஆணவக்கடல், மாயைப்புலி, கருமச் சூறை என்பன உருவகங்கள். துரும்பு - சிறுபுல், கூளம். கடல் ஆணவத்திற்கும், கடலலே பிறவிக்கும், துரும்பு ஆன்மாவுக்கும் உவமை. கடலலேப்பட்ட துரும்பு மோதப்பட்டு மேலுங் கீழும் அலேதல்போலப், பிறவி வாய்ப்பட்ட உயிர் சுவர்க்க நரகங்களிற் சுழலும். புலிவாயிலகப்பட்ட பசு உயிர் பிழைத்தல் அரிது. அது போல மாயையிலகப்பட்ட உயிர் மீள்வதரிது. புலி தோற்றத்தில் அழகியதாயினும் செயலிற் கொடியது. அதுபோலவே நல்ல கவர்ச்சியாய்த் தோன்றும் மாயையும், பிறவியாகிய கொடிய வருத்தத்தைச் செய்யும். நல்லதுபோலத் தோன்றித் தீமை செய்தலில் புலி மாயைக்கு உவமை, ''எழின் மாயை'' என்ருர் உமாபதி சிவம். மாயா:- மா - மறைதல்; யா - தோன்றுதல்; மறைவு தோற்றங்களுக்கு முதற்காரணமாயுள்ளது. ''உலகமெல்லாம் அதன் உறுப்புக்களே'' என்கின்றது சுவேதாசுவதர உபநிடதம்.
வலிய சூறைக்காற்று உலர்ந்த சருகைத் தான் நினைத்தவண்ணம் மேலுங் கீழும் வட்டமாகச் சுழற்றி வெவ்வேறிடங்களில் இடுவது போலக் கன்மமலமும் உயிரைக் கொள்ளிவட்டமுங் காற்ருடியும் போலச் சுழற்றிச் சுவர்க்கம், பூமி, நரகம் ஆகிய வெவ்வேறிடங்களில் இடும்.

7. தருமிச் சுழலே...... வந்தேன்:- சுழல் - இறப்புப் பிறப்புக்களால் விடய போகங்களேப் பற்றுதலும் விடுதலுமாக மாறிமாறி மனஞ் சுழலுதல். எளிமை - தாழ்நிலே; கீழ்நிலே. பாசத்தைச் சாராது திருவருளேச் சார்ந்தாலே துன்பமில்லே. ஆன்மா அநாதியே பாசத்தைச் சார்ந்துள்ளது. வருத்தங்குறித்து வருந்தேல் என்பது, 'அஞ்சலோம்பு மதி' (முருகு) என்ருற்போல நின்றது.

8. உனக்கு... வழங்குது* என்ருன்:- அருட்சார்பு உணர்ந்து பாசச்சார்பு கெட ஒழுகுதலே உணர்த்தவே வந்தேன் என்பார் திருத்தகும் உணர்வு செப்ப வேண்டி வந்தனம் என்ருர். இது ஞானதீட்சை செய்தலேக் குறிப்பாலுணர்த்திற்று. திரு - முத்தித் திரு; 'சென்றடையாத திரு' என்பது தேவாரம். தகும் உணர்வு - அருளுணர்வு; பதியை அறியும் அபரஞானம். இது குருவின் உபதேசத்தால் வருவது. உயிர் தாஞக அறியாது; அறிவித்தால் அவனருளே கண்ணுகக்கொண்டு காணும். ஆதலின் செப்ப வேண்டி வந்தனமென்ருர். பின்பும் 'திருவருள் பதிக்கத் தேடி வந்தனம்' (அகவல் அடி 296) என்பர்.

9. தூல அறிவுள்ள சகலர்க்குக் குருவினுல் முத்தி கைகூடும். கேட்பித்து, சிந்திப்பித்து, தெளிவித்து முத்தி வழங்குதும் என்பது குறிப்பு. மந்த சத்திநிபாதத்தாற் சீவன்முத்தி நிலேயும், தீவிரத்தால் அபரமுத்தி நிலேயும், தீவிரதரத்தாற் பரமுத்தி நிலேயும் வழங்குதும் என விரிக்க.

10. எளிய நின் வருத்தம் என்பது முதல், முத்தி வழங்குதும் என்பது முடியவுள்ள பகுதி இந்நூலிற் கூறப்பட்டவற்றை இரத்தினச் சுருக்கமாகத் தொகுத்துக் கூறுகின்றது. எளிய நின் வருத்தங் குறித்து வருந்தேல் என்னுங் கூற்று, தீட்சைப்பகுதியில் விரித்துக் கூறப்படுகின்றது. உனக்குத் திருத்தகும் உணர்வு செப்பவேண்டி வந்தனம் என்னுங் கூற்று, உபதேசப்பகுதியில் விரித்துக் கூறப்படுகின்றது. முத்தி வழங்குதும் என்னுங் கூற்றை அநுபூதிப்பகுதி விரித்துக் காட்டுகின்றது. தீட்சை கேட்டல்; உபதேசம் சிந்தித்தல்; அநுபூதி தெளிந்து அனுபவப்பட்டது கூறுதல்.

## 2. தீட்சை

85 கற்பக வனம்போற் கமழ்பூங் காவிற்
பொற்புற விளங்கும் பொலன்மணிக் கனகப்
பன்னக சாலேயுட் பதுமபீ டிகைமேல்
துன்னுபூந் தருக்கள் சூழ்கற் பகம்போற்
சங்கமீன் ஞப்பண் தயங்குவெண் மதிபோல்
அங்கை கூப்பி அடியர்நின் றேத்த
இனிதெழுந் தருளி

பொ—ரை:- கற்பக தருக்களின் கூட்டம்போல் வாசனே வீசுகின்ற பூஞ்சோலேயினிடத்து, மிக்க அழகுடன் விளங்குவதும், பொன்னும் நவரத்தினங்களுங்கொண்டு அமைத்த சொர்ணமயமானதும், இலேயால் வேயப்பெற்ற பூங்கோயிலினுள்ளே அமைக்கப்பெற்றதுமான திவ்விய தாமரைப்பூந்தவிசின் மீது, நெருக்கமான (மந்தாரம் முதலிய அழகிய) பூந்தருக்களாற் சூழப்பெற்ற கற்பகதருப்போலவும், கூட்டமான நட்சத்திரங்களின் நடுவே தோன்றும் வெண்ணிலா எறிக்கும் பூரண சந்திரன்போலவும் அடியார் பலர் அழகிய கைகளேக் குவித்து (சூழ) நின்றுபோற்ற (அவர் நடுவே ஞானசாரியர்) மகிழ்ச்சியுடன் (யோகாசனமாக) அமர்ந்தருளி எ—று.

விளக்கம்:- 1. கற்பக வனம்போல்:— வனம் - கூட்டம். கற்பகவனம் கற்பகதருக் கூட்டம்- கற்பகம் ஐந்தருக்களுள் ஒன்று; கேட்டதைக் கொடுக்குந் தன்மையுள்ளது. ஐந்தருக்களாவன கற்பகம், மந்தாரம், சந்தானம், பாரிசாதம், அரிசந்தனம் என்பனவாம்.

2. பொற்புற... சாலையும்:- பொற்பு—அழகு. பொலன்—பொன். 'பொலனென் கிளவி பொன்னென்றாகும்' (தொல்.) பன்னகம் - இலை. விளங்கும் பீடிகை, கனக பீடிகை எனப் பீடிகையோடு ஏனையவற்றையுங் கூட்டுக. பன்னக சாலையே தீட்சைமண்டபமாகிய பூங்கோயில். தீட்சைக்காலத்திற் குரு செம்பட்டு உடுத்துச் செங்கழுநீர் மாலை சூடவேண்டுமென்பது விதி.

3. பதும பீடிகை... எழுந்தருளி:- பதுமம் - தாமரை; பீடிகை - ஆசனம். பதும பீடிகை - பத்மாசனம். பத்மாசனத்திலே தெற்கு நோக்கி யோகாசனமாக இருந்தருளினர். ஏத்த, பீடிகைமேல் எழுந்தருளி என முடிக்க. அடியார் நடுவே ஞானகுரு எழுந்தருளியிருக்கும் அருட்காட்சியானது, பூந்தருக்கள் நடுவே கற்பக தருப் போன்றும், நட்சத்திரங்களின் நடுவே பூரண சந்திரன்போன்றும் அழகுசெய்தது.

91 .. ..................என்முக நோக்கிப்
புனிதநீ ராடப் போகென மொழிந்தான்
நீரிடை மூழ்கி நெடுங்கலை யணிந்து
சார்தலும் ஓமச் சடங்குக ளியற்றி
வெண்ணீ றணிந்து விதியெழுத்(து) அஞ்சுந்
தெண்ணீர் மையினிற் செவியிற் புகட்டி
அறுகெரு வுடன்கை யள்ளுநீ ருடனென்
மறுகுடல் ஆவி வான்பொருள் கொண்டான்

பொ...ரை:- அடியேன்பால் திருக்கண் சாத்தியருளி, 'சென்று தூய நீராடி வா' வெனத்திருவாய் மலர்ந்தருளினர். தூயதண்ணீரிலே தோய்ந்து, நீண்ட வெண்ணிற இரட்டையாடை தரித்து, (குருவின் திருமுன்னிலையில் மிகச் சமீபத்தில்) வந்து சார்ந்து வணங்குதலும்; (அவர் ஔத்திரி தீட்சைக்கு வேண்டிய) ஓமக்கிரியைகளைச் செய்து, திருநீற்றினை (மூன்று குறியாக) எனக் கணிந்து, வாசக தீட்சைக்குரிய கிரமப் படி திருவைந்தெழுத்தையும் தெளிவுதருந் தன்மையோடு என் செவியிலே கேட்குமாறு உபதேசித்தருளினர். இவ்வாறு ஆணவத்தைப்

பற்றறச் செய்ததோடு. பாத்தியத் திரவியம் ஊறவிட்டுக் கையிலள் ளிய அந்த நீருடன் சுழலும் உடல் பொருள் ஆவி மூன்றையுந் தாரை வார்த்துக் கொடுக்க, அவற்றை ஏற்று என்னை ஆட்கொண்டருளினார். எ — று.

**விளக்கம்:-** *1.* **என்முகம் நோக்கி...... மொழிந்தான்:-** என்முகம் நோக்கி என்பதால் நயன தீட்சையைக் குறிப்பாற் பெறவைத் தார். புனிதநீர் — தீர்த்தம். போகென என்பதில் அகரம் விகா ரத்தால் தொக்கது.

2. **நீரிடை மூழ்கி நெடுங்கலை அணிந்து சார்தலும்:-** நீராடலாலே தேகசுத்தியாக, மனோசத்தி வலுத்துத் தியானம் நிலைக்கும். நெடுங் கலை - நீண்ட ஆடை. ஈண்டு வெண்மையான இரண்டு உடையைக் குறித்தது. இரண்டு வெண்துகில் உடுத்தல் சுசியுடைமைக்கும், சாத்துவிக சம்பந்தத்திற்கும் அறிகுறி. நீண்ட ஆடை தரிப்பதனால் வெளியிலிருந்து தேகத்துட் செறியுஞ் சத்தியும், தேகத்திலிருந்து வெளியே செறியுஞ் சத்தியும் மாறாது ஒத்து நிற்கும். ஓரத்திலே கோடிட்ட வெண்மையான ஆடை அணிவதால் ஆன்மசத்தி அதி கரிக்கும். சார்தல் - குருசந்நிதிக்கு அதிசமீபமாதல்; அபிடேக அருச் சனைகள் செய்தற்பொருட்டும், திருவடிப்பேற்றின் பொருட்டும் அருகே சமீபமாய் நிற்றல் வேண்டும்.

3. **ஓமச்சடங்குகள் இயற்றி:-** ஓமம் - யாகம்; சடங்குகள் - (யாகக் கிரியைகள். ஓமச்சடங்குகளுடன் சேர்த்துச் செய்யப்படுந் தீட்சை ஔத்திரி தீட்சைஎனப்படும். ஓமம், வேள்வி, யாகம் என்பன ஒரு பொருட் சொற்கள். வேதாங்கங்கள் ஆறிலும்-சட்அங்கங்களிலும் கூறப்பெற்ற கிரியைகளாதலின் சடங்குகள் எனப்பட்டன. குண் டம், மண்டலம், அங்கி, நெய், சுருக்கு, சுருவம் என்பன புறத்தே அமைத்துச் செய்யப்படும் ஔத்திரி கிரியாவதி; அகத்தே அமைத்துச்செய்யும் ஔத்திரி ஞானவதி.

4. **வெண்ணீறணிந்து:-** வெண்மை புண்ணியத்திற்குரிய நிறம். புண் ணிய சம்பந்தமான பேரின்ப வீட்டிற்கு வாயிலான தீட்சையில் வெண்ணீறும் வெண்துகிலும் அணிவர். நீரிலே குளித்ததற்கு மேலுந் தூய்மை செய்தற்பொருட்டு நீறணிவர். நீறணிவார் வினை நீறும். 'நீறணிவார் வினைவளம் நீறெழ நீறணி யம்பலவன்' (திருக் கோவையார்). வெண்ணீறு ஞானக்கினியினாலே தகிக்கப்பெற்ற பசுமல நீக்கத்தில் விளங்குஞ் சிவத்துவப் பேற்றிற்கு அறிகுறி

என்பர் ஸ்ரீலஸ்ரீ ஆறுமுகநாவலர்பெருமான். விபூதி மோட்ச சாதன மென (பதின்மூன்று) உபநிடதங்கள் கூறுகின்றன.

5. விதியெழுத்து...செவியிற் புகட்டி:- விதி-அவரவர் பக்குவத்திற் கேற்ப, நகராதி சிகராதியாகப் பீசமின்றியும், பீசத்தோடும் பிரணவத்தை முன்னே வைத்து உபதேசிக்கும் முறை. தெள்நீர்மை-கேட்டுச், சிந்தித்துத், தெளிவடையக் கூடிய தன்மை. செவியிற் புகட்டி - வலக்காதிலே தேசிகர் தமது திருவாயை வைத்து ஏனையோருக்குக் கேட்காது மெதுவாகக் கூறி. செவியுற என்றும் பாடம்.

6. அறுகெருவுடன்...... கொண்டான்:- ஞானசாரியனுக்குச் சீடன் தன்னுடல், பொருள், உயிர்களை ஒப்புவித்து ஆத்தும நிவேதனஞ் செய்தமையைக் குறித்தது. (அறுகு, சந்தனம், வெண்சிறுகடுகு, இலாமிச்சை வேர், இஞ்சி, குங்குமம் என்னும் பாத்தியத் திரவியங்களின் தொகுதியை அறுகெரு என்பதனுற் குறித்தார். எரு-தொகுதி; பலவின் ஈட்டம். இத்திரவியங்கள் ஊறிய நீரைக் கையிற் கொண்டு ஆத்ம நிவேதனஞ் செய்வர். ஊறிய என்ற சொல் இசையெச்சத்தாற் கொள்ளப்பட்டது. அறு+கெருவுடன் எனக் கொண்டு அகத்தே அறச்செய்யும் இருவகைப் பற்றுக்களோடு எனவும் பொருள் கொள்க. கர்வம் என்னும் ஆரியச்சொல் கெர்வம் என முதல் எழுத்து வேறுபட்டுத் தமிழ் மொழியிற் கெருவம் என ஆகி, விகுதி குன்றிக் கெரு என நின்றது. கெர்வம் - அகங்கார மமகாரங்களாகிய இருவகைப்பற்று. இக்காலத்திற் கெறு எனவும், கெறுவம் எனவும் வழங்குகின்றது. குரு ஆணவமல வலிமையை அறச் செய்ததோடு, உடல் பொருள் ஆவிகளைத் தன்வசமாக்கியமை இத் தொடராற் குறிக்கப்பெற்றது. ''என் உடல் பொருள் ஆவிமூன் றுந் தன்னத்தம் வாங்கிக்கொண்ட சற்குரு'' —நற்சிந்தனை.

7. மணிவாசகரும், ''அன்றேயென்தன் ஆவியும் உடலும் உடைமையெல்லாமுங் குன்றேயனையாய் எனையாட் கொண்டபோதே கொண்டிலையோ'' என்று கூறியதையும் அறிக.

99 பரவுசஞ் சிதநம் பார்வையால் ஒழிந்த
விரவுமுற் பவங்கள் வினையுடம் பளவில்
அத்தன் அருண்மேல் ஆகா மியங்கள்
பற்றில நினது பண்புபோ லிருந்த
நம்பெரு வடிவை நாடுகென் றருளித்
தம்பொற் கரமலர் என்தலை தீண்டி

முழுநிலம் புரப்ப முடிசூட் டுவபோற்
செழுமணிப் பதமென் சிரமிசைப் பொருத்திப்
பாத தீர்த்தம் பரிகல சேடம்.
ஆதரக் குழவிக்(கு) அன்னைபோல் அருத்தி

பொ - ரை:- 'புத்தி தத்துவத்தை ஆதாரமாகக்கொண்டு மாயையிலே' (அத்துவாக்கள் தோறும்) பரந்துள்ள உனது சஞ்சிதவினை முழுவதும் நாம் (உன்மீது கொண்ட கருணையால்) நயனதீட்சை செய்யவே (ஞானக் கினியாலே தகிக்கப்பட்டு) அழிந்தன; எடுக்கும் பிறவிகளுக்குக் காரண மானதும், எடுத்த பிறவியில் அனுபவித்தற்குரியதுமான பிராரத்த கன்மங்கள் இவ்வுடல் நீங்கும்பொழுது அதனோடு அநுபவிக்கப்பட்டு அழியும்; சிவனருள் புத்தியிற் பதிதலாலே (சீவபோதமுஞ் சிவபோத மாய்ச் சீவச்செயலுஞ் சிவச்செயலாய் முடிதலின்) புதிதாக ஆகாமிய வினைகள் ஏறா. உன்னுடைய இயல்புபோல மானுடப் போர்வையில் எழுந்தருளியிருக்கின்ற நமது குருவடிவை (மலவாதனை தாக்காதிருத் தற் பொருட்டு) நினது மனதிற் பதித்துப் பாவனை செய்வாயாக' என்று சாத்திர தீட்சை செய்தருளித் தமது அழகிய மலர் ஏந்திய திருக்கரத்தால் எனது புற்கென்ற தலையிலே தொட்டும், அனைத்துல கையும் ஆட்சி செய்தற் பொருட்டுச் சிரசிலே முடிசூட்டுவதுபோன்று அருள் வளம் பொருந்திய அழகிய திருப்பாதங்களை அடியேனது தலை யிலே சூட்டியும் பரிசதீட்சை செய்தருளி, திருப்பாதத்தில் அபிடேகஞ் செய்த திருமஞ்சன நீரையும், பரிகலத்தில் எஞ்சியிருந்த திருவமுதையுந் தான் பெற்ற அன்புக் குழந்தைக்குத் தாயூட்டுவதுபோல உண்பித்தருளி எ—று.

விளக்கம்:- 1. கன்மமலம் எனப்படுவது, உயிர்கள் மனம் வாக்குக் காயங்களாகிய முக்கரணங்களாலுஞ் செய்துகொண்டவை. எடுத்த பிறப்பிலே புதுக்கச் செய்யப்படும்பொழுது ஆகாமியம் எனவும், இவ்வாறு பல பிறவிகளிலே செய்யப்பட்டுப் பரிபாகப்படும் வரையும் புத்தி தத்துவம் பற்றுக்கோடாக மாயையிலே கிடக்கும் பொழுது சஞ்சிதம் எனவும், சஞ்சித கன்மங்களுள்ளே பக்குவ மானவை மேலெடுக்கும் உடம்பையும் அவ்வுடம்பினால் அநுபவிக் கப்படும் இன்பதுன்பங்களையுந் தந்து பயன்படும்பொழுது பிரா ரத்தம் எனவும் பெயர்பெறும். என் செயலாவது யாதொன்று மில்லை; எல்லாமவன் செயல் என்ற உணர்ச்சிவழி ஒழுகுவதால் ஆகாமியமாகிய நல்வினை தீவினைகள் உயிரைப்பற்றாமல் இறை வனால் ஒழிக்கப்படும். விருப்பு வெறுப்பற்றுச் சிவார்ப்பணமாகச் செய்யப்படுதலால் ஆகாமியம் ஏறாது. கடவுண் மாமுனிவரும்.

''விரிந்த சஞ்சித வினைகளன் புடனும் விழிக்க வெந்தன
விரவுமிப் பிறப்பிற் பொருந்தும் வல்வினை யுடலுட னகலும்
புந்திசேரருள் வருவினை போக்கும்'' என்றதுங் காண்க.

2. நயன தீட்சை:- குரு, சீடன் கையில் மணமுள்ள மலரைக் கொடுத்துத் தன்னைப்பார்த்துப் பாவிக்கச்செய்து, தான் அச்சீடன் சஞ்சித வினையினின்றும் நீங்கினனாகப் பாவித்து, ஆறு அத்துவாக்களிலு முள்ள அநுபவம் நீங்கியதாக ஆறுமுறை பார்த்தல்.

3. நினது பண்பு-மானுட வடிவில் வந்து ஆட்கொள்ளும் பண்பு. நாடுக-பாவனை செய்க. (வாசனாமலம் தாக்காதிருத்தற்பொருட்டுக் குருவைச் சிவமாகப் பாவனை செய்தல்) புறத்தேதோன்றுங் குருவே உயிர்க்குயிராய் இருக்குஞ் சிவம் என ஞானநாட்டம் உறுக என்ற தாம். சிவோகம் பாவனை செய்ய இயலாதவர் குருவே சிவமெனப் பாவனை செய்வர். ''இங்குனைப் போலிருந்த நங்குருவடிவை நின் கருத்தினிருத்துவாய்'' எனத் திருவாதவூரடிகள் புராணத்திலுங் கூறப்பட்டது. ''தெளிவு குருவுருச் சிந்தித்தல் தானே'' என்பார் திருமூலர். ''குருவைச் சிவமாகக் காண்பார்க்குங் காணலாந் தன்மையனே'' என்பது அற்புதத்திருவந்தாதி (17).

''கண்டத்தைக் கொண்டு கருமம் முடித்தவர்
பிண்டத்தில் வாரார் என்றுந்தீபற
பிறப்பிறப் பில்லைஎன் றுந்தீபற'' - திருவுந்தியார்.

4. தம்பொற்கரமலர் .. சிரமிசைப் பொருத்தி:- சிவகரமாக்கப்பட்ட தனது வலக்கரத்திலே பூவைத் தாங்கிச் சீடனின் சிரசிலே தொட்டுக் கையாற் பரிசதீட்சை செய்யப்படும். பாதம் சிரமிசைப் பொருத்து தல் திருவடிதீட்சை. திருவடி தீட்சைக்கு நயனதீட்சை இன்றி யமையாமையின் அது முதலிற் செய்யப்பெற்றது. திருவடிகளாற் பரிசித்தலைத் திருவடி தீட்சை என்பர். உள்முக விசாரணையான சுவாநுபூதியில் எழுகின்ற சங்கற்பத்தை நசிப்பதற்காகத் திருவடி தீட்சை செய்யப்படும். குரு தமது திருக்கரம், திருவடிகளாற் பரிசித்துச் சீடனது ஆணவமலத்தை நீக்குதல் பரிசதீட்சை எனப் படும். ஞானம் கிரியைகளே திருவடியாதலின், ஞானசத்தியால் ஆணவமல சத்தியைக் குன்றுவித்து, கிரியா சத்தியால் ஆகாமிய சஞ்சிதங்கள் தகிக்கப்பட்டு வீடுபயத்தலின் திருவடிதீட்சையைச் சிறப்பாக எடுத்துக் கூறுவர். சித்தவட மடத்திற் சுந்தரருக்கும், திருநல்லூரில் திருநாவுக்கரசருக்கும் திருவடி தீட்சை செய்தமை யையும் ஈண்டுக் கருதுக. செழுமணிப்பதம் என்பது, பாந்தளஞ் சுடிகைப்பன்மணி (அடி 31) யை ஞாபகப்படுத்தியவாறுமாம்.

5. **பாததீர்த்தம்... அருத்தி;-** பாததீர்த்தம் என்றது, குருவினது பாதங் கழுவிய புனித திருமஞ்சனநீரைத் தத்துவங்களுக்குச் சுத்திவரும் பொருட்டு ஏற்றுப் பருகுதல். ஸ்ரீலஸ்ரீ ஆறுமுகநாவலர் இதுவும் ஓர்வகைத் தீட்சை என்பர். பரிகலம் - உண்கலமான வாழைக் குருத்து. பரிகலசேடம் - மகாத்மாக்கள் அமுது செய்த பரிகலத்தில் எஞ்சிய நிருமாலியம்; ஈண்டு பாதபூசைக்கான நைவேத்தியத்தில் எஞ்சியதே பரிகலசேடம் எனப்பட்டது. ''சித்தந் தெளிந்தவர் சேடம் பருகிடின் முத்தியாமென்று மூலன் மொழிந்ததே'' - (திருமந்திரம்).

## சைவ அநுட்டானம்

109 குருபதம் பணிதல் குஞ்சர முகனைக்
கருதல் சங்கற்பம் கங்கையின் பூசை
திருந்துமுத் திரைகள் திக்குபந் தனநீ(டு)
அருந்துயர் நீக்கும் அத்திர சந்தி
தத்துவத் திரயந் தாளத் திரயஞ்
சுத்தா சமனம் தொடுமிடந் தொடுகை
கரமுடன் அங்கங் கருதிடு நியாசம்
விரவு தருப்பணம் விளங்குநீ(று) அணிகை
அஞ்செழுத்(து) ஓதி ஆதவற் பணிதல்
விஞ்சுமா கமத்து விதிமுறை முடித்துப்
பண்டையோர் நம்மைப் பரவுசொற் பாடல்
கொண்டுநீ துதிகள் கூறென விளம்பி

**பொ—ரை:-** கணபதி வணக்கம், சிவகுரு வணக்கம், (சந்தியா வந்தனஞ் செய்கின்றேனென்று) தீர்மானஞ் செய்தல், நீர்ச்சுத்தி, (அவ்வக் கிரியைக்கு) உரிய முறைப்படி முத்திரைகள் காட்டுதல், (அசுரராலே தீங்கு நேராதிருத்தற்காக) எட்டுத்திக்கிலும் (விரலால் நொடித்து ஒலி எழுப்பிக் கட்டிக்) காத்தல், நீங்குதற்கரிய பிறவித்துயரத்திற்குக் காரணமான கன்மமலத்தை நீக்கும் அத்திர சந்தியா தேவியை வழிபடுதல், (மூவகைத் தத்துவங்களும் ஆன்மாவும் சுத்தியாதற் பொருட்டு நீர் குடித்தல், (வலக்கை நடு மூன்று விரலாலும் இட்டு உள்ளங்கையிலே) மும்முறை தாளந் தட்டுதல், (மாயாமல சுத்தியின் பொருட்டு) நீரைப் பருகுதல், உடலிலே தொடப்படும் உறுப்புப் பன்னிரண்டையுந் தொடுதல், கைகளுடன் உடலையுஞ் சுத்திசெய்து அவற்றிலே சிவ மந்திரங்களைப் பதித்துச் சிவவடிவமாக ஆக்குதல், (மந்திர செபத்தோடு) கலந்து உவப்பித்தல், (சிவமாந்தன்மை) விளங்குந் திருவெண்ணீறு அணிதல், சிவமூல மந்திரத்தைச் செபித்துச் சூரியமண்டலத்தில்

எழுந்தருளியிருக்கும் உருத்திரனை வழிபடுதல் ஆகியவற்றைச் சிறந்த சைவ ஆகமத்தில் அருளிச் செய்யப்பட்ட விதிப்படி செய்து முடித்து, முற்காலத்து அருளாளர் எம்மைத்துதித்து அருளிப்பாடிய அருட்பாடல்களைக் கொண்டு நீ தோத்திரஞ் செய்க என்று திருவாய் மலர்ந்தருளி எ...று

**விளக்கம்;-** 1. சைவ சமயதீட்சை பெற்ற மந்ததர சத்திநிபாதமுடையோர் நாளுங் காலை மாலைகளிற் செய்யக் கடவதாகிய சைவ அனுட்டானக் கிரியைகள் உணர்த்தப்படுகின்றன சுருங்கச் சொல்லல் என்னும் அழகுபற்றிச் சிலவற்றை எடுத்தோதி ஏனையவற்றை உப இலக்கண விதியாற் பெறவைத்தார். பண்டும் இன்றும் சீடரின் அறிவு, ஆற்றல், வசதிகளுக்கு ஏற்பச் சைவ அனுட்டானக் கிரியைகளுள்ளே சிலவற்றை விட்டும், சுருக்கியும் நெறிப்படுத்தி விடுதலும், குரு காட்டியவிதமே சீடர் செய்து வருதலுமுண்டு. அதுபற்றி எவரையுங் குறைகூறுதல் தக்கதன்று. அதிகாரி வேறுபாடு, குருபரம்பரைச் சம்பிரதாய வேறுபாடு என்பவற்றால் முறைகள் சிறிது மாறவுங்கூடும். மாறினும் அவை மேற்கதி சேர்ப்பதில் ஒத்த இயல்பினவேயாகும்.

2. சமய தீக்கையாவது, மந்ததர பக்குவமுடையார்க்கு அதற்கு அநுகூலமான மந்ததர சத்திநிபாதத்தை அநுசரித்துச் செய்யுந் தீக்கையாகும். சமயதீக்கை பெற்றோர் மந்திரங்களுக்கு அதிகாரிகள். சைவ நாற்பாதங்களை அனுட்டிக்க இயலாதவர் பொருட்டுச் சைவாகமத்திற் சிவபெருமானால் இத்தீக்கை அருளிச் செய்யப்பெற்றது. சைவ அநுட்டானக் கிரியையால் உபாய நிட்டை கைவர, அதனால் ஞானம்பெற்று வீடடைவர். சைவ அநுட்டானத்தில் உயிரான பகுதி ஐந்தெழுத்தோதி இறைவனை வழிபடுதலேயாகும். மலத்தின் வலி கெடும்பொருட்டுச் செய்யும் விபூதி ஸ்நானமும், உவப்பித்தற் பொருட்டுச் செய்யுந் தருப்பணமும் அதனுடன் கூறப்படும். எனவே சைவ அனுட்டானமானது விபூதி ஸ்நானம், உவப்பித்தல் (தருப்பணம்), கடவுள் வழிபாடு என்னும் மூன்று பகுதிகளைக் கொண்டுள்ளதாகும்.

3. சைவ அனுட்டானத்தின் ஒவ்வொரு பகுதியும் நீர்பருகுதலுடன் (ஆசமனத்துடன்) தொடங்கும். தொடுமிடம் அதையடுத்துவரும். எல்லாக் கிரியைகளுக்கும் ஏற்ற ஏற்ற முத்திரைகள் உண்டு. உவப்பித்தல் (தருப்பணம்) இடையிடையே வரும். நீர்ச்சுத்தி, விபூதி சுத்திகளில் (நிரூட்சணம்) பார்த்தல், (திக்குபந்தனம்) திசை காவல் செய்தல், (அவகுண்டனம்) வளைத்துச்சுற்றுதல் வரும். சிவோ

கம்பாவனைக்குரியனவாகக் கைகளிற் சிவத்தைப் பதித்தல் (கர நியாசம்), உடலிற் சிவத்தைப் பதித்தல் (அங்கநியாசம்) போன்றவை வரும். இவற்றின் விரிவைச் சைவஅநுட்டானவிதி, சந்தியா வந்தன இரகசியம், சிவஞான சித்தியார் திருவிளங்கதேசிகர் உரை என்பவற்றிற் காண்க.

4. குருவணக்கம், மல நீக்கத்திற்கும்; கணபதி வணக்கம் இடையூறு நீங்கிச் சிவமாந்தன்மை விளங்குவதற்கும் உரியன. தீர்மானித்தல் (சங்கற்பம்) என்பது இதனை நிறைவேற்றப்போகின்றேன் எனச் செம்மையாய் நினைந்து மனதில் உறுதியாய்த் தீர்மானங் கொள்ளுதலாகும், கங்கையின் பூசை - நீர்ச்சுத்தி. இதற்குரிய கிரியைகள் எட்டு. அவற்றுள் முத்திரை, திசைகாத்தல், மும்முறை தட்டுதல் என்பனவே இங்கே கூறப்பட்டன. முத்திரை:- முத் - மகிழ்ச்சி; திரா - வேகமாகச் செல்லுதல். தேவதைகளை மகிழ்வித்து, அசுரரை வேகமாகத் துரத்துவதற்கான அடையாளமாகும். அது சாம்பவி, பயிரவி, கேசரி, தேனுமுத்திரை முதலாகப் பலவாகும். திசைகாத்தல் - அசுரர் வருகையைத் தடுத்தற்பொருட்டுச் செய்யப்படுவது. மும்முறை தட்டுதல் (தாளத்திரயம்) சிவசத்தி பிரகாசித்தலுக்குக் கேடு செய்யும் அசுரரைத் துரத்தும் பாவனையாகச் செய்யப்படுவது.

அத்திர சந்தி:- சூரிய மண்டல நடுவில் வீற்றிருக்கும் சதாசிவ மூர்த்தியைத் தியானித்து, அமிர்த நீரினால் சுவாகா இறுதியான அத்திர மந்திரமோதி அத்திர சந்தியாதேவியை மும்முறை உவப்பித்து, நம இறுதியான அத்திர மந்திரத்தைப் பத்துத்தரம் செபித்து, மீண்டும் ஒருமுறை உவப்பித்து வழிபடுதல். அத்திர சந்தியா தேவியை உவப்பித்தலால் இறைவன் மகிழ்வெய்தி அருள்புரிவார். இறையருளாற் பாவம் வலிகுன்றும்; கன்மமலம் நீங்கும்; பிறவித் துயர் அறும். சந்தியா வந்தனம் காலையிலும் மாலையிலுஞ் செய்யப்பட வேண்டுமென வேதத்தில் விதிக்கப்பட்டுள்ளது. மத்தியானத்திலே செய்யப்படும் மாத்தியாஹ்நிகம் வேத விதியன்று; (ஸ்மிருதிபுரோக்தம்) தருமசாத்திரத்தில் நன்கு சொல்லப்பட்டது.

5. கங்கையின் பூசையில் வெளிப்படுகின்ற சிவசக்தி அத்திர சந்தி, ஆசமனம் ஆகிய இரண்டுக்கும் துணைக்காரணமாய் நின்று தனது வியாபகத்துள் அடங்கிய கன்மமலம் மாயா மலங்களை நீக்கியருளும். சிவசத்தியால் தத்துவங்களிலே கட்டுண்டிருந்த சஞ்சிதவினை அழிந்தொழியும்; ஒழியவே அவ்வினை காரணமாகத் தத்துவங்களுடன்

ஆன்மா கொண்ட தொடர்பும் ஒழியும்; ஆன்மா தனுவாதிசளை யடையாது மாயாமல நீக்கமுறும்; உடல் அருள்வழி நிற்கும்.

6. தத்துவத்திரயம் — மூவகைத் தத்துவம். அவை ஆன்மதத்துவம், வித்தியா தத்துவம், சிவதத்துவம் என்பன. ஆசமனம் (நீர்குடித் தல்): நீர் குடிக்கும் மந்திரத்தால், மூவகைத் தத்துவங்களுள்ளே சிவ தத்துவம், சத்திதத்துவம் தவிர்ந்த ஏனைய தத்துவங்கள் சுத்தி யாகும். தொடுமிடம் — பன்னிரண்டு இடங்களும் அங்குச முத் திரையாலே மந்திர உச்சாரணத்துடன் தொடப்படும்பொழுது சுத் தியாகி, அவற்றின் அதிதெய்வங்கள் நிலைப்பட்டு மகிழ்வடைந்து. குற்றம் வாராது காக்கும் பாவனையாகச் செய்யப்படுவது. நீர் குடித்தல், அதர சுத்தி, தொடுதல் என்னும் மூன்றும் தொடர்பு டைய ஒரே கிரியையாகும். கைச்சுத்தி, கையிற் சிவத்தைப் பதித்தல், உடற்சுத்தி, உடலிற் சிவத்தைப் பதித்தல் ஆகிய நான் கும் உடலைச் சிவசரீரமாகச் செய்தல் (சகளீகரணம்) எனப்படும். இதனல் உடல் சிவசொரூபமாகும்; உயிர் சிவோகம் பாவனையிலே தலைப்படும். ஆசமனம், தொடுமிடம், அங்கநியாசம் மீட்டும் மீட் டுஞ் செய்யப்படும். அவ்வாறு செய்வது தத்துவசுத்தி நன்கு திடம் பெறும் பொருட்டும், சிவரூபபாவனை மேன்மேலும் நிலைபெறும் பொருட்டுமாம். நீறணிதல்:- ஆணவமலம் நீங்கச் செய்யும் பாவனை யுடன், மூன்று குறியாகத் திருநீறு அணியப்படும். அணியும் இடங் கள் பதினுருகும். அவை ஒழுக்கம் முதல் அருச்சித்தல் ஈருகிய புறச்சிவத்தொண்டுகள் பதினுறையுங் குறிக்கும் என்பர். (சித்தி யார் செய்யுள் 113, சிருவிளங்க தேசிகர் உரை பார்க்க). அத்திர சந்தி, ஆசமனம், நீறணிதல் மூன்றும் கன்மம், மாயை, ஆணவ மலங்களின் நீக்கத்திற்குக் காரணங்களாய், ஒன்றற்கொன்று தொடர்புடையன. ஐந்தெழுத்து ஓதுதல்:- குட்டிக்கும்பிட்டு பிராணுயாமம் சகளீகரணஞ் செய்து,, (செபமாலை விரலிறை என் பவற்றுள் ஒன்றுகொண்டு) திருவைந்தெழுத்தை (108, 54, 27, 10 என்பவற்றுள் ஒரு முறையால்) இயன்றவாறு செபித்து, மீட்டும் பிராணுயாமஞ் சகளீகரணஞ் செய்து கும்பிடுதலாகும்.

7. ஆதவற் பணிதல் - சூரியனிடத்தில் இருக்கும் சிவன், பர்க்கன் என்னும் பெயரால் அழைக்கப்படுவர். பர்க்கன் - ஆன்மாக்களின் மலத்தை வறுப்பவன். சூரிய மண்டல மத்தியிற் சதாசிவமூர்த்தி எழுந்தருளி இருப்பதால், அச்சூரியன் சிவசூரியன் எனப்பெயர் பெறுகின்முன். காலையில் அனுட்டானத்தின் பின்னர், சிவசூரி யனைத் தரிசித்து இரண்டுமுறை தன்னைத்தானே சுற்றி, சூரியனது

பன்னிரு திருநாமங்களேயுஞ் சொல்லிக் கும்பிட்டு, பன்னிரண்டு தரம் வணங்குதல் சூரிய வணக்கம் எனப்படும். சூரிய வணக்கம் இம்மையில், உடற்பிணி அகற்றி, மறுமையில் வீடு பேற்றுக்கு வழி வகுக்கும்.

8. துதிப்பாடல் கூறுதல்:- துதிப்பாடலாக ஓதத்தகுந்தவை தேவாரம், திருவாசகம், திருவிசைப்பா, திருப்பல்லாண்டு, திருப்புராணம் என்னும் பஞ்சபுராணங்களாம். அருட்பாடல்களேக் காலத்திற்கும் இடத்திற்கும் ஏற்பப் பொருந்திய பண்ணோடு, தனக்கும் கேட்போருக்கும் பக்தி பெருகுமாறு, காதலும் கசிவும் அதிகரிக்கக் கண்ணீர் வார மெய்தானரும்பிப் பாட வேண்டும். பரவுதல் - குணமுள்ள பொருளினிடத்து அதன் நல்ல குணங்களேப் புகழ்ந்து கூறுதல். நல்ல குணமெல்லாம் பரமசிவசொரூபம். ஆதலின் பாடல் நெறி பற்றிய துதிகள் அனேத்துஞ் சிவனேயே சாரும். அதர்வண வேத சங்கிதை (11 - 2) ''நாவினுல் அடையப்படுபவரை என்றும் ஒழியற்க'' என்று கூறுகின்றது.

## உபாயமார்க்கம் - விரதம், அறம்.

121 பத்திகூர் விரதம் பயின்றிடின் நாலாஞ்
சத்திநி பாதந் தருமெனப் பகர்ந்தான்
அன்னமிட்(டு) எவர்க்கும் அரும்பசி தீர்த்துப்
பன்னருஞ் சாலே படித்துறைத் தடாகம்
வந்தார் அருந்தும் வாசநீர்ப் பந்தர்
நந்தா வனங்கள் நலம்பெற அமைத்தே
ஈங்(கு) இவை முதலா எண்ணுன்(கு) அறமுந்
தீங்கிலா வண்ணஞ் செய்கென மொழிந்தான்

பொ—ரை:- பத்தியை வளர்க்கும் விரதங்களே அநுட்டித்தலாலே தீவிர தர சத்தி நிபாதத்தை அடையலாம் என்றருளிச் செய்தார். யாவர்க்கும் அன்னம் பாலித்துப் பிறிதொன்ருலே தணித்தற்கரிய பசியைத் தணித்து, சொல்லுதற்கரிய அறச்சாலே, நீரர்டுவோர் இறங்கி நீராட வசதியான படித்துறைகளோடு கூடிய குளம், தாகத்தாலே தவித்து வந்தோர் பருகுமாறு வழங்கப்படும் வாசனேயூட்டப்பட்ட நீருள்ள தண்ணீர்ப்பந்தல், பூஞ்சோலேகள் என்பவற்றை (அடியார் எல்லோருக்கும்) நன்மை பயக்குமாறு உண்டாக்கி, இங்கே கூறப்பட்டவை முதலாகச் சொல்லப்படும் முப்பத்திரண்டு அறங்களேயுந் தீமையில்லாது ஒழியும்

வகையிலே ஈசுரார்ப்பணமாகச் செய்வாயாக என்றருளிச் செய்தார் எ—று.

விளக்கம்:- 1. வி+ர்தம்=விரதம்; வி — இன்மை; ரதம் — இச்சை; ஆசை. எனவே விரதமென்பது இந்திரிய நிக்கிரகஞ் செய்து சுகம் ஒன்றையும் அபேட்சியாது ஒழுகும் நியமமாகும். காமிய விரதம் வேறு. காப்பது விரதம். விரதமாவது மனம் பொறிவழியே போகாது நிற்றற் பொருட்டு உணவை விடுத்தேனுஞ் சுருக்கியே னும் மனம் வாக்குக் காயம் என்னும் மூன்றினாலுங் கடவுளை விதிப்படி மெய்யன்போடு சிறப்பாக வழிபடுதல் என்பார் நாவலர் பெருமான். பெரும்பாலும் உண்டி சுருக்கி உடம்பை மெலிவித்தலையே விரதம் என்பர். ஊனினை உருக்க உள்ளொளி பெருகுமாதலின், பத்திகூர் விரதம் என்றார். தவவேள்வியாகிய விரதமும் வழிபாட்டு முறைகளுள் ஒன்று; மும்மலமும் மோசிக்கும். பத்தியால் ஞானம் உண்டாம்; ஞானத்தால் வீடுபெறலாம்.

2. சத்திநிபாதம் — திருவருட்சத்தி ஆன்மாவில் நன்றாக வீழ்தல். நாலாஞ் சத்திநிபாதம் என்றது மந்ததரம், மந்தம், தீவிரம், தீவிரதரம் என்ற நான்கனுள் இறுதிக் கண்ணதை, தீவிரதர சத்திநிபாதத்தவர் பற்றற்றுச் சிவாநுக்கிரகம் பெற்றுப் பரமுத்தியடைவர்.

3. சாலை - அறச்சாலை; வழி. தடாகம் – மனிதர் முதலிய உயிர்களுக்காக அவ்வப்பொழுது நீர் நிறைக்கப்படும் சிறுவாவி. வாச நீர் — இலாமிச்சம்வேர், வெட்டிவேர், முதலிய பரிமளத்திரவியங்களால் மணமூட்டப் பெற்ற தண்ணீர். இது வழிவருந்தாகத்தைப் போக்கும். நந்தாவனம் — நால்வகைப் பூக்களும் எந்நாளுங் குறையாத பூஞ்சோலை என்பது குறிப்பு. அது வழிவரும் வெப்ப விளைவு போக்கும்.

4. பசிதாகம் முதலான உடல்வாதைகள். அற்றபோதே தெய்வத்தைப் பற்றிய சிந்தனையுண்டாகும் என்பதை அறிவுறுத்தினர். உலக வினையாய உபாயமார்க்கங் கூறினர். இதன்பின்னர் உண்மை மார்க்கங் கூறுகின்றார்.

5. அறம், பாசத்தாற் கட்டுண்ட பசுக்களுக்கு வழித்துணையாக நின்று உறுதிதருவது. நல்லன அல்லாதவற்றை (பாவங்களை) அறுப்பது என்பது அதன் அடிப்படையான பொருள். தீமை ஒழியும் வண்ணஞ் செய்யப்படுவது அறம் என்றவாறு. தீங்கு பிறவித்துன்பம். அறத்தைக் காமியமாகச் செய்யாமல் நிஷ்காமியமாகச் செய்தலே

பிறவித் தீங்கிலாவண்ணஞ் செய்தலாகும். அறம் கருமங்களுக்கெல்லாம் அடித்தளம். நிஷ்காமிய அறத்தால் அன்பும் அருளும் உண்டாம்; பிறவி நீங்கும்.

## உண்மை மார்க்கம் - சிவசரியை

129 காலையில் எழுந்து கடிமலர் பறித்து
மாலிகை தொடுத்து மதிமுடிக் கடவுட்
பூசனைக்(கு) உதவிப் புனிதவா லயத்தின்
வாசல் விளக்கிட்(டு) அலகொடு மெழுக்கிட்(டு)
ஆறுகா லமுஞ்சென்(று) அரன்பதம் இறைஞ்சி
ஏறுளான் அடியார்க்(கு) ஏவல்பூண்(டு) ஒழுகல்
இத்திற முதலா இயற்றுதல் சரியை
சுத்தசா லோக்கியந் துய்க்குமென்(று) இசைத்
தான்.

பொ-ரை:- வைகறைப் பொழுதில் நித்திரை விட்டெழுந்து (நீராடல் முதலியவற்றை முடித்துப் பூசைக்குரிய) நறுமணமுள்ள மலர் தளிர் என்பவற்றைக்கொய்து (அவற்றால் விதிப்படி பலவித) மாலைகளைக் கட்டி, அவற்றைத் திருமுடியிலே பிறை சூடிய பெருமானது பூசையின் பொருட்டுக் கொடுத்து, புனிதமான திருக்கோயிலின் திருவாசலிலே (விதிப்படி) திருவிளக்கேற்றி, திருவலகிடுதலோடு திருமெழுக்குஞ் சாத்தி, திருக்கோயிலுக்கு (விதிப்படி) சென்று (அங்கு நடைபெறும்) ஆறுகாலப் பூசையையுந் தரிசித்துச் சிவபெருமானது திருவடிகளை வணங்கி (தரும சொரூபமான) எருதினை ஊர்ந்தருளும் அப்பெருமானுக்கு அடியாராகிய சிவனடியார்களுக்குக் குற்றேவற்றொண்டு செய்து ஒழுகுதல் முதலான இவ்வித புறத்தொண்டுகளைச் செய்தல் சிவசரியையாகும். (இச்சரியைத் தொண்டானது) சிவலோகத்து இருத்தலாகிய சிவசாலோக பத முத்தியைக் கொடுக்கும் என்று அருளிச் செய்தார். எ-று.

**விளக்கம்:-** 1. வைகறை - சூரியன் உதிப்பதற்கு முன்னுள்ள ஐந்து நாளிகை நேரங்கொண்ட பிராமி முகூர்த்தம்.

2. கடிமலர் - வாசனையுள்ள (வண்டு மொய்க்காத) விரியும் பருவப் பூக்கள். இனம்பற்றித் தளிருங் கொள்ளப்பட்டது. மாலிகை - (பலவகை) மாலைகள்; பலவிதமாலைகளாவன இண்டை, தொடை. கண்ணி, பந்து, தண்டு, பிணையல், அலங்கல், தொங்கல் என்பனவாம்.

3. பிறை - அடைந்தாரைக் காக்குங் கருணைக்கு அறிகுறி. அலகிடல்- மெல்லிய துடைப்பத்தினல் மெதுவாகக் கூட்டி அள்ளித் தூரத்தே புதைத்தல்.

4 ஆறு காலப்பூசைகள்:- (1) உஷக்காலபூசை (பாற்பூசை) (2) காலைப்பூசை. (3) உச்சிக்காலபூசை. (4) சாயங்காலபூசை. (5) இரண்டாங்காலபூசை. (6) அர்த்தயாமபூசை. உஷக்காலம் - சூரிய உதயத்திற்கு நான்கு நாழிகைக்கு முன்னுள்ள நேரம். அரன் பதம்:- பதம் - திருவருள். தலத்திலே இறைவனது திருவருள் பதிந்து விளங்குவதாலேதான் அதற்குப் பதி என்றபெயர் ஏற் பட்டது.

5. அடியார்க்கு ஏவல் பூண்டு ஒழுகுதலை, முத்திநாதனது வஞ்சனை யினல் மயங்கி வீழ்கின்ற மெய்ப்பொருளுநாயனருடைய ஏவலை ஏற்று, அந்த முத்திநாதனைப் புறத்தே கொண்டுபோய் உய்த்த தத்தன் போன்றவர் செயலால் அறியலாம். இதுவும் இறைவற்கு ஆம்செயலே.

''கழற்கொண்ட சேவடி காணலுற் றார்தமைப் பேணலுற்றார்
நிழற்கண்ட போழ்தத்து நில்லா வினை''

— (அம்மையார் திரு இரட்டை மணிமாலை)

சிவனைத் தொழுவதும் அடியார்க்கு ஏவல்புரிவதுமே வினைநீக்கும் உபாயம்.

6. சரியையாவது, சரீர இந்திரியத் தொழிலாகிய புறத்தொழில் மாத்திரையானே ஆகம விதிப்படி சிவபெருமானுடைய உருவத் திருமேனியை நோக்கிச் செய்யும் வழிபாடாம். கண் திருவுருவத் தைக் காணவும், காது இறைவன் குணமகிமையைக் கேட்கவும். வாக்கு வாழ்த்தவும், பாதம் வலம் வரவும், கை கூப்பித்தொழ வும் பெறுதல். ஏனைய இந்திரியங்களுங் கரணங்களும் இந்த இந்திரியங்களின் வழியே நிற்கும்; உண்மைப் பக்தி பெருகும். ''ஐந்து பேரறிவுங் கண்களே கொள்ள'' என்ற தடுத்தாட் கொண்ட புராணத் திருச்செய்யுள் நோக்கித் தெளிக. சரியை வழிபாடு செய்பவருக்குச் சிவபெருமான் உருவத்திருமேனியிலே தயிரில் நெய்போல மறைந்து நின்று அருள்புரிவார். சிவசரியை யானது அவாந்தர பயனுகச் சீகண்ட புவனமுதற் சுத்த வித்தைக் குக் கீழேயுள்ள அப்புவன பதிகளுடைய சிவலோகத்துச் சாலோக பதமுத்தியைத் தரும். ஞானத்தை உதிப்பிக்குஞ் சாதனமாய்

நின்று, அந்த ஞானத்தாற் பரமுத்தியைப் பெறவும் வழிசெய்யும், சுத்தாத்துவித சைவ சித்தாந்த பதமுத்தி என்பதையுணர்த்தவே சுத்த சாலோக்கியம் என இனம் விலக்கிய அடைமொழி புணர்த்தார்.

7. இச் சரியைத் தொண்டின் சிறப்பு:-

நிலைபெறுமா றெண்ணுதியேல் நெஞ்சே நீவா
நித்தலு மெம்பிரானுடைய கோயில் புக்குப்
புலர்வதன்முன் னலகிட்டு மெழுக்கு மிட்டுப்
பூமாலை புனைந்தேத்திப் புகழ்ந்து பாடித்
தலையாரக் கும்பிட்டுக் கூத்து மாடிச்
சங்கரா சயபோற்றி போற்றி யென்றும்
அலைபுனல்சேர் செஞ்சடையெம் மாதீ யென்றும்
ஆரூரா என்றென்றே அலறு நில்லே. — தேவாரம்

பெரும்புலர் காலை மூழ்கிப் பித்தர்க்குப் பத்த ராகி
அரும்பொடு மலர்கள் கொண்டாங் கார்வத்தை உள்ளே வைத்து
விரும்புநல் விளக்குத் தூபம் விதியினு லிடவல் லார்க்குக்
கரும்பினிற் கட்டி போல்வார் கடவூர்வீ ரட்ட ஞரே.
— தேவாரம்

விளக்கினுற் பெற்ற இன்ப மெழுக்கினுற் பதிற்றி யாகும்
துளக்கினன் மலர்தொ டுத்தாற் றூயவிண் ணேற லாகும்
விளக்கிட்டார் பேறு சொல்லின் மெய்ந்நெறி ஞான மாகும்
அளப்பில கீதஞ் சொன்னூர்க் கடிகடா மருளு மாறே.
— திருமந்திரம்

தாதமார்க் கஞ்சாற்றிற் சங்கரன்றன் கோயிற்
றலமலகிட்டு இலகுதிரு மெழுக்குஞ் சாத்திப்
போதுகளுங் கொய்துபூந்தார் மாலை கண்ணி
புனிதர்க்குப் பலசமைத்துப் புகழ்ந்து பாடித்
தீதிறிரு விளக்கிட்டுத் திருநந்த வனமுஞ்
செய்துதிரு வேடங்கண் டாலடியேன் செய்வதி
யாதுபணி யீரென்று பணிந்தவர்தம் பணியு
மியற்றுவதிச் சரியை செய்வோ ரீசனுல கிருப்பர்.
— சிவஞானசித்தியார்

எசமானிடம் வேலைக்காரன் வணங்கி நின்று தயவுபெறுவது போலத் தொண்டு செய்து, கடவுளின் அருளைப் பெறுதலால் இதனைத்

தாசமார்க்கம் என்பர். இத் தாசமார்க்கத்தை உலகினர்க்கு வாழ்ந்து காட்டியவர் திருநாவுக்கரசு நாயனுராவர்.

## சிவகிரியை

137 பொய்வகை நீக்கிப் பூத முதலா
ஐவகைச் சுத்தி மெய்வகை விளக்கி
மணம்பொலி கந்த வர்க்கமா மலர்கள்
இணங்குநல் தூபம் எழில்குலாந் தீபந்
தருநை வேத்தியந் தாம்பூல முதலாய்
வருமுப சார வகைபல இயற்றி
அகந்தவிர் உளத்தோ(டு) அகம்புறம் இறைஞ்சிச்
சுகங்கிளர் அங்கித் தொடுகடன் முடித்துப்
போற்றுறும் இலிங்க பூசனைக் கிரியை
சாற்றுசா மீப்பியந் தருமெனப் பகர்ந்தான்.

பொ—ரை:- பாசகாரியமாகிய துர்க்குணங்களை அகற்றிப் பூதசுத்தி முதலாகச் சொல்லப்பட்ட பஞ்சசுத்திகளையுஞ் சூக்கும தேகசுத்தி யுடன் செய்து, நறுமணங்கமழும் வாசனைத்திரவிய வர்க்கங்களும், (பூசனைக்குரிய) சுகந்த மலர்களும், பொருத்தமான நல்ல தூபமும், பிரகாசம் பொருந்திய தீபமும், விதிப்படி அமைக்கப் பெற்ற நைவேத் தியங்களும் வெற்றிலை, பாக்கு என்பனவும் முதலாகவரும் பூசைக் குரிய ஏனைய உபசாரவகைகள் பலவற்றையுஞ் சேர்த்து வைத்துக் கொண்டு; நான் என்னும் அகங்காரமற்ற (நிறைவும் அன்புப் பெருக்க மும் உள்ள) மனத்தோடு அகப்பூசையும், புறப்பூசையுஞ் செய்து உலக நன்மைதந்து விளங்கும் அக்கினி காரியமும் முடித்து வணங்கப் பெறும் சிவபூசை செய்தலாகிய கிரியை நெறியானது, சிறப்பித்துச் சொல்லப்படுஞ் சாமீபப்பத முத்தியைக் கொடுக்கும் என்று அருளிச் செய்தார் எ-று.

விளக்கம்:- 1. கிரியையாவது மந்த சத்திநிபாதமுற்றோர் விசேட தீக்கை பெற்று, மனத்தை ஒருவாறு அடக்கியும், இந்திரியங்களின் வழி பெரிதுஞ் செலுத்தியும் வழிபடுவதாகிய புறத்தொழிலாலும், அகத்தொழிலாலும் அருவுருவத்திருமேனியை (விதித்தவாறு) வழிபடுதலாம்.

2. பொய்வகை - ஐவகைப் பாசங்கள். ஈண்டு அவற்றின் குணங்களைக் குறித்தது. பாசநீக்கத்திற்காகச் செய்யப்படுவது பஞ்சசுத்தி.

''பஞ்சவித சுத்தியினைப் பண்ணிடுக பாங்காகப்
பஞ்சவித பாசமறுப் பார்'' என்பது சைவசமயநெறி.

பஞ்சசுத்திகள்:- புறப்பூசைக்குரியன பூதசுத்தி, தானசுத்தி, திரவிய சுத்தி, மந்திரசுத்தி, இலிங்கசுத்தி என்பன. அகப்பூசைக் குரியன பூதசுத்தி, ஆன்மசுத்தி, திரவியசுத்தி, மந்திரசுத்தி. இலிங்கசுத்தி என்பன.

''பஞ்சசுத்தி செய்துநின்னைப் பாவித்துப் பூசைசெய்தால்
விஞ்சிய ஞானம் விளங்கும் பராபரமே'' என்ற தாயுமானவர் பாடலாற் பஞ்சசுத்தியால் ஞானம் விளங்குதல் பெறப்படுகின்றது. வேதநெறி பற்றிய தேகசுத்தியும், ஆகமநெறி பற்றிய பஞ்சசுத்தியும் சைவக்கிரியையில் உள.

3. கந்தவர்க்கம்:- கந்தம் - வாசனை; வர்க்கம் - வகை. சந்தனம், பனிநீர், குங்குமப்பூ, கோரோசனை, பச்சைக் கருப்பூரம், புனுகு, சவ்வாது, கஸ்தூரி ஆகிய இவை இலேபனமாகிய மெய்ப்பூச்சுக் குரியவை.

4. மலர்களைச் சிவமூலமந்திரத்துடன் சாத்துதல் புட்பதானம் எனப் படும். ''அத்தனுருரைப் பத்திமலர்தூவ முத்தியாகுமே'' என்பது தேவாரம். அகப்பூசைக்குரிய மலர்கள்:- கொல்லாமை, ஐம்பொறி யடக்கல், பொறுமை, இரக்கம், அறிவு, மெய், தவம், அன்பு என்னும் எட்டுமாம். மலர், மாசற்ற மனத்தைக் குறிக்கும்.

5. தூபங் கிரியாசத்தியைக் குறிக்கும், கிரியா சத்தியைக் கொண்டு ஆணவத்தை நீக்கும் பாவனையாகச் செய்யப்படுவது தூபமிடுதல். தீபஞ் சித்சத்தியைக்குறிக்கும். ஆன்மாவின் மலத்தைப் போக்கி, ஞானத்தை விளக்கும் பாவனையாகச் செய்யப்படுவது தீபங்காட்டு தல். ஆன்ம குணமாகிய அகங்காரம், சங்கற்பம், குரோதம், மோகம் என்பவற்றை அமிர்தமாகச் சமர்ப்பித்தலே நைவேத்திய மாகும்.

6. பூசைக்குரிய பொது உபசாரவகை 16 ஆகும்; இவை 64, 72 ஆக விரிதலுமாம். எடுத்தோதியவை தவிர்ந்த ஏனையவை பல என்ற தாற் தழுவப்பட்டன. அவ்வாறு தழுவப்பட்டவை ஆவாகனம், தாபனம், சந்நிதானம், சந்திரோதனம், அவகுண்டனம், தேனு முத்திரை, பாத்தியம், ஆசமநீயம், அருக்கியம், பாநீயம், செப

சமர்ப்பணம், ஆராத்திரிகம் என்பன. ஐந்து பூதங்களாலாய உடம்பாற் பூசித்துப் பூசையை ஒப்புக்கொடுத்தலே சிவபூசையி லுள்ள உபசாரங்களின் கருத்தாகும். பிருதுவி - வாசனைப் பொருள்கள், நைவேத்தியம். அப்பு - நீர், பால். தேயு - விளக்கு, இரத்தினுபரணங்கள். வாயு - தூபம், சாமரை. ஆகாயம் - மணி, வாத்தியம், தோத்திரம்.

7. இயற்றி - ''முறைமையால் வரும்பூசைக்கு முற்றவேண்டுவன, குறைவறக் கொண்டு'' (திருத்தொண்டர் புராணம் 1835) என்ற படி எல்லாவற்றையும் பொருளாலும் அளவாலுஞ் சிறிதுங் குறை பாடின்றி அமைத்து. பூசைக்குரியனவாய் விதித்த சாதனங்கள் பெரும்பாடுபட்டுங் கிடையாத பொழுது பூசையை விட்டுவிடாது, தேடியன கொண்டு, ''தேடாதன அன்பினில் நிரப்பி'' (திருத். புரா. 1242) ச் செய்தல் வேண்டும்.

8. அகம்புறம் இறைஞ்சி:- அகத்தே மனத்தினுல் இருதயத்திற் பூசையும் புருவ நடுவிலே தியானமும் உந்தியில் ஓமமுஞ் செய்த லோடு, புறத்தே இந்திரியங்களால் இலிங்க வடிவிற் பூசையும் அக்கினியில் ஓமமுஞ் செய்து வழிபடுதல். இதனுல் அகக்கரணங் களும், பொறிபுலன்களும் ஒருவழிப்பட்டுப் பூசையிற் கலந்து நிகழும்.

9. அங்கித்தொடுகடன் - அக்கினி காரியம். ஐந்து கலை மயமான குண்டத்தில் வாகீசுவரனுக்கு வாகீசுவரியிடம் பிறந்த சிவாக்கினி யாகிய குழந்தைக்குச் செய்யவேண்டிய கிரியை முழுவதையுஞ் செய்து, அச்சிவாக்கினியின் இருதயத்திற் சிவனை வழிபடுவதாகும். இதனுல் உலகசேமமும், அரிட்ட நீக்கமும் உண்டாகும்.

10. லிங்கம் = லி + கம்:- ஆன்மாக்களும், உலகங்களும் ஒடுங்கு வதற்குந் தோன்றுவதற்குமான இடம்; லி - லயம்; கம் - தோற் றம். ஐந்தொழில் செய்யும் ஈசுவரப்பிரபாவமே லிங்கம் எனவும் படும். சுத்தசிவம், ஆன்மாக்களின் தியான பாவனையின் நிமித்தம் நிஷ்களசகளத் திருவுருக் கொண்ட நிலையே லிங்கம்.

11. மகன் தந்தையின் மெய்யைத்தீண்டி மகிழ்வித்து வேண்டியதைப் பெறுதல் போல, கிரியை வழிபாடு செய்து கடவுளின் பக்கத்தில் நின்று கண்டு அன்புருகி என்பிளகி மகிழ்வுடன் வேண்டியதைப் பெற்றுக்கொள்வதால் இது சற்புத்திர மார்க்கம் எனப்படும். இந்தச் சற்புத்திர மார்க்கத்தை உலகத்தினர்க்கு வாழ்ந்து காட்டிய

வர் திருஞானசம்பந்தமூர்த்தி நாயனாராவர். கிரியை நெறி அவாந்தரப்பலனாகச் சிவசாமீப பதமுத்தியைத்தரும். ''கிரியை என மருவுமவை யாவும் ஞானங்கிடைத்தற்கு நிமித்தம்'' (சிவப்பிரகாசம்) ஆதலின், உண்மை ஞானத்தைப் பயப்பிக்குஞ் சாதனமாய்நின்று அந்த ஞானத்தாற் பரமுத்தியைப் பெறவும் வழி செய்யும்.

12. கிரியைத் தொண்டின் சிறப்பு:-

''தோத்திரமா மணலி லிங்கந் தொடங்கிய வானிரை யிற்பால்
பாத்திரமா வாட்டுதலும் பரஞ்சோதி பரிந்தருளி''— சம்பந்தர்.

''புத்திரமார்க் கம்புகலிற் புதியவிரைப் போது
புகையொளிமஞ் சனமமுது முதல்கொண் டைந்து
சுத்திசெய்தா சனமூர்த்தி மூர்த்தி மானாஞ்
சோதியையும் பாவித்தா வாகித்துச் சுத்த
பத்தியினால் அருச்சித்துப் பரவிப் போற்றிப்
பரிவினொடும் எரியில்வரு காரியமும் பண்ணி
நித்தலுமிக் கிரியையினை யியற்று வோர்கள்
நின்மலன்றன் அருகிருப்பர் நினையுங் காலே''
— சிவஞானசித்தியார்.

## சிவயோகம்

### 1. சரியையில் யோகம்

147 கட்டளை கப்பணங் கட்டளை யிட்டுத்
தட்டுறு மலந்தீர் சாதன மொழிந்து
கடுங்கொலை வெறும்பொய் களவுகட் காமம்
படும்பெயர் பஞ்ச பாதகந் தீர்த்துக்
காமங் கோபங் கசடுறும் உலோபந்
தீமன மோகஞ் சேர்மத மாற்சரியம்
ஈண்டிவை முதலா எண்ணில் பாவம்
பூண்டன ஒழியப் புந்திதந் தருளி
மன்னுகீழ் அரணி வருத்தமில் உணர்வாய்ப்
பின்னுமேல் அரணி பிரணவ மாகக்
கடையவே ஞானக் கனலெழும் என்றே
தடைபடாப் பாச தகனஞ் செய்தான்

**பொ—ரை:-** தியான பாவனையாக விதிக்கப்பட்ட கைவேலை இருதயத்திலே வைத்துப் பூசிக்குமாறு (உபதேசக் கிரமத்தால்) நியமித்து, (பேரின்பத்தை அடையவொட்டாது) மிகத் தடைசெய்து நிற்கும் மும்மலங்களும் நீங்குதற்குரிய சாதனங்களையும் உபதேசித்தருளிக் கொடிய கொலை பயனற்ற பொய்ச்சாட்சி களவு கள் காமம் என்னும் பெயர்களால் அழைக்கப்படும் ஐம்பெரும் பாவங்களையும் நீக்கி (ஒழுகத்தக்க அறிவைப் புகட்டிக்) காமம் வெகுளி குற்றம் பொருந்திய ஈயாமை தீயமனதிலே உண்டாகும் அஞ்ஞானம் இயல்பாகவேயுள்ள அகங்காரம் பொறாமை என்னும் உயிரோடு செறிந்துள்ள இவை முதலாக இதுவரை செய்யப்பட்டனவாகிய அளவுகடந்த பாவங்களும் ஒழிந்து, அறிவின் தெளிவினையும் அடைய அருளுரை பகர்ந்து, தீக்கடைகோலின் கீழ்ப்பக்கத்தே நிலையாயுள்ள கோல் மலவேதனையற்ற சுத்த ஆன்ம அறிவாகவும், (கயிற்றினுற்) பின்னிச் சுற்றப்பட்டுள்ள மேற்கோல் பிரணவ மந்திரமாகவுங் கொண்டு கடைதலாகிய தியானத்தைச் செய்யச் சிவஞானமாகிய அக்கினி தோன்றும் என்று உபதேசித்துப் பாசத்தை நீறுக்கியருளினுர் எ—று.

**விளக்கம்:-** 1. யோகம் அருவ வழிபாடாகும். இந்திரியங்களின் வழியே செல்லும் மனத்தை இரேசக பூரக கும்பகங்களாலே தடுத்துத் தன்வசப்படுத்தி, ஒருமுனைச் செலுத்தி நிறுத்துவது யோகமாகும். அகத்தைச் சுத்தஞ் செய்து, அந்தச் சுத்த மனத்தால் உள்ளே தியானித்தலாகும்.

2, வடிவமில்லாத பதிப்பொருளை ஞானத்தால் வழிபடுதலே சிறந்த முறை. அந்த ஞானவழிபாட்டிற்கு ஆரம்ப வழியாக அமைந்ததே தூலவடிவு கற்பித்துத் தியானித்தல். இதயத்தானத்திலே குறியைத் தியானித்தலாகிய இந்தத் தடத்தத்தியானப் பயிற்சியால் (ஞானயோகமாகிய) சொரூபத்தியானங்கைகூடும். ''குறியைக் குறியாது குறித்தறியும் நெறி' (கந்தரனுபூதி) சொரூபத் தியானம். ''அறிவதொரு குறி குருவினருளினுலறிந்து'' (சித்தியார்) தியானித்தல் தடத்தத் தியானம். ''பயன்படவேயுளம் யாதிற் பற்றுமதைத் தியானந்தான் பண்ணவேண்டும்'' என்று வாயுசங்கிதையுங் கூறுகின்றது. முருகப்பெருமானது திருவுருவத்தை வைத்துவணங்குவதற்குப் பதிலாக, அவருடைய ஞானசத்தியாகிய வேலை வைத்து வணங்குவதைக் கௌமாரமதம் ஏற்றுக்கொள்ளுகின்றது (அடி 171 பார்) முருக உபாசகனுக்குக் கைவேலின் உருவம் உள்ளத்திரையில் நன்கு பதியுமாதலின் அதுவே தியானக் குறியாயிற்று. கைவேலைக் குறித்த தியானம் முதிர்ச்சியடைந்ததும்

'தனிவேலை' (ஞானத்தை) விளக்கியருளுவார். இது சரியையில் யோகம்.

3. ''யோகம் பயில்வோர் இயம நியமங்களை அனுசரித்தேயாகவேண்டும்'' என்று யோகசாத்திரம் கூறுகின்றது. யோகி கடிந்தொழுக வேண்டியன இங்குக் கூறப்படுகின்றன. மலந்தீர் சாதனமாவன: (1) முப்போதும் உத்தூளனம் (2) ஏழுகோடி மந்திர வடிவுகளைத் தியானித்தல் (3) ஆலய வழிபாடு செய்தல் (4) அன்னங் குறைத்தல், கறி, உப்பு, புளி, கைப்பு நீக்கல் (5) பசித்து உண்ணல் (6) பகலிலே துயிலாமை முதலியனவாம். இவை அஞ்ஞானத்தை நீக்க உதவுவன.

4. கொலை முதலியன தீர்த்தலைச் சங்கார யோகம் என்பர். இது மாவிரதமுமாம். மோகம் - அஞ்ஞானம்; மதம்-அகங்காரம்; மாற்சரியம் - பொறாமை. யோகி அகச்சுத்தியின் பொருட்டுக் கடிந்தொழுக வேண்டிய பொதுத்தருமங்கள் இவையாகும். மூல மல காரியமும் உயிர்ப்பகையுமாயுள்ள காமக்குரோதாதி அரிஷட வர்க்கங்களே மந்தேகாள் எனப்படும் அசுரராவர். இந்த அசுரக் குணங்களைத் துரத்தியோட்டும் பொருட்டே, தினந்தோறுஞ் சந்தியாவந்தனத்திற் காயத்திரி மந்திரத்தைத் தியானித்து உச்சரித்து, அம்மந்திர சலத்தைக் கையிலெடுத்து அம்பு எய்தல்போல அவற்றின்மீது தெளிப்பர். காமக்குரோதாதி ஆறும் காமம், வெகுளி, மயக்கம் என்னும் மூன்ருய் அடங்கும். இவை தூலசித்தான ஆன்மாவை எந்த நாளும் மறைப்பன.

5. பிராணுயாமத்தினுலே சாந்தி, பிரசாந்தி, தீத்தி, பிரசாதம் என்னும் நான்கு சித்திகள் உளவாம். அவற்றுள்ளே சாந்தி எனப்படும் சித்தியைப் பாவம் பூண்டன ஒழிதல் என்றும், பிரசாதம் என்னும் சித்தியைப் புந்தி தந்தருளல் என்றும் விளங்கக் கூறியுள்ளார்.

6. மன்னுகீழ் அரணி... செய்தான்:- பிரணவ யோகங் கூறப்பட்டுள்ளது. ஆன்ம குற்றங்கள் நீங்கியதும் ஞானம் உதிக்கும். பழக்க வாசனைபற்றிப் பாசந் தாக்கினுல், உதித்த ஞானம் தடைப்படும். ''சொல்லுதற்கரிதாகிய ஞானவேர் சூழ்ந்து, கல்லு மட்டறு காமமுன் ஞறு'' என்று செந்தூர்ப்புராணங் கூறுகின்றது. ஞானந் தடைபடாதிருக்கவும், பாசவாசனை நீருகவும் ஏற்ற சாதனம் பிரணவ யோகமாகும். சுகாசனத்தில் அமர்ந்து, கைகால்களை ஒடுக்கிப் பார்வையை மூக்கு நுனியிற் செலுத்தி, இருதயத்திற் பிரணவ வடிவ சிவத்தைத் தியானித்து, ஓசை தரும் ஐந்தெழுத்

தாகிய பிரணவ மந்திரத்தை அருளே நாவாக அதிமானதமாகப் பலதரஞ் செபித்துப் பூரித்துக் கும்பித்து இரேசித்தலைக் கருப்பப் பிராணுயாமம் என்பர். கிருஷ்ண யசுர்வேத கைவல்லிய உபநிடதம், ''ஆத்மாவை அரணியாகவும், பிரணவத்தை உத்தரஅரணியாகவும் வைத்து, (இடையருத) தியானமென்ற கடைதலைப் பன்முறை அப்பியசித்தலாற் பண்டிதன் பாசத்தை ஒழித்துக் கொள்வான். (முத்திபெறுவான்)'' என்று கூறுகின்றது. இதே பொருளைப் பிரம உபநிடதமுஞ் சுவேதாசுவதர உபநிடதமுங் கூறுகின்றன. பிரணவ பதியாகிய சிவபெருமானது மீதானம், பிண்டத்திலே துவாத சாந்தமாகும். மனம் வாக்கு எட்டும் வரையிற் பிரணவமாகிய இரதம் வேண்டும். சாரதியாகிய (விஷ்ணுவினது) குருவினது உபதேச வழிநின்று, பிரணவ யோகநெறியால் மேலே செல்ல வேண்டும். அதன் பின்னர் கேவல பாவனுதீதமுஞ் சுழுத்தித் தான உருத்திர உபாசனையும் வேண்டும். அதுவும் நழுவாமல் நழுவி நிற்கும் பொழுது அவனே தானுகவுந் தானே அவனுகவும் நிற்கும் அறிவுமயமான சும்மா இருக்கும் அற்புத இன்பநிட்டை வந்து பொருந்தும், இதுவே தூங்காமல் தூங்கிச் சுகம்பெறுதலாகும். இதனை இருக்கு வேத நிர்வாண உபநிடதஞ் சிவயோக நித்திரை என்று அறிவுறுத்திற்று. முத்தியை அடைவதற்குப் பிரணவ யோகம் பரம சாதனமாகும். ஆளுடைய அரசரும் ''உறவுகோல் நட்டு உணர்வுக் கயிற்றினுல் முறுக வாங்கிக் கடைய முன்னிற்குமே'' என்று அருளிச் செய்துள்ளார். சுவேதாசுவதரம் முதலிய உபநிடதங்கள் பிரணவ மகா மந்திர அநுபூதிவாயிலாகப் பேரானந்த மோட்சமடையலாம் என்று கூறுகின்றன.

7. பாசதகனம்:— பாசத்தை எரித்தலாகிய சுத்திகரணக் கிரியை. யோகசிகோபநிடதமும் ''ஏழு தாதுக்கள் கொண்ட உடல் யோக நெருப்பால் மெல்ல எரிக்கப்பட்டது'' என்று கூறுகின்றது. இது யோகத்திற் சரியை.

## 2. கிரியையில் யோகம்

159 அருளெனுந் தலத்தில் அறிந்துகால் மடக்கி
இருளற இருக்கும் இயற்கையும் விண்டான்

பொ - ரை:- புருவ நடுவாகிய ஆஞ்ஞைத் தானத்தில், மனந்தோன்றிய இடத்திலேயே ஒடுங்கியதாகத் தியான யோகத்திலே கண்டு பிராண வாயுவையும் (இயக்கமற) நிறுத்தி, அஞ்ஞானமாகிய இருளற்று

(ஒளிமயமான) ஞானத்தாலே திருவடியைத் தியானித்துக்கொண் டிருக்குந் தன்மையையும் உபதேசித்தருளினர் எ - று.

விளக்கம்: 1. கிரியையில் யோகம் இதிற் கூறப்படுகின்றது. இதனேடு தொடர்புள்ள யோகத்திற் கிரியையான பன்னிருவகைப்பிராணு யாம யோகங்களும் இதன் பின்னரே சொல்லப்படுகின்றன. பிராணவாயுவை உடலிலே தடையறப் போக்குவரவு செய்விப்பது பிராணுயாமம் எனப்படும். உயிர்ப்பைத் தன்வயப்படுத்தி ஒரு முனைச் செலுத்தி நிறுத்துவது பிராணுயாம யோகமாகும்.

2. ஆஞ்ஞைத் தானத்தில் அருட்சத்தி வடிவாய் அமைந்திருப்பது உட்டியாணபீடம். அதுவே அருளெனுந்தலம். அருள்பெற்ரேர் முத்தியின் பொருட்டு ஆஞ்ஞைத் தானத்தில் ஐந்தவத்தைப் படுவர்.

3. அருள் ஆதாரமாக ஆன்மதத்துவம் பிரகிருதியிலும், வித்தியா தத்துவம் அசுத்த மாயையிலும், சிவதத்துவஞ் சுத்தமாயையிலுந் தோன்றிய முறையே ஒடுங்குவதாகக் கண்டு, மனம் எதிலிருந்து தோன்றியதோ அதிலே ஒடுங்குவதாகத் தியானிக்க மனம் ஒடுங் கும். மனம் ஒடுங்கியதும், மனதைக் கட்டிவைத்திருக்கும் பிராண வாயுவும் ஒடுங்கும். மனம் இறந்தவிடத்தே பிராணவாயுவையும் உயிர்ப்பறுவித்தல் (1) மனபவனம் ஒடுக்குதல் என்னும் பிராணு யாமயோகமாகும்.

4. மனமும் வாயுவும் ஒடுங்கவே, தாமத இராசத குணங்களால் உண்டான மனமாசுகள் அகன்றுவிடும்; சுத்த சாத்துவிக நல்ல மனமாய் விளங்கும். சத்துவ குணநன்மனத்தில் ஞானம் உதிக்கும். உதித்த ஞானத்தால் உயிர் திருவடியிலே கூடியதாகத் தியா னித்தல் கிரியையில் யோகமாகும். பிராசாத யோகமும் இக் கிரியையில் யோகமே. தியானிப்போனுந் தியானமுந் தோன்ருது தியானிக்கப்படும் பொருளில் இலயித்திருத்தலே இருளற இருத்த லாகும்.

5. இயற்கையும் விண்டான் என்பதனைச் சாகாதிருக்க (அடி 164) தேர்ந்து (166) இடைபிங்கலையாம் (168) ஆதவன் (169) கலைகள் (169) இயங்கும் (170) அளிக்கும் (174) என்பவற்ரேடுந் தனித் தனி கூட்டி எளிதாகப் பொருளுணர்ந்து கொள்க.

161 பன்னிரண் டங்குலம் பறிந்திடும் பிராணன்
பின்னதின் நான்கும் பிரிந்துபோம் அதனல்
ஆயுளுங் குறைந்திட்(டு) ஆக்கையுந் தளர்ந்து
சாயுமென் றுரைத்துச் சாகா திருக்க

பொ - ரை:- மூச்சுவிடும்பொழுது பிராணவாயு பன்னிரண்டங்குலம் வெளியே செல்லும்; மூச்சு வாங்கும் பொழுது (எட்டு அங்குலம் மீண்டுவரும் எஞ்சிய) நான்கு அங்குலமும் மீளாது பிரிந்துபோகும். அவ்வாறு பிரிந்து போவதனல், நியதியான வயது குறைவதோடு உடலுந் தளர்ச்சியடைந்து அழியும் என்றுரைத்து, உடல் அழியாமற் காப்பாற்றுவதற்கு (இயன்றவைகளையுங் கூறினர்) எ - று.

விளக்கம் :- 1. பிராணன் - பிராணவாயு; மூலாதாரத்திலுள்ள மேல் நோக்கிய முக்கோணத்தினுள்ளே ஓங்காரத்தின் அடியாய்க் கோணக்கீழ் விளிம்பின் நடுவே தோன்றி, நேரே சுழுமுனையில் ஓடுமளவில், அச்சுழுமுனை அடைபட்டிருப்பதால் அதன்வழியோடாது, ஒருகால் இடைநாடியாலும் ஒருகாற் பிங்கலை நாடியாலும் ஓடி, கணுக்களிலே இடறி வாயுச்சிதறி, மேலே போய்க் கபாலத்தைச் சுற்றி நாசியாற் புறப்படும். இடை பிங்கலை, சுழுமுனை நாடிகள் மூன்றும் பிராணவாயுவுக்குரியன.

2. பின்னது என்றது பூரகத்தை. பூரகம் பின்னது எனவே இரேசகம் முன்னது என்பது தானே பெறப்படும்; படவே கும்பகம் (இரேசகத்தின்) முன்னதும் (பூரகத்தின்) பின்னதும் என்பது இனிது விளங்கும். ஆசிரியரே, ''முன்னது இரேசகம் முப்பத்திரண்டு பின்னது பூரகம் பேசும் ஈரெட்டு'' (அடி 177 - 178) என்பதுங் காண்க.

3. பிராணவாயு நாசியிலே பன்னிரண்டங்குலம் புறப்பட்டு நான்கு அங்குலங் கழிந்துசெல்ல எட்டங்குலம் உள்ளே அடங்கும். வெளியே கழிந்து செல்லும் நான்கு அங்குல நட்டத்தைச் சமமாக்கும் முகமாகச் செய்யப்படுவதே வாசியோகமாகும். ஒரு நாளில் வெளியேறுஞ் சுவாசம் 21600. இதில் மீளவரவாகுஞ் சுவாசம் 14400. மீளாது பிரிந்துபோகுஞ் சுவாசம் 7200. நாடோறும் பிரிந்துபோகுஞ் சுவாசத்தால் வாழ்நாள் குறைகின்றது; ஆயுள் குறைந்து முடியும். சுவாசநட்டத்தைச் சமமாக்கும் விதத்தை அடி 177 விளக்கம் 3 இல் பார்க்க.

4. வாயுவை ஒடுங்கச் செய்து, வெளியே செல்வதில் நான்கு அங்குலங் கழியாமற் சென்றமட்டும் உள்ளே வாங்குவது (2) அழி, யாது தடுத்தல் எனப்படும் பிராணுயாமயோகமாகும்.

5. மூச்சுப் பயிற்சியால் வாழ்நாளை நீடிக்கலாம். இதனைத் திருமூலர்

"ஏற்றி இறக்கி இருகாலும் பூரிக்கும்
காற்றைப் பிடிக்குங் கணக்கறி வாரில்லை;
காற்றைப் பிடிக்குங் கணக்கறி வாளர்க்குக்
கூற்றை உதைக்குங் குறியது வாமே." என்று கூறுவ

தால் அறியலாம்.

165 நாடியோர் பத்து நாடிநா டிகள்புக்(கு)
ஓடிய வாயு ஒருபதுந் தேர்ந்து

பொ—ரை: (எழுபத்திராயிரம் நாடிகளுள்ளே) சிறந்த பத்து நாடிகளையுந் தூய்மைப்படுத்தி, அப்பத்து நாடிகளினுள்ளேயும் புகுந்தோடும் வாயுக்கள் பத்தினையும் நிறுத்தும் விதத்தினையுந் தெரிந்து (கொள்வதற்கானவற்றையுங் கூறினுர்) எ—று.

விளக்கம்: 1. ஆகாயத்தை உள்ளேயுடைய குழல் போன்ற எழுபத்திராயிரம் நாடிகளுண்டு. அவற்றினூடே ஓடும் வாயுவும் எழுபத்திராயிரமாகும். நாடிகளுட் பத்து நாடியும் வாயுக்களுட் பத்து வாயுக்களுஞ் சிறந்தவை.

2. பத்து நாடிகளாவன: இடைகலை, பிங்கலை, சுழுமுனை, காந்தாரி, அத்தி, சிங்குவை, அலம்புடை. பூடா (புருடன்), சங்கினி, குகுதம் என்பனவாம். இவைபிருதிவியின் வழிநாடிகள். பத்து வாயுக்களாவன: பிராணன், அபானன், வியானன், உதானன், சமானன், நாகன், கூர்மன், கிருகரன், தேவதத்தன், தனஞ்சயன் என்பனவாம்.

3. பத்து நாடிகளிலும் வாயுவை நிறுத்துதல் (3) பத்து நாடியும் ஒக்க வாங்குதல் என்னும் பிராணுயாம யோகமாகும்.

167 சொன்ன நாடிகளிற் சுழுமுனை நடுவாம்
இன்னதின் பக்கத்(து) இடைபிங் கலையாம்

பொ—ரை; சொல்லப்பட்ட அந்தப் பத்து நாடிகளுள்ளும் சுழுமுனை நாடியே (வீணுத்தண்டுக்கும், உடம்புக்கும், ஏனைய நாடிகளுக்கும்) நடு நாடியாகும். இத்தன்மை வாய்ந்த சுழுமுனை நாடியின் இருமருங்கிலு

முன்னவை இடைநாடிபிங்கலைநாடிகள். (இவைகளிலே தனித்தனி பிராண வாயுவை ஏற்றுந் தன்மையையும் உரைத்தார்) எ–று.

விளக்கம்: 1. சுழுமுனை நாடி: சாம்பவி சத்தியாகிய இந்த நாடியே எல்லா நாடிகளிலுஞ் சிறந்தது. பரை எனப்படும் இந்த நாடி பரத்தில் ஒடுங்குவதாயும், மலத்தில் நீங்கியதாயும் பிரம்மவடிவாய் நிற்பதாற் பிரம்மநாடி எனக்கருதப்படுகின்றது. இது மூலாதாரச் சதுரத்துள், மேல்நோக்கியிருக்கும் முக்கோணத்தினுள்ளே, முக்கோணத்தின் கீழ் இருகோணங்களுக்கும் நடுவே, அத்திரி சோணத்தின் கீழ்க் கொடியைப் பற்றி, ஓங்காரம்போல வலமாய் வளைந்து, கீழே சென்று மடிந்து, ஓங்காரத்தின் நடுவே பிளந்து புறப்பட்டுத் திரிகோணத்தலையாலே நேரே சென்று, பிரம்ம தண்டெனப்படும் முள்ளெலும்பினூடே போய்க் கபாலத்தை முட்டி நிற்கும். சுழுமுனை நடுவில் (நாபியில்) கோழி முட்டை வடிவமாக விலம்பினி நாடியுண்டு. அதிலே எழுபத்தீராயிரம் நரம்புகளுந் தோன்றி முடிந்த உறிபோல மேல் நோக்கியும், கீழ் நோக்கியும், குறுக்கேயும் ஓடும். சுழுமுனை நாடியின் அடி பிளவுபட்ட மூங்கிற்குழல் போன்றிருக்கும். குழலுக்குள்ளே குழலைச் சொருகினாற் போன்று இதனுள்ளே சித்திர நாடியும், சித்திரநாடியினுள்ளே வச்சிர நாடியும் நிற்கும். இந்தச் சுழுமுனை நாடியைத் தொடர்ந்து நிற்பது குண்டலி சத்தியாகும். சுழுமுனை நாடியின் உடல் தூலம், சூக்குமம் பரம் என மூவிதமாக உள்ளது. சுழுமுனை நாடியின் தூல வடிவம் (மூலாதாரத்து) வீரியம்; சூக்கும் வடிவு (புருவநடு) பிந்து. பர வடிவே (சந்திர மண்டலத்து) அமுதம். மூலாதாரத்திலிருந்து பிரம்மரந்திர பரியந்தமும், பிரம்மரந்திரத்திலிருந்து மூலாதார பரியந்தமுந் தொடர்ந்து இடைபிங்கலைகளின் நடுவே சூரியவடிவாய் விளங்கி நிற்பது சுழுமுனைநாடி.

2. இடைபிங்கலை நாடிகள்:- மூலாதாரத்துள் மேல்நோக்கிய முக்கோணத்தின் கீழ் இடதுகோண மூலையில் இடை என்னும் நாடியும், கீழ் வலதுகோண மூலையிற் பிங்கலை என்னும் நாடியும் எழுந்து, மேலேயோடுஞ் சுழுமுனையை இச்சித்து, இரண்டுந் தொடர்ந்து மாறிமாறிச் சுற்றிக், கோணத்தலையளவிலே ஒரு வளைவும், நாபியிலுள்ள விலம்பினி நாடியிற் கோக்கப்பட்டனவாய் ஒருவளைவும், இருதயத்தளவிலே ஒரு வளைவும், கண்டத்தளவிலே ஒரு வளைவும், நெற்றியளவிலே ஒரு வளைவுமாக வளைந்து, மேற்சுழுமுனையைவிட்டு விழுந்து நாசிநுனியிலே தங்கும். அந்தவளைவுகளுக்குப் பஞ்சக்கிரந்தி என்று பெயர். இடதுநாசியைப் பற்றி நிற்பது இடைகலைநாடி, அதன் அதிதெய்வம் சந்திரன். இடைநாடியி

னுள்ளேயுள்ள காற்றுக் குளிர்ச்சியானது. வலது நாசியைப்பற்றி நிற்பது பிங்கலைநாடி. அதன் அதிதெய்வம் சூரியன். பிங்கலை நாடியினுள்ளே உள்ள காற்று வெப்பமானது.

3. எழுபத்திராயிரம் நாடிகளுட் சிறந்தவை இடை, பிங்கலை, சுழு முனை என்னும் மூன்றுமே என்பதை,

> ''எல்லையி லெழுந்த நாடி எழுபத் திரா யிரத்தில்
> நல்லதோர் நாடி மூன்றும் நயந்துநீ பார்த்தி டாயே''

என்ற அனுபவ வாக்கால் அறியலாம்.

4. இடைநாடி, பிங்கலை நாடிகளிலே தனித்தனி பிராணவாயுவை ஏற்றுதல் *(4)* **பிறித்தல்** எனப்படும் பிராணுயாம யோகமாகும்.

**169 அக்கினி திங்கள் ஆதவன் கலைகள்**
**புக்கமுச் சரமும் போய்மீண்(டு) இயங்கு(ம்)**

**பொ—ரை:-** அக்கினி மண்டலம், சூரிய மண்டலம், சந்திர மண்டல மாகியவற்றிலேயும், பிராசாத கலைவழியிலேயும், முச்சரமும் நேரே புகுந்த நாசி நுனியிலேயும் வாயுமேலேறியுங் கீழிறங்கியுஞ் சுற்றுவட் டமாய்த்திரியும் (இயல்பையுங் கூறினுர்) எ—று.

**விளக்கம்:-** 1. அக்கினி, சூரியன், சந்திரன் என்பன அந்த அந்த மண்டலங்களைக் குறித்தன. அக்கினி மண்டலம், மூலாதாரம் சுவாதிட்டானம் ஆகிய இரண்டு ஆதாரங்களையும் வியாபித்துள் ளது; சூரிய மண்டலம், மணிபூரகம், அநாகதம் ஆகிய இரண்டு ஆதாரங்களையும் வியாபித்துள்ளது. சந்திரமண்டலம், விசுத்தி, ஆஞ்ஞை இரண்டினையும் அவற்றின் மேலுள்ள உச்சிப்பாகத்தை யும் வியாபித்துள்ளது. இம்மூன்று மண்டலங்களிலேயும் வாயு வைச் செலுத்துதல் (5) மண்டலத்து ஆக்கல் என்னும் பிரா ணுயாம யோகமாம்.

2. கலைகள் - பிராசாத கலைகள்; அவையாவன மேதைகலை, அர்க் கீசகலை, விஷகலை, விந்துகலை, அர்த்த சந்திரகலை, நிரோதிகலை, நாதகலை, நாதாந்தகலை, சக்திகலை, வியாபினிகலை, வியோமரூபை கலை, அனந்தைகலை, அனுதைகலை, அனுசிருதைகலை, சமனைகலை, உன்மனைகலை என்னும் பதினுறுமாம். பிராசாதம் என்னுஞ் சொல் சிவஞானமாகிய கதியைத் தருவது என்னும் பொருளையுடையது.

3. பிராசாத வழியிலே வாயுவைச் செலுத்துதல் *(6)* **கலைவழியின் நிறுத்தல்** என்னும் பிராணுயாம யோகமாகும்.

4. முச்சரமும் நேரே புக்க இடம் நாசிநுனி. சரம் - சுவாசம். முச் சரம்:- இடப்பக்க நாடியாகிய இடையில் நடத்தல்; வலப்பக்க நாடியாகிய பிங்கலையில் நடத்தல்; நடுநிற்கு நாடியாகிய சுழுமுனை யில் நடத்தல். முச்சர இயக்கம்:- இடை, பிங்கலை, சுழுமுனை மூன்றும், மூலாதாரந்தொட்டு, ஆறுதாரங்களிலும் மூன்று மண்ட லங்களிலும் ஊடுருவி முட்டி நின்று, இடை பிங்கலை இரண்டுஞ் சுழுமுனையிலே இணங்கி, மேல் கீழாகச் சுற்றித் திரியும்.

5. நேரே வாயு நாசிநுனியிலே புறப்படுவதாகக் காண்டல் (7) நடுவே நிற்பித்தல் என்னும் பிராணயாமயோகமாகும்.

171 மூலகுண் டலியாம் உரகமூச் செறிந்து
வாலது மேல்கீழ் மண்டல மிட்டுப்
படந்தனைச் சுருக்கிப் படுத்துறங் குவது
நடந்துமேல் நோக்கி ஞானவீ டளிக்கு(ம்)

**பொ - ரை:-** வால் மேலுந் தலைகீழுமாக வட்டமிட்டுப் படமெடாது மூச்சுவிட்டுத் துயிலுவதாகிய குண்டலி என்னும் பாம்பு, மூலாதாரத் திலிருந்து எழுந்து மேல்நோக்கி (முள்ளந்தண்டினுள்ளேயுள்ள சுழுமுனை நாடியினூடாக) ச்சென்று, சிவஞானத்தை உதிப்பித்து (அந்த ஞானத் தால்) முத்தியினைக் கொடுக்கும். (இயல்பினையும் உரைத்தார்) எ - று.

**விளக்கம்:-** 1. குண்டலியோகங் கூறப்படுகின்றது. குண்டலி என்பது ஒரு தலையும், ஒரு வாலுங்கொண்ட பாம்பின் வடிவமுள்ள சத்தி: மூலாதாரத்திலுள்ளது. அது முருகனது கைவேலாகும். முருகனது வேலாயுதத்தையே அம்முருகனாக வைத்து வணங்கும் மரபுபற்றிக் குண்டலிசத்தியை முருகனாகக் கூறுவர். (அடி 147-2 பார்). சூர பன்மனுக்கு வரங்கொடுத்த ஞான்று, "தாவிலாத நஞ்சத்தி ஒன்றேயலா லேவர் வெல்வர்" என்று கூறியருளிய சிவபெருமானே தமது சக்தியென்று சுட்டப்பட்டதுதானே, முருகப்பெருமானது திருக்கரத்துச் சத்தியுமாதலின், அவ்விரு சத்திகளும் குறியாலன்றிப் பொருண்மையால் வேறாகாமை இனிது புலப்படும். "குண்டலியாஞ் சிவகுகன்" என்றே தேவராய அடிகள் கந்தசட்டி கவசத்திற் கூறி யுள்ளார். சித்தாந்த நூல்களிற் சுத்தமாயை அல்லது மாமாயையே குண்டலிசத்தி எனப்படும்.

2. மண்டலமிட்டு — மூன்றரைச் சுற்று வட்டமிட்டு. மண்டலம் — வட்டம். ஞானவீடு — ஞானத்தால் அடையும் வீடு. குண்டலி சத்தியின் உச்சுவாச நிச்சுவாச சத்தங்களே அஜபா மந்திரம்

என்பர். ''குண்டலி அதனிற் கூடிய அசபை விண்டெழுமந்திரம்'' என்பது விநாயகர் அகவல். குண்டலி சத்திநாடிகளனைத்தையுந் தொடர்ந்து நிற்கும்.

3. **மேல் நோக்கி நடந்து:-** யோக மரியாதையை அறிந்தயோகிகளிடத்தே, காற்றை உறுதியாக உடலுள்ளே தடுத்து அசைப்பிக்கும் உபாயத்தைப் பயின்று அசைக்குமளவில், ஒளியோடு கிளம்பும் மூலக்கனல் குண்டலி சத்தியைத் தாக்கும். அக்குண்டலி ஊர்த்துவ (மேல்) முகமாய் எழுப்பப்படும். மூலாதார கமலத்திலிருந்து, தாமரைத் தண்டிற்குள் விளங்கும் மெல்லிய நூலைப்போல அதிசூக்குமமாய், மின்னற்கொடிபோலப் பிரகாசித்துக் கொண்டு புறப்பட்டு முள்ளந்தண்டினூடே மேல் நோக்கி நடந்து செல்லும். காற்றோடும் நெருப்போடுஞ் சேர்ந்த அக்குண்டலி சத்தி சுழுமுனை வழியிலுள்ள பிரம்ம முடிச்சையறுத்து மேலேசென்று, விஷ்ணுமுடிச்சையும் அறுத்து அதன்மேற் சென்று, உருத்திர முடிச்சை அடைந்து நிற்கும். பஸ்திரிகா கும்பகத்தால் உருத்திர முடிச்சையும் அறுத்தால் மேற்சென்று புருவ நடுவிலுள்ள விந்துத் தானத்தை அசைக்கும். அப்பொழுதே சூரிய சந்திரரின் ஐக்கியம் உண்டாகும். பரிதியும் மதியும் மன்னி ஒன்றுகும்.

4. **ஞான வீடளிக்கும்:-** முள்ளந்தண்டினூடே செல்லுஞ் சுழுமுனை நாடியினூடாக மேல்நோக்கிப் புறப்பட்ட குண்டலிசத்தி, பரமாகாச வெளியில் ஞானச்சந்திர மண்டலத்திலுள்ள ஆயிர இதழ்த் தாமரை மலரை அடைய ஞானம் உதிக்கும். ஞானத்தாற் பாசவீடும், பேரின்பப் பேறும் உண்டாகும். பரமாகாசம் என்பது, இலலாடத்துக்கு மேல் கபாலத்தின் ஊர்த்துவ பாகத்தின் இறுதியில், இரண்டங்குலத்திற்கு மேலுள்ள துவாதசாந்தம் என்னும் பிரதேசமாகும்.

5. போய்மீண்டியங்கும் மூலகுண்டலியாம் உரகமென்றியைத்துப் பொருந்துமாயிற் பொருள்கொள்க.

மண்டல மூன்றும் மருவுதூண் புகஅக்
குண்டலி எழுப்புங் கொள்கையீ தென்றுன்
முன்னது இரேசக முப்பத் திரண்டு
பின்னது பூரகம் பேசுமீ ரெட்டுக்
கும்பக நாலோ டறுபதாக் கூறுந்
தம்பமாத் திரையின் தன்மையு முணர்த்தி

**பொ—ரை:-** அக்கினி மண்டலம், சூரிய மண்டலம், சந்திர மண்டலம் எனப்படும் மூன்று மண்டலங்களையும் முறையே அடி நடு முடியாலிணைத்து மூலாதாரம் முதல் பிரமரந்திரம்வரை நீண்டுள்ள முள்ளந்தண்டின் உட்டுளையூடே புகுமாறு அந்தக் குண்டலி சத்தியை அசைத்து மேலே எழுப்புங் கொள்கை இதுவாகுமென்றார். முன்னதாக 32 மாத்திரை இரேசித்து, பின்னதாகப்பதினாறு மாத்திரை பூரித்து, 64 மாத்திரை கும்பித்துப் பிராணவாயுவைக் கட்டுப்படுத்தும் யோகப்பிராணாயாமத்தின் இயல்பையும் அனுபவத்தில் அறியச்செய்து எ - று.

**விளக்கம்:** 1. குண்டலி யோகமார்க்கங் கூறப்படுகின்றது. வச்சிராசனத்திலமர்ந்து, குண்டலியோகப் பிராணாயாமத்தாற் காற்றை உள்ளே தடுத்து மூலத்தை மேலேயுந்தும் பஸ்திரிகா கும்பகப் பயிற்சியால் (காற்றால் ஒளியோடு) கிளம்பிய மூலக்கனல் குண்டலி சத்தியைத் தாக்கும். மூலக்கனலால் நன்கு கொளுத்தப்பட்ட குண்டலிசத்தி எழுந்து காற்றோடும் நெருப்போடுஞ் சேர்ந்து, முள்ளந்தண்டினுள்ளே புகுந்து சுழுமுனை நாடியூடாக முடிச்சுகளையறுத்து மேலே செல்லும். உபாசனா மார்க்கத்தாலும் குண்டலியை எழுப்பலாமென்பர். விநாயகர் அகவலிலும், ''மூன்று மண்டலத்தின் முட்டிய தூணின், நான்றெழு பாம்பின் நாவில் உணர்த்தி'' (அடி 39, 40) என்று கூறப்பட்டுள்ளது. ''மண்டலங்கள் மூன்றும் மருவுமா றுதாரங் கொண்டுதிரியுடம்பு'' எனச் சிற்றம்பலநாடிகள் வெண்பா, மண்டல விளக்கந்தருதல் காண்க.

2. **இரேசகம்** - காற்றை வெளியேவிடுதல்; நிசுவாசம் என்பர். **பூரகம்** - காற்றை உள்ளே நிரப்புதல்; உசுவாசம் என்பர். **கும்பகம்** - சுழுமுனை நாடியின் வழியாகப் புருவநடுவில் மனத்தோடு காற்றை உள்ளே நிறுத்திப்பழக்குதல். இரேசகத்திற்கு முன்னும் பூரகத்திற்குப் பின்னும் காற்றை அசைவற உள்ளே நிறுத்துதல் கும்பகம் எனப்படும். தம்பனம் - உயிர்ப்பின் இயல்பான நடையைக் கட்டுப்படுத்துதல். தம்பனம், தம்பமென நின்றது.

3. **தம்பமாத்திரையின் தன்மை:-** வலது நாசிவழியாக 32 மாத்திரை வாயுவை வெளியே போகவிட்டு, இடது நாசிவழியாக வாயுவை 16 மாத்திரை உள்ளே வாங்கி 64 மாத்திரையளவும் உள்ளே நிறுத்திப் பயிலவேண்டும். சுவாசத்திலே சாதாரணமாக வெளியே செல்லுவது 12 அங்குலம்; திரும்ப உள்ளே வருவது 8 அங்குலம்.

மாத்திரைக்கு 8 அங்குலமாக 16 மாத்திரை பூரிக்க
உள்ளேவருவது 16 × 8 அங். = 128 அங்குலம்

மாத்திரைக்கு 4 அங்குலமாக 64 மாத்திரை கும்பிக்க
உள்ளே சேருவது 64 × 4 அங். = 256 அங்குலம்

16 மாத்திரை பூரித்து 64 மாத்திரை கும்பிக்க
உள்ளேசேருவது 128 அங். + 256 அங். = 384 அங்குலம்

மாத்திரைக்கு 12 அங்குலமாக 32 மாத்திரைக்கு
வெளியேறுவது 12 × 32 = 384 அங்குலம்

32 மாத்திரை இரேசிக்க வெளியேறுவதும், 16 மாத்திரை பூரித்து 64 மாத்திரை கும்பிக்க உட்சேருவதும் சமமாதல் காண்க. இங்ஙனம் பயின்றால், பிராணனை இடைபிங்கலை என்னும் நாடிகளில் 12 அங்குலம் புறம்பே செல்லவிடாமற் கட்டுப்படுத்தி, உள்ளே சுழுமுனை நாடியிற் செலுத்தலாம். இது குண்டலியோகப் பிராணு யாமம்.

4. ''வாமத்தில் ஈரெட்டு மாத்திரை பூரித்தே
ஏமுற்ற முப்பத் திரண்டு மிரேசித்துக்
காமுற்ற பிங்கலைக் கண்ணுக இவ்விரண்டு
ஓமத்தா லெட்டெட்டுக் கும்பிக்க உண்மையே'' எனவும்,

''ஏறுதல் பூரகம் ஈரெட்டு வாமத்தால்
ஆறுதல் கும்பகம் அறுபத்து நாலதில்
ஊறுதல் முப்பத் திரண்டதில் ரேசகம்
மாறுதல் ஒன்றின்கண் வஞ்சக மாமே'' எனவுந் திருமந்திரம் யோகப் பிராணுயாம இலக்கணங் கூறுகின்றது.

181 மூலமே முதலா முடிநடு உச்சிப்
பாலள வினுநீள் படுதுளை நோக்கி
மூலாதா ரத்தின் முச்சுழிச் சுடரை
மேலாதா ரத்தின் மெல்லெனத் தூண்டி
இருவழிக் காலும் ஒருவழி நடத்திக்
கருவழி யடைத்துக் கமலமா(று) உருவி

பொ-ரை:- மூலாதாரந் தொட்டுத் தலையின் நடுஉச்சித்தானம் அளவும் நீண்டுள்ள முள்ளந்தண்டினுள்ளேயுள்ள சுழுமுனைத் துவாரத்தைப் பார்த்து, மூலாதார (முக்கோணத்துள்ளே மூவிடத்திலிருக்கும்) அக்கினிச் சுடரால் சத்தியைப் பிரகாசிக்கச் செய்து அதன் மேலுள்ள ஆதாரங்களிற் செல்லுமாறு மெதுவாகச் செலுத்தி, இடைபிங்கலை நாடிகளின்வழியே வெளியே ஓடாது பிராணவாயுவைத் தடுத்து,

திறக்கப்பெற்ற சுழுமுனை நாடிவழியே உள்ளே ஓடுமாறு செய்து, மனம் இந்திரியங்களின் வயப்படாது புலனடக்கித், தாமரைப் பூவிதழ் வடிவான ஆறுதாரங்களையுந் தாண்டி எ-று.

**விளக்கம்:-** 1. (முடிநடு) உச்சித்துளையே கபால வாயில். இதைப் பிரம்ம ரந்திரம் என்பர். ரந்திரம்:- துளை. தொளை எனவும் பாடம்.

2. மூலாதாரத்தின் முச்சுழிச்சுடர் - குதத்திற்குங் குறிக்கும் இடையிலிருப்பது மூலாதாரம். இது சதுரவடிவமானது, இச்சதுரத்துள்ளே மேல் நோக்கிய முக்கோணமுண்டு. அம்முக்கோணத்துள் மூன்றிடங்களில் ரம் என்னும் அக்கினி பீசம் இருக்கின்றது. பிராணனும் அபானனுஞ் சேர மூலக்கனல் பிறக்கின்றது. இதுவே முச்சுழிச்சுடர். விநாயகர் அகவலிலும், ''மூலாதாரத்து மூண்டெழு கனலைக் காலால் எழுப்புங் கருத்தறிவித்து'' என்று கூறப்படுகின்றது.

3. மேல் ஆதாரம் - சுவாதிட்டானம் முதலான ஏனைய ஆதாரங்கள்.

4. மூலாதாரத்து முச்சுழிச்சுடரை மேலாதாரத்து மெல்லெனத்தூண்டி:- மூலாதார முக்கோணத்து அனலாற் பிரகாசமான சத்தியைத் தியானித்து, கும்பகத்திலே வாயுவை மேல்நோக்கித் தள்ளுவது. (8) இஃது அங்கிப் பிராணாயாம யோகமாகும்.

5. இருவழிக்கால் என்றது இடைநாடி, பிங்கலை நாடிகள் வழியே வெளிச்செல்லும் பிராணவாயுவை. ஒருவழியென்றது சுழுமுனை நாடிவழியை. பிராணவாயுவை இடை பிங்கலை நாடிகளிலே செல்லாது தடுத்து, சுழுமுனை நாடிவழியே ஓடுமாறு வருந்தி ஏற்றுதல். (9) சுழுமுனைப் பிராணாயாம யோகமாகும்.

6. கருவழியடைத்து:- நாபிக்குக் கீழேயுள்ள சுழுமுனை, மேல்நோக்கிய வேரையும், கீழ்நோக்கிய கிளைகளையும் உடையதாய், வாயுக்கள் செல்லும் வழியாக உடலெங்கும் பரந்து நிற்கின்றது. வாயுக்கள் செல்லும் வழிகள் 72000 நாடிகள். அந்த நாடிகளனைத்தும் எங்குந்துவாரமுள்ளன. யோகப் பயிற்சியால் (மூலாதாரத்தில் மூண்டெழுசுடரால்) அத்துவாரங்களை அடைத்தாற், பிராணவாயு முள்ளந்தண்டினூடு சுழுமுனை வழியே மேல்நோக்கிச்செல்லும். இதுவே முத்திவழி எனப்படும். துவாரங்களை அடையாதவிடத்துப் பிறவியைத்தரும்; இதுவே கருவழி. யோகசிகை உபநிடதத்தில் இதன் விரிவைக் காணலாம். சுவாதிட்டானத்திற்கு நேரேயிருப்பது கருவழி எனவும்: இதனை அடையாவழி, காமாக்கினி பெருகி யோக முயற்சியைப் பாழாக்கிவிடும் எனவுங்கூறுவர். சிவ

யோக சுவாமிகளுங் "கருவழியைக் கடவென்றான் எங்கள் குரு நாதன்" எனப்பாடியுள்ளார். சாக்தர் இக்கருவழியை வாமமார்க்கம் என்பர். கருவழியை அடைத்துத் தேவமார்க்கத்திற் செல்வது முத்திவழி. மனம் இந்திரியங்களின் வழிச் செல்லாது, தியான யோகத்தாலே தடுத்து நிறுத்துதல் (10) அடைத்தற் பிராணாயாம யோகமாகும்.

7. கமலம் ஆறு உருவி: ஆறு ஆதாரங்களுந் தாமரைப் பூத்தள வடிவில் அமைந்துள்ளன. மூலாதாரம் முதலாகவுள்ள ஆறு ஆதாரங்களிலும் ஆறு பேதமாகப் பிராணவாயுவைச் செலுத்துதல் (11) ஆதாரத்து உய்த்தல் எனும் பிராணாயாம யோகமாகும். ஆதாரம் ஆறிலுமுள்ள சக்திவடிவ தெய்வமாகத்தன்னைப் பாவனை செய்து தியானித்தல் ஆதாரயோகம் எனப்படும். "ஆதாரம் ஆறை யுந்தாண்டி - அருள் அம்பலத்தே நின்று" என்றார் சிவயோக சுவாமிகள்.

187 பன்னிரண்(டு) அந்தம் பரிதியு மதியு
மன்னிஒன் றான வண்ணமுந் தெரிந்து

பொ - ரை: (பிராசாத கலைகளின் தோற்றக் கிரமத்தின்படி) பன்னிரு கலைகளுக்கும் அந்தமான புருவநடுவாகிய சுழுமுனைத் தானத்தில் அருட் சத்தியை நிறுத்தி' இடைபிங்கலை நாடிகளின் வழியே பிராணவாயு ஓடாது சுழுமுனையில் நிலைத்து ஒன்றான தன்மையையுந் தியானத் தால் அறிந்து எ - று.

விளக்கம்:- 1. பிராணன் சுழுமுனையில் நிலைபெற்ற உடனே, இடை பிங்கலை நாடிகளின் அதிதெய்வங்களான சந்திரனுஞ் சூரியனும் சுழுமுனை நாடியில் ஒடுங்கும். பிராணன் சுழுமுனை நாடியில் ஒடுங்கவே, மனமுஞ் சுழுமுனை நாடியில் இலயிக்கின்றது. இன்பரச அனுபவம் உண்டாகின்றது. மனதைச் சந்திரனாகவும், பிராணனைச் சூரியனாகவும் யோகசிகையிற் கூறப்படுதலும் நுனித்து உணர்தற் குரியது. மன்னி - அருட்சத்தித் தியானத்தில் நிலைத்து.

"அணைவரிய கோதண்ட மடைந்து
அருளின் வழிநின்று" - என்பது சித்தி (299)

2 ஆதாரம் ஆறும், மண்டலம் மூன்றும், கிரந்தி மூன்றுமாகப் பன்னி ரண்டுக்கு மேலிருப்பது புருவநடு, ஆதலால் 12 அந்தமான புருவ நடுவை இவ்வாறுங் கணக்கிடலாம். 'மதியிலே ரவி வைத்திட வேண்டுமே' என்ற சிவயோக சுவாமிகள், 'மதியிலே ரவி வைத் திடும் மாதவர்' எனப் பாராட்டுதலையுங் காண்க.

3. மனஅறிவுடனே வாயுவும் இலயித்ததாக்குதல் (12) ஒன்றுக்குதல் என்னும் பிராணுயாம யோகமாகும். சூரிய சந்திரர்களின் சேர்க்கையே! ஹடயோகம் எனப்படும்.

## 3. யோகத்தில் யோகம்

189 கமடமைந்(து) அடக்குங் கருத்தெனப் பொறியின்
மமதைகள் அடக்கி மனோலயம் ஆக்கி
மூலக் கனலால் முழுமதி உருக்கிப்
பாலைப் பருகும் பண்புதந் தருளி

பொ-ரை:- ஆமை தன்னுடைய ஐந்து உறுப்புக்களையும் (வெளியுலகத் தாக்கம் ஏற்படாது வேண்டியபொழுது) உள்ளேயடக்கி அசைவற ஒடுங்கிக் கிடக்கும். அத்தன்மையைப் போல, (வெளியுலக ஆசை வயப்படாது) ஞானேந்திரிய கன்மேந்திரியங்களின் வலியை அடக்கி, மன அசைவற்று ஒடுங்கியிருந்து, மூலாதாரத்திலே மூண்டெழுங் கனலாற் சந்திர மண்டலத்தின் கீழ்ப் பகுதியை உருகும்படி செய்து, (உண்ணாக்கின் மூலம் சிந்தும்) பாலமுதினை அருந்தித் தேகம் முழுவதும் நிறைக்கும் யோகப்பண்பினையும் அநுபவத்தில் அறியச்செய்தருளி எ-று.

விளக்கம்:- 1. யோகத்தில் யோகமாகிய நிராதாரயோகங் கூறப்படுகின்றது. பிராசாத, பஞ்சாக்கர முதலியவற்றின் முறையாற் குரு உபதேசித்தபடி தியானம்பண்ணுவது நிராதாரயோகம். இவ்வியல்பையுடைய அசபாயோகமும் இதனுடன் கூறப்படுகின்றது. இஃது ஓர்வகைப் பிரத்தியாகாரம். இது யோகசித்தியடைவிலே, பிராணுயாம சித்தியின் பின் நிகழ்வது. திருவருட்பயனிலும், ''புலனடக்கித் தம் முதற்கண் புக்குறுவர் போதார், தலன்னடக்கும் ஆமை தக'' எனக்கூறப்பட்டிருக்கின்றது. கமடம் - ஆமை; கமடம் வடமொழி; அடவிகுதி.

2. பொறியின் மமதைகள் அடக்குதல் - ஐம்புலன்களாகிய மதயானைகளைச் சத்தாதி விடயசேரி திரியாது, மன உறுதியாகிய அங்குசத்தால் அடக்கியாளுதல். ஐம்புல விருந்து அற்றால் மமதைகள் தீரும். குருவாய்வந்து அருளும் அருட்சத்தி, மனத்தை வில்லாகவும் ஐம்புலன்களை மலரம்புகளாகவுங் கொண்டு, சத்தம் முதலிய விடயங்களைப் போக்கிப், பொறிமமதையடக்கி ஆளுகின்றான். புலனடங்கத் தியானம் நிலைக்கும். மமதை - செருக்கு.

3. மனோலயம்:- வாயுவைக் கும்பகத்தாற் கபாலத்திலேயடக்க மனம் சலிப்பறும்; மனோலயமாகும். மலப்பிணிப்பும், தன்முனைப்புமற்று,

உயிர் இறைவன் திருவடி நிறைவில் ஒடுங்குதல் மனோலயமாகும். பூசைகோடி தோத்திரம்; தோத்திரங்கோடி செபம்; செபங்கோடி தியானம், தியானங்கோடி நிட்டை, நிட்டைகோடி மனோலயம் என்பது வேதாகமவிதி. "மனத்தை முதன்மையாகக் கொண்டே தொழில்கள் தோன்றுகின்றன; அத்தொழில்கள் உண்டாக்கும் புண்ணிய பாவங்களால் அந்த மனம் பற்றப்படுகின்றது. ஆகையால் அம்மனத்தைத் தடுத்து மௌனத்தைப் பயில்வாயாயின் புண்ணிய பாவங்கள் தோன்ருது ஒழிகின்றன" (யோகசிகை 6-61) இஃது இலயயோகம் எனப்படும்.

4. மூலக்கனல் - இலய யோகப்பயிற்சியால் எதிலிருந்து எல்லாக் கருவிகளுடனும் மனந்தோன்றியதோ அதனிடத்தே, அம்மனத்தை யோகி ஒடுக்க, அங்கேயே பிராணவாயுவும் ஒடுங்கும். யோகத்தாற் பிராணனும் அபானனும் ஐக்கியப்படும். படவே மூலக்கனல் பிறக்கும். இதுவே, சுக்கில (வீரிய) த் தேக்கமாகிய பாற்கடலிலெழும் ஆலகாலவிடம். மூலக்கனல், நாபிக்கு அடியிலுள்ள நரம்பு மண்டலத்திற்குக் கீழே நிற்கும்பொழுது உண்டாகும் வெப்பமே விடம் எனப்படும்.

5. மூலக்கனலால் முழுமதி உருக்கிப் பாலைப்பருகும் பண்பு:- மூலக்கனல் நாபிச்சக்கரத்தில் மேல்நோக்கி நிற்கும் பொழுது, (அக்கனல்) சந்திரமண்டலத்தின் கீழ்ப்பக்கத்தே உறைப்பாகப் படும். படவே சந்திரனுருகிப் பாலமுதைப் பொழியும். உபாசகன் நாவினடியிலே கிறீம் என்ற மந்திரத்தோடு தியானிக்கின் பாலைப் பருகுவான் என்பர். மாங்காய்ப்பாலுண்டு மலைமேலிருப்பவர் இவரே.

"மூலக் கனலை முடுகி முடுகி முழுமதியின்
பாலைப் பருகிப் பரவெளிக் கேசென்று பற்றிநின்ருர்"
என்பது சிற்றம்பல நாடிகள் கலித்துறை.

உய்யவந்தாரும், 'காயத்துள் மெய்ஞ்ஞானக் கள்ளுண்ணல்' என்பர். மூலக்கனல் வெப்ப (மாகிய ஆலகால விட) மே சந்திர மண்டலத்தை அடைந்ததும் அமுதமாகப் பரிணமிக்கின்றது என்பாருமுளர். "ஆலத்தினுல் அமுதாக்கிய கோன்" என்ற திருக்கோவையார்ப் பாடலுக்கு உரைகண்ட பேராசிரியரும், பாலினுலாகிய தயிர்போல ஆலத்தால் அமுதாகியது என விளக்கியுள்ளார்; யோகசிகை உபநிடதத்திலும் சிவபெருமான், சுழுமுனு நாடியின் பரவுடல் அமுதமயமானது எனவே கூறுகின்ருர். இஃது அறிஞர் சிந்தித்தற்குரியது. யோகியின் உடலெங்கும் அமுதம் நிறைந்து அதனை அழியவிடாது காக்கும்.

**193** இட்டகா மியமும் எண்ணெண் கலையும்
அட்டமா சித்தியும் அன்புறக் கொடுத்து

**பொ-ரை:-** இச்சித்தவற்றை விரும்பியபடியே எய்தும் பேறும், அறு பத்து நான்கு கலைஞானமும், எண்பெருஞ் சித்தியும் பத்தி பெருகுமாறு ஈந்தருளி எ-று.

**விளக்கம்:-** 1. இட்டகாமியம் - விரும்பிய பொருளை எண்ணியமாத்தி ரத்தே பெறுவதோர் அதிட்டம்.

2. எண்ணெண் கலை-அக்கர இலக்கணம் முதல் அவத்தைப்பிரயோகம் ஈறுகவுள்ளவை. இஃது அபரஞானமாகிய பாசஞானம்; முத்திக்குத் தடையானது.

3. அட்டமாசித்தி:- யோகப்பயிற்சியால் வாயுவின் குணங்கள் உட லிலே காணப்படின் சித்திகள் கைவரும். அணிமா, மகிமா, கரிமா, லகிமா, பிராப்தி, பிராகாமியம், ஈசத்துவம், வசித்துவம் என்பன எண்பெருஞ் சித்திகளாகும். உண்மையோகி, இராஜயோகப் பயிற்சியால் உண்டாகும் இந்தச் சித்திகள் சித்த சலனத்தை ஏற் படுத்தி, முத்திக்குத் தடையாகுமென்பதை யறிந்து வெளிப்படுத் தான்; சித்திகள் தன்னுடைய ஏவலைக் கேட்கத்தக்க நிலையில் ஒழுகி உயர்வடைவான். ''எம்மையுணர்ந்த யோகியர்கள் இவற்றை விரும்பார்'' என அட்டமாசித்தி உபதேசித்த திருவிளையாடலிற் கூறப்படுகின்றது. ''திண்டிறற் சித்தர்களே கடைக்கூழை சென்மின் கள்'' என மணிவாசகத்தும் வருதல் காண்க.

4. பிராணயாம யோகத்தால் ஐம்பொறியடக்கம், மன ஒருமைப்பாடு. பால்பருகுதல், இட்டசித்தி, கலைஞானம், அட்டமாசித்தி என்பன உண்டாகும்; யோகத்தில் யோகமுஞ் சித்திக்கும்.

**195** பன்னிரு பட்சியும் பறவா வண்ணம்
என்னுளே நிறுத்தும் இயற்கையும் விண்டான்

**பொ-ரை:-** பன்னிருகாற் புரவி எனக் கூறப்படுஞ் சுவாசத்தை வெளியே போகவிடாமல் உடம்பின் உள்ளே அடக்கி நிறுத்துந் தன்மையயுஞ் சாதனைமூலம் போதனை செய்தருளினர் எ-று.

**விளக்கம்:-** 1. பன்னிருகாற் பட்சி - நிச்சுவாசமாகிய இரேசகத்தே பிராணவாயு பன்னிரண்டங்குலம் வெளியே செல்லும். அதனுல் அது பன்னிருகாற் புரவிஎன வருணிக்கப்படும். பட்சி - குதிரை.

2. வாயு அசையாது நிற்கவே வாயுவினுற் கட்டப்பட்டிருக்கும் மனமுஞ் சலிப்பற்று இலயிக்கும். யோகசுவாமிகளும் 'தச்சன் கட்டா வீட்டிலே தாவுபரி கட்டென்றான் எங்கள் குருநாதன்' என்று பாடியருளினர்.

197 மூலமே முதலா மூவிரு தலத்தின்
கோலமும் பூதக் குறிகளும் அதன்பால்
ஐம்பதோ(டு) ஒன்றும் அக்கர விதமும்
பொன்பொலி கமலப் பூவிரு மூன்றுந்
தாரக எழுத்துஞ் சார்பெழுத்(து) அஞ்சும்
வாரண முகவன் மலரோன் திருமால்
வருத்தமில் உருத்திரன் மகேச்சுரன் சதாசிவன்
உருத்தெளிந் திடநம் உருவே யாகும்
ஆறு மாமுகத்(து) அமர்ந்ததும் இதுவே
வேறிலை என்று மெய்ம்மொழி செப்பி
இலங்குமா யிரத்தெட்(டு) இதழ்த்தா மரைமேல்
துலங்கிடு நடனச் சோதியுங் காட்டி

பொ-ரை:- மூலாதாரம் முதலாகவுள்ள ஆறு ஆதாரதானங்களில் உள்ளனவாகப் பாவனை செய்யப்பெறும் வடிவமும், ஐந்து பூதங்களின் அடையாளங்களும், ஆதார கமலங்களிலுள்ள எழுத்துக்கள் ஐம்பத்தொன்றின் வகையும், (அவ்வெழுத்துக்கள் அமைந்துள்ள) அழகு பொலியுந் தாமரைப் பூக்கள் ஆறும், ஓங்காரத்தோடு கூடிய திருவைந்தெழுத்தும் விநாயகன், பிரமா, திருமால், உருத்திரன், மகேசுரன், சதாசிவன் என்னும் அதிதெய்வங்களும் ஆகிய இவற்றின் வடிவ உண்மையை (கேட்டுச் சிந்தித்து)த் தெளிந்திட யாவும் நந்திருவுருவமே யாகும். அழகிய ஆறு திருமுகக் கோலத்துடன் விரும்பி வீற்றிருந்தருளியதும் இவ்வுண்மை பற்றியேயாகும். எவ்விடத்தும் (உயிருள்ளதும் இல்லதுமாகிய) எப்பொருளிலும் நாம் பிரிப்பின்றி நிற்கின்றோம், ஆதலால் எமக்கு வேருக எப்பொருளுமில்லையென்னும் உண்மை வாசகத்தை உரைத்தருளி, பிரம்ம ரந்திரத்தில் உள்ள ஆயிரத்தெட்டு இதழ்த்தாமரை மலர்மேலே ஆநந்தக் கூத்தாடும் நடராச சிவசோதியையுந் தியான சமாதிமூலங் காட்டியருளி எ-று.

விளக்கம்:- 1. சீவன் சிவனடி சேர்தலே உண்மைச் சிவயோகம்; நிராதார யோகத்தால் சீவன் சிவனடி சேரும். நிராதாரயோகத்திற்கு அடிப்படையாயுள்ள பயிற்சியே ஆதாரயோகம் எனப்பட்டது.

''ஆதாரத் தாலே நிராதாரத் தேசென்று
மீதானத்தே செல்க உந்தீபற
விமலற் கிடமதென் றுந்தீபற'' என்பது திருவுந்தியார் 8.

இவ்விரு யோகங்களுமே, பக்குவான்மா சிவனடியிலே சேரு நெறியாக வேதாகமங்களிலே விதிக்கப்பெற்றனவாகும். திருக்களிற்றுப் படியாரும், ''ஆதாரயோகம் நிராதாரயோகமென மீதானத் தெய்தும் விதியிரண்டே'' எனக் கூறுகின்றது. அவ்விரு நவயோகங்களிற், கருவிகளை நீங்கிக் கரணங்களோடு நின்று கலைஞானத்தாற் செய்யப்பெறும் ஆதாரயோகம் இங்கே கூறுகின்றார். ஆதாரங்களாவன மூலாதாரம், சுவாதிட்டானம், மணிபூரகம், அநாகதம், விசுத்தி, ஆஞ்ஞை என்னும் ஆறுமாம். ஆதாரயோகம் வடிவத்தைப் பற்றித் தியானஞ் செய்வது; ஆதாரங்களில் ஒவ்வொரு தெய்வ வடிவைக் குருவிடத்திலே பெற்று, அந்த அந்த ஆதாரங்களிலே தியானிப்பானும் தியானிக்கப்படும் பொருளுமின்றித் தன்னை மறந்து, அந்தத் தெய்வருபந் தானுகத் தியானித்துச் சமாதியடைதலே ஆதாரயோகமாகும்.

2. ஆதாரங்களின் வடிவம், பூதக்குறி, ஐம்பத்தொரு அக்கரங்கள், ஆதார கமலப்பூ, தூலபஞ்சாக்கரம், தெய்வம் எனப்படிப்படியே தியானிக்கப்படும்.

3. ஐம்பது அக்கரவடிவில் ஆன்மாக்களைப் பக்குவமுற உள்நின்று இயக்கிச் சமயநெறிப்படுத்தி, அகரமாகிய குருவடிவில் வெளிவந்து அருள் புரிபவர் அறுமுகச் சிவமே. தாரக எழுத்தும் சார்பெழுத்து ஐந்தும் என்றது பிரணவ பீசத்தோடு கூடிய தூல பஞ்சாக்கரத்தை. பிரணவமும் பஞ்சாக்கரமுஞ் சேர்ந்த ஆறுஎழுத்தே ஆறுமுகம். ஆகமநூல் உணர்வுள்ள அநுபூதிமான்களிடத்தே இவற்றைக் கேட்டுச்சிந்தித்துத் தெளிக.

4. பிரமாண்டத்திற்குப் பராசத்தி அதிட்டானமாயிருப்பதுபோல (உடலாகிய சூத்திரப் பிரம்மாண்டம் எனப்படும்) பிண்டாண்டத்திற்கு முருகனே அதிட்டானமாயிருக்கின்றான். பிண்டத்திலுள்ள ஆறு ஆதார சக்கரங்களுமே முருகனுக்கு ஆறுமுகங்களாய் அமைந்துள்ளன. விநாயகர் முதலிய ஆருதார வியட்டித் தெய்வங்களும் ஒருங்கு கூடிய சமஷ்டித் தெய்வமே முருகன் என்பது தெளிவு. ஆறெழுத்தலங்காரமும், ''எல்லாக் கடவுளுமோர் வடிவாகியிருந்த செவ்வேள்'' என்று கூறுகின்றது.

5. ஆறு ஆதாரங்களையும் அறுகாற் பீடமாகக்கொண்டு இவற்றின் மேலான பிரம்ம ரந்திரத்தின்மேல் துவாதசாந்தத்தில் 1008 இதழ்த்தாமரைப்பூவில் ஆநந்தசோதி நடனமிடாடுதல் யோகபாவனை யிலே ஞானசாரியராற் காட்டப்பெறும். தியான யோகியர்க்குத் தியானத்தானமாகிய புருவமத்தியிலே தேவ அங்குஷ்டிப் பிர மாணத்தில் நடனச்சோதி காட்சியளிக்குமென்பர்.

6. நடனச்சோதி - நடராசமூர்த்தி. பிரணவத்தின் உள்ளொளியாகிய திருவைந்தெழுத்தே அவர் திருவுருவமாதலின் நடனச்சோதி எனப் பட்டது. அதர்வணவேத நிருசிம்மதாபந்ந உபநிடதம், ஓங்கார மென்னும் சூக்கும தமன் ஆகிய துரிய சருவேசுவரனைத் துவாத சாந்தத்திலே தியானிக்க வேண்டுமென்று கூறுகின்றது. நடனம்- முத்தான்மாக்களுக்கு நித்தியானந்தமளிக்கும் ஆநந்ததாண்டவம். அஃது என்றும் ஒழிவில்லாத அநவரத தாண்டவமாம்.

7. ஆதாரயோகம் சீவபோதத்தோடு செய்யப்படுவது. சீவபோதம் அதோமுகமாகச் சீவிப்பதாதலின் மாயாதேவ சொரூபத்தைக் கற்பிக்கும்; சிவசொரூபத்தைக் கற்பியாது. பாவனையிற் பழக்கிப் பின்னர்ப் பாவனை தேய்ந்து, இல்லாது போகச் செய்யும். ஆதார யோகத் தவப்பயனுகக் குருவருள் கைகூடும். ஆதாரயோகம் கிரியா யோகமாகும்.

209 இருபத் தோரா யிரத்தறு நூறுய்
மருவிநாள் தோறும் வளர்சுவா சத்தைச்
சங்கெனன வாங்கிச் சமனுறக் கும்பித்(து)
அங்கெஙன்(று) எழுப்பும் அசபையும் அருளி

பொ - ரை:- 21600 என்னும் எண்ணிக்கையோடு பொருந்தித் தினந் தோறும் போக்குவரவுற்று இயங்குஞ் சுவாசத்தை (ஹம்ஸ என்னும் அசபா மந்திரத்தைக் கீழ்மேலாக மாற்றி) ஸம் என்ற உச்சாரணத் தோடு வாயுவைப் பூரித்து, உச்சுவாச அளவு நிச்சுவாக அளவோடு சமமாகும்படி கும்பகஞ்செய்து, ஹம் என்ற உச்சாரணத்தோடு வாயு வைச் சுழுமுனை நாடிவழியே குண்டலியோடு ஏற்றி, மூலாதாரம் முதல் ஆறு ஆதாரங்களிலும் நிறுத்தித் தெய்வ உருவங்களைத் தியா னிக்கும் அசபாமந்திர யோகத்தையும் அருளிச்செய்து எ-று.

**விளக்கம்:-** *1. அசபாயோகம் தூல ஆதாரயோகமாகும். அது ஆதார யோகத்திற்குத் துணையாயுள்ளது.*

**2.** *ஹம்ஸம் என்னும் அசபா மந்திரம் 'தாண்டவமான தனி யெழுத்து' எனவும்படும். மூலாதாரத்திலே மேல்நோக்கியுள்ள முக்கோணத்தின் கீழ் இருகோணங்களுக்குள்ளும் வலதுபுறத்தே ஹம் என்றும், இடதுபுறத்தே ஸம் என்றும் அசபாமந்திரம் நிற்கும். சுவாசித்தல்மூலம் அனைத்து உயிர்களும் உச்சரிக்கும் இந்த ஹம்ஸ மந்திரத்தைக் குரு உபதேசப்படி மாற்றி, ஸங் என்ற உச்சரிப்போடு வாயுவை உள்ளே பூரித்து, கும்பித்து, ஹம் என்ற உச்சரிப்போடு சுழுமுனை நாடிவழியே மேலே செலுத்திப் பயிலல் அசபா மந்திரயோகப் பயிற்சியாகும். இவ்வாறு ஸோஹம், ஸோஹம் என்ற உச்சாரணத்தோடு மேலே செல்லும் பிராணவாயு, மூலாதாரம் முதல் பிரமரந்திரம் ஈருகவுள்ள ஒவ்வோர் ஆதாரத்திலும் நிற்கும்; வாயு நிற்க மனமும் இலயிக்கும். மனோலயத்தில் அந்த அந்த ஆதார தெய்வதரிசனம் நிகழும்; அந்த அந்தத் தெய்வ மயமாகத் தானாகும் பழக்கத்தைச் சித்திக்கச் செய்யும். ஸ + அஹம் = ஸோஹம்; இது வேதாந்தம். சிவ + அஹம் = சிவோஹம்; இது சித்தாந்தம். சிவஞானசித்தியார் (சூத். 9 செய். 7) இவ்விரு பாவனைகளுஞ் சமமானவையேயெனக் கூறுகின்றது. இந் நூலாசிரியரும் வேதாந்தம் என்றும் சித்தாந்தம் என்றும் வேறாகக் காணாதவர். ''வேதாந்த சித்தாந்தம் வேறாகக்காணோம்'' என்பார். சிவயோகசுவாமிகள் (அடி 393 விளக்கம் II பார்)*

**3.** *''சூக்கும பஞ்சாக்கரம் அசபையாய்ப் பரிணமித்துப் பிராணவாயுவை அடக்கியும் விட்டும் நின்றுணர்த்தும்; அதனாலே கணந்தோறும் நினைப்பும் மறப்புமாகிய சகல கேவல உணர்வுகள் மாறிமாறி நிகழும்'' என்பர் சிவஞானபோத மாபாடியகாரர்.*

**4.** *சுழுமுனை வழிச்செல்லும் அசபை, நாதவடிவாம் குண்டலினிசத்தி சொரூபம் எனப்படும். ''குண்டலியதனிற் கூடிய அசபை'' என்ற விநாயகர் அகவல் முன்னருங் காட்டப்பெற்றது. ஆதாரங்கள் தோறும் சிவனைவெளிப்படுத்துவதான இந்த யோகப்பழக்கமுறை அசபா சத்தி சிவசொரூபமாய் நிற்கும்முறை எனப்படும். ''ஆறு தாரத்து அங்குசநிலையும் பேறுநிறுத்தி'' என்பர் ஔவையார். அங் + சம் = அங்குசம். இதன் விளக்கத்தை அடி 177 விளக்கம் 3 இல் பார்க்க.*

## 4. ஞானத்தில் யோகம்

213 பொருளருள் ஆன்மாப் பொருந்திடுந் திரோதை
மருவிரு மலமாய் வயங்குமஞ் செழுத்தில்
திரோதையு மலமுந் தீர்த்ததன் இடத்தில்
வரோதய மான வாசியை நிறுவி
வளம்பொலி சிவாய வாசியென்(று) உளத்தில்
விளம்புக நின்னை விளக்குமா னந்த
முத்தியஞ் செழுத்து மொழிந்தனம் இதனைச்
சித்தசாந் தியினிற் செப்பென மொழிந்தான்
வாசிவா என்ன வழங்குமூன்(று) எழுத்தும்
பேசுதல் முதிர்ந்த பேறென மொழிந்தான்
இன்பமாம் வாசி என்னுமீ ரெழுத்தில்
அன்புறு மகிமை அதிசயம் என்றான்
சியெழுத்(து) ஒன்றே சிந்தையிற் கருதத்
தூயநற் சுடராய்த் தோன்றுவை என்றான்.

பொ-ரை:- சிவம் (சிகாரம்), அருட்சத்தி (வகாரம்), உயிர் (யகாரம்), பரிபாகம் வருதற்பொருட்டு மலத்தோடு சேர்ந்திடும் திரோதான சத்தி (நகாரம்), அத்திரோதானம் பொருந்தி நடத்தும் இருள்போலுங் கரிய ஆணவமலம் (மகாரம்) என்னும் ஐந்து முதலாய் அடைவுபெற்று விளங்காநிற்கும் (சூக்கும) பஞ்சாக்கரத்தில், திரோதான நிலையெழுத்தான நகாரத்தையும் மலநிலையெழுத்தான மகாரத்தையும் ஒழித்து, யகாரத்தைச் சீவனமின்றி நிற்பித்து, அவை நின்ற இடங்களில் (ஓதிவரும் பயிற்சியாற் சீவனமற்ற யகாரத்தே பிரகாசிக்கும் அருள் நிலையெழுத்தான) வகாரத்தையும் (அவ்வருள்தரும் சிவநிலை எழுத்தான) சிகாரத்தையும் நிற்கு முறையில் நிறுத்தி, அருள் வளஞ்சிறக்கும் சிவாயவாசி என்று அதிசுத்தமானதமாக அறிவாற்கணித்திடுக. ஆன்மாவாகிய உன்னைத் தரிசிக்கும்படி காட்டுவதான பேரின்ப (ப்பேற்றுக்குரிய) முத்திபஞ்சாக்கரத்தை உபதேசித்தோம். இம்முத்தி பஞ்சாக்கரத்தை (வாயுவுஞ் சித்தமுமடங்கிட)ச் சித்தசலனமற்று அறிவாற் கணிக்க எனவும் உபதேசித்தருளினர் வாசிவா என வழங்கிவரும் மூன்றெழுத்து (திரியக்கர)ப் பஞ்சாக்கரத்தைச் செபித்தல் பெரும்பேற்றைத்தரும் என்றருளிச் செய்தார். ஞானந்தமாம் வாசி என்னும் இரண்டெழுத்து (துவியக்கர)ப் பஞ்சாக்கரத்திற் பக்தி மிகுந்து செபித்தால் அதிசயிக்கத்தக்க சிறப்புண்டாகும் என மொழிந்தருளினர். சிகாரமாகிய ஒரெழுத்துப் பஞ்சாக்கரத்தை அறிவாற் கணிக்கப் பரிசுத்த சிவசோதி மயமாக விளங்குவாய் என அருளினர் எ-று.

விளக்கம்:- 1. நடனச்சோதி காட்சிப்பட்ட இடத்தும், ஏகதேசப்பட்டு வந்த பயிற்சிவயத்தால் அறிவு, முன்னர்த் தான் நோக்கிய பாசத்தையே நோக்கி நிற்கும்; ஆதலின் அந்த நோக்கமாகிய வாசனையை நீக்குதற்குரிய பஞ்சாக்கரயோகங் கூறப்படுகின்றது. அறிவைப் புறவிடயங்களிற் செல்லாது அடக்கி, அகத்தே ஒரு குறியில் நிறுத்தி நிட்டைகூடும் முறையை ஐந்தெழுத்தோதும் முறையிற் கண்டு சிந்திக்கச் சிந்திக்கச் சிவதரிசனத்தை விளக்கி, ஏகதேச அறிவைப் பற்றறத் துடைத்துப், பூரணநிலையிற் கொண்டு செல்லும். ஆகவே வாசனுமல நீக்கத்திற்குப் பஞ்சாக்கரயோகஞ் சிறந்த சாதனமாகும்.

2. பதி, பசு, பாசம் ஆகிய முப்பொருளும் ஐந்து முதலாக ஐந்தெழுத்தில் நிற்கும் முறை கூறப்படுகின்றது. பதியின் கூறுகிய சிவமும், அருளும், திரோதான சத்தியும் சிகார வகார நகாரங்களில் நிற்கும்; பசுவாகிய ஆன்மா, யகாரத்தில் நிற்கும்; பாசமாகிய மலம், மகாரத்தில் நிற்கும். ஐந்தெழுத்திற்கு அதிதெய்வம் சிவமுதல் மலம் ஈறுகிய ஐந்து காரணமும் அடைவே நிற்குந் தன்மை, சம்பிரதாய வழியிற் கர்ணபரம்பரை அல்லது அறிதலரிது. சி - பொருள்; வ - அருள்; ய - தெருள்; ந - மருள்; ம - இருள்.

3. திருவைந்தெழுத்து ஐந்து வகைப்படும். (அ) தூலஐந்தெழுத்து (நமசிவய) (ஆ) சூக்கும ஐந்தெழுத்து (சிவயநம) (இ) காரண ஐந்தெழுத்து (சிவாயவாசி) (ஈ) மகாகாரண ஐந்தெழுத்து (வாசிவா) (உ) மநு - (சி) இவ்வைந்து வகையிற் பின்னைய நான்கும் முத்தி ஐந்தெழுத்துக்களாம் (முத்திபஞ்சாக்கரமாம்). மலத்தினுலே தான் ஐந்தெழுத்துந் தோன்றின. (அ) நகாராதி தூல ஐந்தெழுத்து உச்சாரணையில், ஆன்மா பின்னே நின்று முன்னுகத் திரோதானத்தைப்பற்றும். இத்தூல ஐந்தெழுத்து, போகத்திற்குரியவழி. (ஆ) சூக்கும ஐந்தெழுத்தே ஞானத்துக்குரிய வழி. இங்கு ஞான ஒழுங்குக்கு அடைவாகிய சிகாராதி திருவைந்தெழுத்தை ஓதியருளினர். அந்த அடைவே பொருள், அருள், தெருள் (ஆன்மா), மருள் (திரோதானம்), இருள் (மலம்). சிகாராதியாகத் திருவைந்தெழுத்தை ஓதினுல் பிராரத்த கன்மம் வருத்தாது, புசிப்பு மாத்திரமாய் வந்து போகும்; ஆகாமிய கன்மமும் ஏருது. ''சிவாயநம வென்று சிந்தித்திருப்பார்க்கு அபாயம் ஒருநாளுமில்லை''. அருளைப் பெறுமாறு ஆசைப்பட்டு, மாறுங்காதலாற் சூக்கும ஐந்தெழுத்தைச் செபித்துவர, ஆணவமலம் பரிபாகமெய்தி நீங்கும். நீங்கவே மலத்தைப் பரிபாகப்படுத்திய திரோதானசத்தி அருட்சத்தியாக மாறி ஆன்மாவிற்பதியும். சத்கருமங்களாலும், சங்கம பக்தியாலும், சீவன்முத்தர் தரிசனத்தாலும், அவர்களது பிரசாதத்

தாலும், மலபரிபாகம் சத்திநிபாதமெய்திய நிலைபார்த்திருக்குஞ் சிவனே குருவாய் வந்து பஞ்சாக்கர உபதேசஞ் செய்தருளுவார். அவை காரண, மகாகாரண, மநு என்பனவாம். (இ) காரண பஞ்சாக்கரம், நகாரம் மகாரம் இரண்டும் ஒழித்து, யகாரநடுவாக, ஏனைய சிவம் அருள் இரண்டும் இருமருங்கும் எதிர்நிரனிறையாக நிற்கும் அதிசூக்கும ஐந்தெழுத்தான இருதலை மாணிக்கம் (சிவாய வாசி). செபிப்போர்க்கு அருள் பற்றுக்கோடாக நிற்கும் அநுபவ முண்டாகும். (ஈ) மகாகாரண பஞ்சாக்கரம், அருள் இருமருங்குமுறச் சிவம்நடுவே நிற்கும் வாசிவா என்பது. இதனைச் செபிப்போர்க்கு அருளிலே அடங்கிநிற்கும் அநுபவமுண்டாகும். காயத்திரி மந்திர செபப்பயனை மகாகாரண பஞ்சாக்கர செபத்தாற் பெறலாமென் பர். மகாகாரண பஞ்சாக்கரத்தைச் செபித்த பயனால் அருளிலே அடங்கிநின்ற ஆன்மா சிகாரமாகிய சிவத்தினால் வகாரமாகிய அருளிலே இலயப்பட்டு நிற்கும். இந்த நிலையில் அருளுஞ் சிவமு மாகிய ஈரெழுத்து மாத்திரமாய் வாசிஎன நிற்கும். ஒன்றினொன்று மேலான பதினெண்வித்தை, சுருதி, ஸ்ரீருத்திரம், ஸ்ரீபஞ்சாக் கரம் ஆகிய அனைத்திலும் ஈரெழுத்து மந்திரமாகிய வாசி என்பதே மிகமேலானதாகும். ஈரெழுத்தாகிய திருநாமத்தை வாக்கினால் ஒருமுறை உச்சரிப்பின் அது விரைந்து மனிதருடைய பாவங்களை யெல்லாம் நாசமாக்கும். ''வாசியருளியவ்வை, வாழ்விக்கும்'' என் பது திருவருட்பயன். (உ) மநு வகாரமாகிய அருளையும் தன்னிடத்து இலயப்படுமாறு அடக்கிக் கொண்டு, சிகாரமாகிய பதியெழுத்து மாத்திரமாய்த் தனித்து நிற்பது. இதுவே சிகாரமாகிய ஓரெழுத் துப் பஞ்சாக்கரம். இறை எழுத்து, பெருவெழுத்து, பிரமபீசம், நாயோட்டு மந்திரம் என்பன இதன் மறுநாமங்கள். இது ஆன்ம விசாரமாகிய தருமமுந்தரும், சிவம் பிரகாசிக்குஞ் சீவன் முத்தியுந் தரும். கோபம், மகிழ்ச்சி, பகை, நட்பு என்பவற்றிடத்திலும், மனைவியிடத்திலும் கழுதை, நாய் என்பவற்றிடத்திலும் மனத் தாலுஞ் சொல்லாலும் இம் மநுவைச் சோரவிடாமல் நெஞ்சில் நினைப்பவனே சிவமாய சீவன்முத்தனாக விளங்குவான்.

4. உபாயஞான நிட்டையிலே தோன்றும் மயக்கங்களைத் திருவைந் தெழுத்தின் வகைகள் தகுந்தபடி நின்று தீர்க்கும். பஞ்சாக்கர யோகத்தினால் உயிர், ஆணவத்தை நீங்கித், திரோதங்கடந்து, தன்னைக்கண்டு, ஞானத்தைத் தரிசித்துச், சிவத்தோடு கலத்த லாகிய ஞானநிலையை அடையும்.

227 விந்துவு நாதமு மேவிய வெளியிற்
சிந்தையை நிறுவிச் சிவன்வடி வாகித்

தாக்குவை மூல நோக்குவை அதீதம்
போக்குவை பிறவி ஆக்குவை இன்பெனத்
தராப்புகு நாப்போல் சமனுற நிற்கும்
இராப்பகல் அற்ற இடத்தே இருத்தி
நலம்படர் சோதி நடனகுஞ் சிதத்தாட்
சிலம்பொலி கேட்குந் திறம்பா லித்தான்

பொ-ரை:- விந்து தத்துவமும் நாததத்துவமும் பொருந்தியுள்ள துரிய வெளியிலே சித்தத்தை நிறுத்திச் சிவமாக நின்று, சிவமூலமந்திரமாய சமட்டிப் பிரணவத்தைத் தியானிப்பாய்; துரியாதீதத்திலுள்ள சிவத்தை அடைய முயல்வாய்; (அந்தநிலை உற்றோர் பிறவார் ஆதலின்) பிறவியை நீக்குவாய்; பேரின்பத்தை ஆக்குவாய் என்றுகூறித் தராசுகோலின் நாக்கைப்போலச் சமநிலை பொருந்த நிற்பதாகிய (சகல கேவலமற்ற) ஞானயோக நின்மல துரியத்திலே நிலைத்திருக்கச் செய்து, ஆன்மாக்களுக்கு நன்மை பெருகுமாறு திருநடனஞ் செய்தருளுகின்ற பரஞ்சோதியின் தூக்கிய திருவடியின்கண்ணே அணியப்பெற்ற திருச்சிலம்பினது ஒலி கேட்கத்தக்க பக்குவநிலையினைப் பாலித்தருளினன் எ-று.

**விளக்கம்:** 1. விந்துவும் நாதமும் மேவியவெளி சுத்தமாயை அல்லது மாமாயை எனப்படும். சிதாகாசம் எனப்படுவதும் இதுவே. துரியவெளியிற் சிவனுக்கு அருவமாகிய நிஷ்களத்திருமேனி உண்டு. அத்திருமேனி அகரம், உகரம், மகரம், விந்து, நாதம் என்னும் வியட்டிப் பிரணவமாகிய ஓசைதரா ஐந்தெழுத்தாலானது. அந்தச் சிவனகத் தன்னைப் பாவனைசெய்து தியானித்தலையே சிவன் வடிவாகி என்றார்.

2. **தாக்குவை மூலம்:** தாக்குதல் – நினையாமல் நினைத்தல். மூலம் என்றது பிரபஞ்சம் அனைத்திற்கும் மூலகாரணமான (மேலே கூறப்பெற்ற) சமட்டிப் பிரணவம். இச்சமட்டிப் பிரணவம் மகாபீசம், மகாமனு, ஊமை எழுத்து, மௌன அக்கரம், பேசாத மந்திரம், மௌனக்குறி எனவும்படும். எதிரில்லாமல் அனைத்துந் தன்மயமாய் விளங்கும் இம்மூலமந்திரம், பிறவிக்கு வித்தாகிய இருவகைப் பற்றுக்களையும் வாசனையுமற நீக்கவல்லது. விந்துவும், நாதமும், சேர்ந்து உண்டாகும் இச்சமட்டிப் பிரணவத்தைப்பற்றிக் காமிகாகமம் கூறுமாற்றைக் காப்புச் செய்யுள் விளக்கம் 5 நோக்கி அறிக.

3. **நோக்குவை அதீதம்:-** அகரம் உகரம் மகரம் விந்து நாதமாகிய மூல மனுவினை ஐந்து சக்திவடிவாக மனம், அகங்காரம், புத்தி,

சித்தம், உள்ளம் என்னும் இவற்றிற் பதித்துப் பூத உருவத்தைச் சிவரூபமாக்க இதயத்தானத்திலே தியானித்தல். இது நின்மல சாக்கிரம்; மேனோக்கிக் கண்டத்தானத்திலே தியானித்தல் சொப் பனம்; நாவடியிலே தியானித்தல் சுழுத்தி; ஆஞ்ஞையிலே தியா னித்தல் துரியம்; பிரமரந்திரத்திலே தியானித்தல் துரியாதீதம். இத்தகைய தியானமுறையையே நோக்குவை அதீதம் என்றார். நின்மலதுரியத்திலே சித்தமும் பிராணனும் அடங்கியதும் துரியா தீதநிலை கைகூடும். இந்த நிலை, உடைமையை உன்னுது உடை யானை உன்னுதலாகும். கேவல சகலப்படாமலும், தற்போதச் சேட்டையில்லாமலும் சிவத்தோடு ஏகனாகி நிற்கும்நிலை. இது சாக்கிராதீதம் எனவும்படும்.

4. போக்குவை பிறவி:- சித்தமும் பிராணவாயுவும் ஒருசேர நிலைக் கப் பாசம் நீங்கும்; பிறவியறும். சாக்கிரத்தே அதீதத்தைப் புரிந் தோர் சர்வசங்க நிவிர்த்தி வந்தவராவர். அவர்களுக்கு இரு வகைப் பற்றும் இல்லாமையாற் பிறவியுமில்லை. பிறவாநிலை எய்துவர்.

5. ஆக்குவை இன்பு:- பாசம் நீங்கியதுந் திருவடிப்பேறு சித்திக்கும். சிவபெருமானை அவனருளால் இருளற இடையறுது நோக்கும் பேறெய்திய ஒருவர், பாசநீக்கமுந் திருவடிப் பேரின்பமுமாகிய இருபெரும்பயன்களையும் ஒருங்கே எய்துவர்; பாசஞான பசுஞானங் கள் அகலப் பதிஞானத்தால் முத்தியின்பம் நுகர்வர். பதிஞானச் செறிவே இன்பம் உதயமாகுமிடம். மன்று மன்றம் என்றுவது போல இன்பு இன்பமாகும்.

6. தராப்புகு நாப்போற் சமனுற நிற்றல்:- சீவன், மயக்க விகற்ப முருமல் அந்தக் கரணங்கள் யாவுமடங்கி, அரனடியை நினைந்து, மனஅசைவற்றுச் சமனுகும் சமாதியிலே சிவத்தோடு பிரிப்பின்றி நின்று செய்யுஞ் சாதனை உவமை வாயிலாக விளக்கப்பட்டது. தராசின் கீழ்முள் அசைவற்றுச் சமமாகி மேல் முள்ளைப் பிரியாது நிற்கும்; சீவனும் சலனமற்றுச் சிவத்தோடு பிரிப்பின்றி நிற்கும். இஃது இருவினை ஒப்பை விளக்கியவாறும்.

''அறிவா யிரீர்மயக்க மாகா தசையில்
விறிசாய் விடாதோ விகற்பம் — பிறியாத்
தராசின் நுனிபோற் சமாதிவரின் ஞான
இராசனுமக் கொப்பார் எவர்'' — ஒழிவில் ஒடுக்கம்.

''தராசின் நிலைபோலச் சமமுற் றசையாயேற்
பராநந்த மக்கணமே படருமுள் என்றவரோ''
— சுத்தசித்தாந்தத் தாலாட்டு.

'துலைநாவன்ன சமநிலை' என்றார் இலக்கண நூலார்.

7. இராப்பகலற்ற இடம்:- நின்மலதுரியநிலை. நினைப்பொடு மறப்பு நீங்கிடு மதீதம். (அடி 29) என்றார் ஆசிரியர். அருணகிரியார் ''கருதா மறவா நிலை'' என்பர். விநாயகர் அகவல் கூறும் ''இருள் வெளி இரண்டுக் கொன்றிடம்'' என்ற இடம் இதுவே.

இரவு - ஆன்மா ஆணவத்தோடு மாத்திரங் கூடியிருக்குங் கேவல கேவலமும், ஆன்மா தத்துவங்களோடு கூடி விடயங்களை நுகரும் நிலையில் உண்டாகும் மறப்பாகிய சகல கேவலமும்.

பகல் - ஆன்மா தத்துவங்களோடு கூடிச் சத்தம் முதலிய விடயங்களை நுகருஞ் சகல நிலை. 'இரவு பகலற்ற இன்ப நிட்டை' என்பர் சிவயோக சுவாமிகள். கேவல சகலங்கள் அற்ற அருள் மயமான சுத்தாவத்தை (நின்மல துரியம்) இராப்பகலற்ற இடமெனப்படும். இராப்பகலற்ற இடத்தே இருப்பதற்கு முருகப்பெருமானது அருள் வேண்டுமென்கின்றார் அருணகிரிநாதர்.

''அராப்புனை வேணியன் சேயருள் வேண்டு மவிழ்ந்தவன்பாற்
குராப்புனை தண்டையந் தாடொழல் வேண்டுங் கொடியவைவர்
பராக்கறல் வேண்டு மனமும் பதைப்பறல் வேண்டுமென்றால்
இராப்பக லற்ற விடத்தேயிருக்கை யெளிதல்லவே''
—கந்தரலங்காரம்

'கங்குல் பகலற்ற இருப்பையளித்தனன்' என்பது சிவயோக —சுவாமிகள் வாக்கு.

8. நலம்படர்சோதி நடன குஞ்சிதத்தாட் சிலம்பொலி:- 'எல்லா மற என்னையிழந்த நலமே' ஈண்டு நலம்படர்தாள் எனப்பட்டது. நடனம்- பஞ்சகிருத்திய நடனம். குஞ்சிதத்தாள்- எடுத்துமடித்த திருவடி. ஆனந்த நடராஜ சிவத்தின் குஞ்சிதபாதமே ஆனந்த அநுக்கிரகமாகும். சிவத்தின் எல்லாமறிதல் முதலிய ஆறு குணங்களுந் திருவடி எனப்படும். சீவன் முத்தி நிலையில், அந்த ஆறு குணங்களும் ஆன்மாவில் விளங்கித் தோன்றுதலே திருவடியாகும். ஆறு குணங்களையும் ஆன்மாவின் வியாபகம் முழுவதும் மேலிடச் செய்தலே திருவடியை உயர எடுத்தலாகும். அவ்வாறு மேலிட்ட ஆறு குணங்களையும் என்றும் நிலைபெறச் செய்தலே திருவடியை மடித்தலாகும்.

குஞ்சிதத்தாளை அசைக்கும்பொழுது காலாடும் - வாயு அசைக்கப்பெறும். அசைக்கப்பெறும் வாயுவை நடுநாடி வழிச்செலுத்தி நிற்பார்க்குத் திருச்சிலம்பொலி கேட்கும். சிலம்பொலிதடித்தபொழுது உடுக்கையொலி முதலிய தசநாதங் கேட்கும்.

திருச்சிலம் போசை ஒலிவழி யேசென்று
நிருத்தனைக் கும்பிடென் றுந்தீபற
நேர்பெற அங்கேநின் றுந்தீபற

- திருவுந்தியார்.

சிலம்பொலியை இந்நூலாசிரியர் (அடி 29 - 32) மறையொலி அலம்பும் பரிபுரம் என வருணித்தமையை ஈண்டுப் பொருத்தியுணர்க.

''இடம்படு முடம்பின் மூலத் தெழுந்தநற் சுழுனை நாடி
யுடன்கிள ரொளியே யாகி யொளியிலஞ் செழுத்து மொன்றாய்
நெடுங்குழ லோசை யாகி நிலவுமவ் வோசை போயங்
கடங்கிய விடமே யென்று மாடுமம் பலம தாகும்''

-வாதவூரர் புராணம்

235 மயற்பொறி புலன்வாய் மனம்புகு நனவில்
இயற்றிடு தவங்கள் இயமநிட் டையதாம்

பொ-ரை:- மனமயக்கத்தைத் தரும் ஐம்பொறிகளால் அறியப்படும் ஐம்புலன்களின் வழியாக, அந்த மனமானது விடயங்களிற் செல்லுகின்ற நனவு நிலையிற் சிவனைக்கருதிச் செய்யப்படுஞ் செயல்கள் இயமம் எனப் படும் யோகமாகும் எ-று

விளக்கம்: 1. ஞானயோகம் என்பது முப்பொருள் இலக்கணத்தைக் கேட்டுச் சிந்தித்துத் தெளிந்தவிடத்துப் பரமுத்தியைப் பயக்கும் அகண்டாகார நித்த வியாபக சச்சிதானந்த சொரூப பரசிவத்தைத் தியானித்தலாம். ஞானயோகம், எட்டு அங்கங்களைக் கொண்டது. அவை இயமம், நியமம், ஆசனம், பிராணாயாமம், பிரத்தியாகாரம், தாரணை, தியானம், சமாதி என்பனவாகும். அட்டாங்க யோகம் எனப்படுவதும் இதுவே. இந்த அட்டாங்க யோகத்தை அநுட்டிக்கும் பொழுது மனந் தொழிற்படும். யோகத்தால் மனத்தின் கண்ணுள்ள மாசு அகலவே (வினையின் நீங்கிய) அறிவு விளங்கித் தோன்றும். அறிவின் தொழிற்பாடுள்ள சிவயோகத்திற்கு ஞானயோகஞ் சாதனமாகும்.

2. இயமம் என்பது விலக்கியவை ஒழிதல். அவை கொல்லாமை, பொய்யாமை, கள்ளாமை, இந்திரிய அடக்கம், இரக்கமுடைமை, வஞ்சனை இல்லாமை, பொறையுடைமை, மனங்கலங்காமை, அற்ப ஆகாரம், சுசியுடைமை என்னும் பத்துமாம். இவற்றிற்குச் சாதனம் சரீரம்.

3. ஞானயோகியர் சிவசிந்தனையோடு நிஷ்காமியமாகச் செய்வன வெல்லாந் தவச் செயல்களெனப்படும். "செய்வனவே தவமாக்கி" என்றார் மணிவாசகர். இங்குத் தவமெனப்பட்டவை சிவகருமங்க ளேயாகும்.

4. ஈண்டு நிட்டை என்றது யோகத்தை, யோகத்தின் பாற்படும் ஐந்து அவத்தைகளுங் கருவிகரணங்களுடன் கூடி நிகழும். இய மம் யோகாவத்தையில் சாக்கிரத்திற் சாக்கிரம். இயமநிட்டை சித்தசுத்தியை உண்டாக்கும்.

237 சார்பொறி விடுத்த சாக்கிரக் கனவு
சேர்தரு கருத்தர்ற் செய்தவ நியமம்

பொ—ரை: சார்ந்து பழகிய பொறிகளின் வழியே மனத்தைச் செல்ல விடாது உண்முகப்படுத்தி, நனவுநிலையிலே கனவுகண்டாற் போன்ற நினைப்போடு செய்யுஞ் சிவகருமங்கள் நியமம் எனப்படும் யோகமாகும் எ—று.

விளக்கம்: 1. நியமம் என்பது விதித்தன செய்தலாகும். இதுயோக அனுகூலத்தை உண்டாக்கும். தவம், மகிழ்ச்சி, தெய்வநம்பிக்கை, தானம், ஈசுவரபூசை, உண்மைநூல்களைப் பாடங்கேட்டல், அகங்காரமின்றி அடங்கி ஒழுகுதல், செய்வன தவிர்வன பகுத் தறிதல், மந்திரசெபம், முக்கரணங்களாலும் விரதம் அனுட்டித் தல் என்னும் பத்தும் நியமமாகும். இவற்றிற்குச் சாதனம் நீர் முதலியன.

2. கண்டு, கேட்டு, உண்டு, உயிர்த்து, உற்றுப் பொருந்துவனவெல் லாம் மனத்திற்கு எட்டாதிருத்தலே சார்பொறி விடுத்தலாகும்

3. நியமம் யோகாவத்தையிற் சாக்கிரத்திற் சொப்பனம். இயம நிய மங்கள் சித்த விகற்பங்களை அடக்கத் துணைபுரிவன.

239 நீங்காக் கரண நீங்கவே நனவில்
தூங்காத் தூக்கச் சுழுத்தி ஆசனமாம்

பொ—ரை:- (அறிதற்கான) புறக்கருவிகளை விட்டுநீங்காத மனமாதி உட்கருவிகளானவை தொழிற்படாதிருக்கும் நனவு நிலையில் உறங்கா உறக்கம் எனப்படும் அறிதுயிலாகிய சுழுத்திநிலையே ஆசனமாகும் எ-று.

விளக்கம்: 1. ஆசனம் என்பது அசையாத உறுதியோடு சுகமாக இருக்கும் நிலையாகும். உடல் உணர்ச்சியை மறந்த நிலையில் இயல்பான இருக்கையில் இருந்தே யோகப்பயிற்சி பழக வேண்டும். உடலை வென்று அதனை உறுதியாக வைத்திருப்பதிலேதான் யோகப்பயிற்சியின் வெற்றி தங்கியுள்ளது. யோகாசனம் முறையாக அமைந்தால் தட்பவெப்பங்கள் உடலைத்தாக்கா. எதிரிடையான நோயெதுவும் உடலை அணுகாது. இருக்கும் முறைபற்றி யோகாசனம் பலவகைப்படும். ஆசனசித்தியேற்பட்ட பின்னரே பிராணாயாமஞ் செய்தல் தக்கதாகும்.

2 மனம் முதலாகிய உட்கருவிகள் நீங்கவே, இந்தப் பேற்றைப் பெற்றோம் என்னும் ஆசை அறும்; நிராசையாற் செயலறும்; செயலறவே சிவமாகத் தியானிக்கும் பக்குவம் வாய்க்கும். ஆசனம் யோகாவத்தையிற் சாக்கிரத்திற் சுழுத்தி.* இயமம் நியமம் ஆசனம் மூன்றுமுடையவர்க்கே யோகாசனப் பயிற்சி கைவரும்.

241 அறிந்து தொண்ணூறும் ஆறும்வே(று) ஆக்கிப்
பிறிந்து தற்கண்டு பிரமமே தானாய்ச்
சாதனம் விடுத்த சாக்கிர துரியம்
பேதமற்(று) இருக்கை பிராணா யாமம்.

பொ—ரை: திருவருளினாலே தத்துவ தாத்துவிகங்கள் தொண்ணூற்றாறையுஞ் சடமென்றுணர்ந்து (அவைதானல்லன்; சித்தான தன்னின் வேறானவை என) அந்நியமாக்கி (அவற்றோடு அநாதி செயற்கைச் சம்பந்தத்தைவிட்டு) நீங்கி, (பரஞ்சோதியான சிவனுடன் அநாதியே இயற்கைச் சம்பந்தமுற்றுப் பிரிப்பின்றி நிற்குந்) தன்னையுணர்ந்து, சிவனோடு பிரிப்பின்றி அதுவாய் நின்று, யோக சாதனங்களால் அடைவிக்கப் பெற்ற சாக்கிர துரிய ஞானத்தில் நிலைபெற்றுத், தன்னிடத்தே சிவனை அந்நியமின்றி (அபேதமாக) உபாசித்தல் பிராணாயாமமாகும் எ—று.

விளக்கம்: 1. தத்துவ தாத்துவிகங்களை வேறாக உணர்ந்து நீங்குவதற்குத் திருவருளின் துணைவேண்டும். உமாபதி சிவமும், "மண் முதற் சிவமதீறாய் வகையதிற் றனிலாது கண்ணுதலருளால் நீங்கல்" என்று கூறுவதுங் காண்க. தத்துவங்கள் முப்பத்தாறு; தத்துவங்களின் காரியங்களான தாத்துவிகங்கள் அறுபது. தத்துவ தாத்துவிகங்கள் தொண்ணூற்றாறு. தத்துவங்கள் முப்பத்தாறாவன

ஆன்மதத்துவங்கள் 24. (இவை அதர்வணவேத பிரசினோபநிட தத்திற் கூறப்பட்டன). வித்தியா தத்துவங்கள் 7. (இவை கிருஷ்ண யசுர்வேத சுவேதாசுவதர உபநிடதத்திலும், அதர்வணவேத நாரதபரிவிராஜக உபநிடதத்திலுங் கூறப்பட்டன). சிவதத்துவங் கள் 5. இவை அதர்வணவேத பிருகஜ்ஜாபால உபநிடதத்திற் கூறப்பட்டன). இவை முப்பத்தாறும் அகக்கருவிகள். தாத்துவிகங் கள் அறுபதாவன பூதங்கள் ஐந்தின் காரியங்கள் 25. கன்மேந்திரி யங்களின் காரியங்கள் 5. வாயுவின் காரியங்களான வாயுக்கள் 10. பிருதுவியின் காரியங்களான நாடிகள் 10, விந்துவின் காரியங்க ளான வாக்குகள் 4. குணத்த்துவத்தின் காரியங்களான குணங்கள் 3. ஆகாயத்தின் காரியங்களான ஏடணைகள் 3. இவை அறுபதும் புறக் கருவிகள். "முப்பது முப்பது முப்பதோடு ஆறு எனச் செப்புங் கருவிகள்" என (அடி 319, 320 இல்) ஆசிரியர் இதனை எடுத்துக் கூறுதல் காண்க.

2. செம்போடு அநாதியே கூடிய களிம்பு இரசகுளிகையால் நீக்கப் படுதல்போல ஆன்மாவோடு அநாதியே கூடிய பாசந் திருவரு ளால் நீக்கப்படும். கருவிகள் தொண்ணூற்றுறையும் வேருக்கிப் பிறிதல் தத்துவாதீதம்.

3. ஒன்றைப் பற்றியன்றித் தனித்து நில்லாத உயிர், பாசத்தை நீங் கியதுந் திருவருளைப் பற்றி நிற்கும். கண்ணொளி விளக்கொளி யோடு கலந்துநின்று, விளக்கொளியை வேருகக் காணுமளவும், பிறபொருள்களையுங் காணும். அதுபோல உயிரறிவு சிவனருளோடு கலந்து சிவனை வேருக உபாசிக்கும் அளவும், பிறபொருள்களையுங் காணுந்தன்மை உயிருக்குண்டு.

4. பிரமமேதானும்- சிவன்வேறு, ஆன்மாவாகிய தான்வேறு என்ற வேறுபாடின்றிச் சிவனேதான் என ஒற்றுமையுறப் பாவனை செய் தல். பிரிக்கமுடியாத சம்பந்தத்தாற் சிவமேதானாய் விளங்குவதே சுத்தாத்துவிதம் என்க. திருவருளில் உயிரறிவு அழுந்தும் பொழுது சிவனென்றே தானென்றே பிறித்தறிய வாராது சிவமயமாகவே விளங்கும். ஆதலின் உயிரறிவு திருவருளில் அழுந்துவதற்கு ஏனைய பொருள்களை அறியாது அவ்வருளையே நாடுதலாகிய அத்துவித உபாசனை செய்யவேண்டும். அத்துவிதமாவது, வேறுபட்ட இரு பொருள்கள் கலந்து தன்மையினால் ஒன்றாகுஞ் சம்பந்தம். ஏனைய குணகுணி சம்பந்தத்தைத் தாதான்மிய சம்பந்தம் என்பர்.

5. **சாதனம் விடுத்த-** சாதனம் என்றது யோக சாதனங்களான இயம நியம ஆசனங்களை. அவை தாமாக நழுவுதலையே விடுத்த என்றார். அன்றி, சாதனங்களால் அடைவிக்கப் பெற்ற என்று பொருள் கொள்ளினுமாம். உள்முகப்பட்டு உயிர், சிவனோடு பிரிப் பின்றி நின்றே சிவனை உணருமாறு செய்வன புறச்சாதனங்கள்.

6. **பேதமற்று இருத்தல்-** சிவனும் ஆன்மாவும் வெவ்வேறு பொருள் களாயினும், சித்தாகிய அநாதி இயற்கைக் கலப்பாற் பிரிப்பின்றி நின்று உபாசித்தல். அதாவது சிவமாய்நின்று சிவனை உபாசித்த லாகும்.

7. **பிராணயாமம் = பிராண + ஆயாமம்;** ஆயாமம் - அடக்குதல். பிராணவாயுவை (மந்திரம் செபிக்கும் வழி, குறித்தகால எல்லை வரையும்) அடக்கும் உபாயமறிந்து அடக்குதல் பிராணயாம மாகும். இப்பிராணயாமம் யோகாவத்தையிலே சாக்கிரத்தில் துரி யம். இயமம், நியமம், ஆசனம், பிராணயாமம் ஆகியவற்றால், மனத்திலுள்ள காமம் வெகுளி, மயக்கம் ஆகிய மாசுகள் நீங்கிச் சித்த சுத்தி உண்டாகும்.

245 சான்றுசாக் கிரம்போய்த் தானிருந் தமையுந்
தோன்றிடா(து) உலகைச் சுழற்றுங் கால்போற்
பறந்திடுங் காலாற் பரமறந் தளவிற்
பிறந்திடும் அதீதம் பிரத்தியா காரம்

**பொ-ரை.-** அருளால் நிகழுங்கருமங்களுக்குத் தானே சாட்சியாய் இருக்குந் துரியநிலையுங்கடந்து, ஆன்மபோதத்தையும் இழந்து, உலகத்திற் சுழன்றடிக்குஞ் சூறைக்காற்றைப்போல (உள்முகப் படுத்தப்பட்டு ஆறாதாரங்களையும் சுற்றிப் பட்சிபோலப்) பிராண வாயு பறந்திடச் செய்யும் யோகத்தால், மேலான துரிய நிலையிற் பரசாட்சியையும் மறந்த பொழுதிலே துரியாதீதநிலை கைவரும். இதுவே பிரத்தியாகாரம் எனப்படும் எ-று.

**விளக்கம்: 1. சான்று சாக்கிரம்:-** ஈண்டு சாக்கிரம் என்றது துரிய நிலையை. துரியாதீத நிலையில் இருந்தவர் விழித்ததுந் துரியநிலை யையே அடைவாராதலின் அது சாக்கிரம் எனப்பட்டது. அருளால் நிகழ்வன யாவற்றிற்கும் துரியயோகி தான் சீவசாட்சியாய் இருப் பான். உயிரறிவு சிவனருளுடன் கலந்து நின்று உபாசிக்கும் அளவும் சிவன் வேறாய்நின்று காட்டலால் உலகநிகழ்ச்சிகளை உயிர்கண்டறியும்.

2. தானிருந்தமையுந் தோன்றிடாது:- கண்ணொளி விளக்கொளியில் அழுந்துங் காலத்துப் பிரிப்பின்றி நிற்றலால் விளக்கொளியையே காணுதலன்றி வேறொன்றையுங் காணாது அதேபோல உயிரறிவானது திருவருளில் அழுந்தும்போது திருவருளையே காணும். ஆன்மபோதந் தோன்றாது. (உலகப்பொருளையோ தன்னையோ அறியாது) திருவருளால் அவ்வருளையே நாடுதலாகிய உபாசனை புரிதல் வேண்டும்.

3. சிவத்தோடு வேறறக் கலந்து நின்று, பரமேசாட்சி என்ற எண்ணமும் அற்றபொழுதே துரியாதீத நிலையுண்டாகும். புறவடிவு தீர்ந்த இடமே பிரத்தியாகாரம். ஆகாரம்—வடிவு

4. இயமமுதல் பிரத்தியாகாரம் ஈறாக உள்ள ஐந்தும் யோகநெறிக்குரிய வெளிச்சாதனங்களாகும். இனிமேற் கூறப்படும் தாரணை, தியானம், சமாதி ஆகிய மூன்றும் அகச்சாதனங்களாம்.

249 வான்எனும் அகண்ட வடிவுகண்(டு) எங்குந்
தான்என்(று) இருக்கை தாரணை ஆகும்

பொ-ரை:- ஆகாயம் போன்று (கண்டிதமற்றுப்) பரந்த தனது வியாபக வடிவினைக் கண்டு, எங்குந் தானே (யன்றித் தன்னின்வேறாக ஒன்றுமில்லை) என்றிருத்தல் தாரணையாகும் எ-று

விளக்கம்:- 1 வானெனும் அகண்ட வடிவுகண்டு:- சிவனை உயிர் தன்னறிவினிடத்துப் பிரிப்பின்றி விளங்க உணர்ந்து, அதனால் அனைத்து அண்டங்களையுந் தன்னிடத்தே கொண்டுள்ள அகண்ட ஆகாயம்போன்ற வியாபகமாக உபாசித்தல் கூறப்பட்டது.

2. எங்குந்தான் என்று:- சிவனே கலப்பினால் பொருள்கள் அனைத்துமாயும் அப்பொருள்களின் உள்ளீடாயும் விளங்குதலால், அச்சிவனோடு பிரிப்பின்றி நின்று உபாசிக்கும் யோகியும் எங்கும் எல்லாந் தானாகக் காண்பான். உலகத்திலுள்ள எல்லாப்பொருள்களாயும் அவற்றின் உள்ளீடாயுஞ் சிவமாகுந்தான் இருப்பதாக நினைந்து காண்பான்.

3. தாரணை:- உடம்பின் உள்ளிடத்திலோ வெளியிடத்திலோ உள்ள தெய்வ உருவம்போன்ற ஒரு பொருளின்மீது மனத்தினை அசைவற நிறுத்தி, அதிலேயே நிலைபெறச்செய்தல் தாரணையாகும்.

தொடக்கத்தில் உடலின் புறத்தேயுள்ள தெய்வ உருவத்தில் மனத்தை நிறுத்திப் பழக்கிய பின்னர் உடலின் அகத்தே இருதயம் புருவமத்தி போன்ற ஓரிடத்தில் அத்தெய்வத்தைப் பாவனை செய்து, அத்தெய்வத்திலே தியானஞ் சித்தியாகும்வரை மனத்தை நிறுத்திப்பழக வேண்டும். வாயுசங்கிதை பின்வருமாறு கூறுகின்றது.

1. ''உளந்தனை நிறுத்தலே தாரணை''
2. ''துகளின்றுகத் தெளிந்து பிராணயாமம் ஈராறு செய்யிற் றாரணைதான் சேரும்.''

251 காட்சிகள் அனைத்துங் கண்ணதாய் விளங்கி
ஆட்சியின் அமைந்தது அதுவே தியானம்

பொ-ரை:- உலகச் செய்திகள் யாவுந் தன்னறிவினுள்ளே விளங்கித் தோன்றுவதாகி (திரிகால உணர்ச்சி முதலாக எவற்றைப் பற்றியும் மனம், அசைதலின்றி உள்ளபடியேயிருந்து) உயிரின் ஆட்சிக்குட்பட்டு நிலைத்து நிற்றலே தியானமாகும் எ—று.

விளக்கம்: 1. காட்சிகள்— உலகச் செய்திகள். திரிகால உணர்ச்சி உடையாரெனினும் உண்மை யோகியர், இயல்பாகச் சொல்லும் பொருளுமற்று அல்லும் பகலும் அறிவாகவே நிற்பர். கண் என்றது அறிவினை.

2. ஆட்சி என்பது, சும்மா இருக்கும் நிலைக்கு மனத்தைக் கட்டுப் படுத்துதலைக் குறித்தது. மனம் ஒடுங்கியிருத்தலே ஆளப்படுதலாகும். தியானமாவது சுழுத்தி மோன நிலையிலிருந்து கடவுளை மெய்ஞ் ஞானத்தால் நீள நினைத்தலாகும். ''கட்டி மனத்தையாளச் சொல்லு சிவமே'' —நற்சிந்தனை.

253 தற்பதந் தொம்பதஞ் சார்ந்திடும் உபாதி
கற்பனை தீரக் கண்(டு)அசி பதமிரஞ்
சச்சிதா னந்த சமரச நிலைதேர்ந்(து)
உற்றசிற் பதம்பெற்(று) உறங்குதல் சமாதி.

பொ—ரை: தொம்பதம் தற்பதம் சார்ந்திடும்...கண்டு - (நீ எனப்படுந்) துவம்பதஞ்சேர்ந்த காரிய உபாதிகளாய கற்பனைகள் நழுவ விளங்கிய துரியசீவனும்: (அது எனப்படுந்) தற்பதஞ்சேர்ந்த காரண உபாதிகளாய கற்பனைகள் நழுவ விளங்கிய துரிய பரனும்: (ஆனுய் எனப்படும்) அசி

பதமாய சிவத்திலே ஒன்றுகக் கண்டு; அசிபதமாம் ... தேர்ந்து—துரிய சீவனும், துரிய பரனும், துரிய சிவனும் (இம்முத்துரியமும் இறந்த துரியாதீத ஏகவடிவான) சச்சிதானந்த சொரூப சிவமே எனத் தெளிந்து; உற்ற சிற்பதம் ... சமாதி—தத்துவமசி மகா வாக்கியத்தி ஞலே உணர்த்தப்பெற்ற (வாக்குமனுதீத) ஞான நிலையினை அடைந்து, நிட்டை கூடி ஒய்ந்திருத்தல் சமாதி எ—று.

விளக்கம்: 1. "பிரக்ஞானம் பிரம்மம், அகம்பிரமாஸ்மி, தத்துவமசி, அயமாத்மா பிரம்மம்" என்னும் நான்கு வாக்கியங்களிலும் தத்துவமசி வாக்கியமே மகாவாக்கியமென்று சிறப்பித்துச் சொல்லப் படும். ஏனைய வாக்கியங்களின் பொருளும் இவ்வாக்கியத்தில் இருத்தலினுலும், அந்நுவயபதம் இதனிடத்தே இருத்தலினுலும், வாக்குமனுதீதமான வஸ்துவை உள்ளங்கை நெல்லிக்கனி போலக் காட்டுதலினுலும் ஏனைய வாக்கியங்களிலும் பார்க்க இவ்வாக்கி யஞ் சிறப்புடையதாயிற்று.

3. தத்பதம்:- தத்துவமசி மகாவாக்கியத்தின் முதற்பதம்; தத்பத அருத்தம் அது என்பது; அதுவே பரன். அறிவே உருவமான சீவ துரியம், பரனுக்கு உடலாக அமையும். பரோட்ச உபாதி எனப் படும் காரண உபாதிகள் ஏழு உண்டு. காரண உபாதி, அவத்தை, அபிமான நாமம்என்பன கழன்று, மேலாய் நின்று விளங்கும் சுத்த அறிவே, அது என்றதுரியபர சொரூபம். இது பரசாட்சி எனப் படும்.

4. துவம்பதம்- தத்துவமசி மகாவாக்கியத்தின் இரண்டாம்பதம். இதுதொம்பதமென மருவிவரும். தொம்பத அருத்தம் நீ என்பது. நீ என்றதுவே சீவன். அந்தச் சீவன் சடத்தைத் தானென்று அறிந்திருப்பதால் தத்துவமசி என்பதை (உபாதிநீங்கிய) தொந் தத்தசி எனமாற்றி, நீ அது ஆனுய் என்பர். அபரோட்ச உபாதி எனப்படும் காரிய உபாதிகள் ஏழு உண்டு. காரிய உபாதி, அவத்தை நிலைகள், அபிமானநாமம் என்பன கழன்று, மேலாய் நின்று விளங்கும் சுத்த அறிவே துரியசீவ சொரூபம், இது சீவ சாட்சி எனப்படும்.

4. கண்டு:- சீவனும் பரனும் உபாதி கற்பனைதீர, ஆனுய் என்னும் அசிபத சிவத்திலே ஒன்றுகக் கண்டு என்றபடி.

5. அசிபதம்:- தத்துவமசி மகாவாக்கியத்தின் மூன்றும் பதம். அசிபத அருத்தம் ஆனுய் என்ற (ஐக்கியப் பொருளான) சிவன். தத்பத சுத்தமான பரம்பொருள், அசிபதப் பொருளான ஆனுய் என்ற சிவனுக்கு மூன்று தேகமாய் மூன்று அவத்தையாய் விளங்கும். மூன்று அவத்தைகள் பரம், விசுவக்கிராசம், உபசாந்தம் என்பன வாகும். மூன்று அவத்தையுங்கழன்ற சிவதுரியமே சுயம்பிரகாச மான சிவரூபம்.

6. சச்சிதானந்த சமரசநிலை:- இதுவே சொரூபசிவத்தின் இலக்கணம். சீவதுரியம், பரதுரியம் சிவதுரியம் என்னும் முத்துரியமுமிறந்து (முப்பாழுங்கெட்டு) சீவன்பரன் சிவன் ஏகவடிவான சச்சிதானந்த சிவசொரூபமே எனத்தெளிதல். இந்தச் சொரூபமே தந், துவம், அசி என்னும் முப்பதமாயிற்று.

7. உற்ற சிற்பதம் பெற்று:- சிவசொரூபம் வாக்குமனுதீத மென்று விளங்க ஞானம் வரும். வேதம், முப்பதமும் முடிந்த இடமே ஞானம் எனக் கூறியுள்ளதைக் காண்க. முப்பதப் பேருயுள்ள ஞானநிலையை அடைந்து செயலற்று ஒய்ந்திருத்தல் சமாதி. சித்- ஞானம்; பதம்- நிலை. சித்பதம் — ஞானநிலை.

## இப்பகுதிக்கு இன்னும் ஓர் உரை

**பொ-ரை:-** தந்பதமாகும் அது என்னும் பரமசிவன் திருவருளால், தொம்பதமாகும் நீ என்னும் உயிரானது, தான் சார்ந்து நின்ற துளைகள் சந்தேகமில்லாது முற்றுயகல, (சிவனடி சார்ந்து) தன்னைக் கண்டு அசிபதமாகும் ஆகின்றுய் என்னும் உண்மை அறிவு இன்பவடி வானசொரூப சிவத்துடன் இரண்டறக் கலந்து ஒன்றுகின்ற நிலை இது தானென்று தெளிய உணர்ந்து, என்றுமுள்ளதாகிய ஞானநிலையினை அடைந்து, அந்த ஞானத்தில் ஒய்ந்திருத்தல் ஞானயோக சமாதி யாகும் எ-று

**விளக்கம்:-** 1 தத்பதம் ஏகபரிபூரணமாய் விளங்கும் சிவசொரூபம். தத் என்றது சிவனை, அது எனப்புலப்படுத்துகின்றது சேய்மைச் சுட்டாகிய அது சிவனைக்குறிக்கும் பெயர். "அது பழச்சுவையென அமுதென" என்றுர் மணிவாசகர். அருட்செயலறலான பரதுரி யத்தின்கண் உயிருக்கு அதுவாதல் என்னும் தத்பதநிலையே உளதாம்.

2. தொம்பதம் (துவம்பதம்):- துவம் என்பது பிறப்பு இறப்புகளுக் குட்படும் உயிரைக் குறிக்கும் நீ என்பதைப் புலப்படுத்துகின்றது. துவம்-நீ. முன்னிலைச்சுட்டாய் உயிரைக் குறிக்கும் பெயர். ''தொம்பதமேவும் பசு'' என்பது திருமந்திரம் (2353). உயிர்ச் செயலறலான சீவதுரியத்தில் நீ என்னும் தொம்பதநிலையே அவ்வு யிருக்கு உளதாம். அருளை நம்பிவாழும் தனி உயிர்நிலை இது.

3. சார்ந்திடும் உபாதி:— உபாதி— தளை, பிணிப்பு. உயிர் அநா தியே ஆண்வமலத்தைச் சார்ந்து இருளில் வருந்தும். அவ்வருத் தத்தை அநாதியே அவ்வுயிருடன் உடனாய் நிற்கும் இறைவன் நீக்கியருளக் கருணைகொள்வான்; கன்மம் மாயை ஆகிய மருளை, அவ்வுயிரின் அறிவு விளங்கித் தெளிவடைவதற்காக அவ்வுயிரு டன் கூட்டி, ஐந்தொழில் புரிவன். உயிர் இயல்பாகச் சார்ந்திட்ட உபாதி ஆணவமலம்; அது சகசமலம் எனவும் படும். இடையே இறைவன் அருளாற் சார்ந்திட்ட கன்மம் மாயை ஆகந்துகமலம் எனப்படும். எனவே தொம்பத (நீ என்னும்) உயிர், அநாதியே சார்ந்திடும் உபாதிகள் ஆணவம், கன்மம். மாயை என்னும் மூன் றுமே. அவ்வுயிர் இறையருளாற் கன்மத்துக்கீடாக உடல், பொறி, கரணம் நான்கு, பிராணவாயு என்னும் காரிய உபாதி எழின் கண்ணுங் கலக்கும். இவையே வியட்டியாகிய சீவகாரிய உபாதி களாகும். சீவ உபாதியைத் தீர்க்கும் பொருட்டுப் பரமசிவன் எனப்படுந் திருவருள், காரண உபாதி ஏழின் கண்ணுங் கலக்கும். எங்கும் வியாபித்திருத்தல், எல்லாந்தானாதல், எல்லாம் அறிதல் எல்லாவற்றுக்கும் காரணமாதல், எல்லாம் படைத்தல், எல்லாங் காத்தல், எல்லாம் அழித்தல் என்னும் ஏழுமே காரண உபாதி களாம். இவை சமட்டியாகிய ஈசுர உபாதி எனப்படும்.

4. கற்பனை என்றது திருவருளின் திருவாணையை. திருவருள் திரு வுளத்தால் உயிரின் வினைக்கீடாக உபாதியைக் கற்பிக்கும்.

5. உபாதி தீர:- இறைவன் உயிருடன் கன்மம் மாயைகளைக்கூட்டி ஐந்தொழில் புரிந்து, வினைக்கீடாகக் கற்பித்த உபாதிகளால் உயி ரின் அறிவை விளங்கச் செய்வன். அவனருளால் விளங்கும் அவ் வறிவைக் கொண்டு உயிர், இறைவன் உணர்கருவிகளாக உதவி யருளிய தத்துவ தாத்துவிகங்களின் மாறுபட்ட வேறுபாடுகளை உள்ளவாறு உணரும். நிலையில்லாத அவற்றைத் தான் அல்லன் என்றும், தனதல்ல என்றும், தன்னின் வேறான சடம் என்றுங் கண்டு பழக்கந்தவிரப்பழக அவ்வுபாதிதீரும்.

"வேதாந்தந் தன்னில் உபாதிமேல் ஏழ்விட
நாதாந்த பாசம் விடுநல்ல தொம்பதம்" (2347)

என்பது திருமந்திரம். மாயை கன்மங்கள் தீர்ந்ததும் உயிர், தனக்குச் சுதந்திரமின்மையை உணர்ந்து திருவடியைச் சாரும். திருவடியுணர்வால் ஆணவமலந் தீரும். இந்துவின் முன் இருள் ஏகுதல் போல அருள் சிறிது சிறிதாக முளைக்க, மலப்பிணிப்பும் சிறிது சிறிதாகத் தீரும். முழுநிலா ஒத்துச் சிவந்தோன்றியருள மும்மலமும் முற்றுக அடங்கிவிடும். மெய்கண்டாரும்,

"மன்னு மிருளை மதிதுரந்த வாறன்பின்
மன்னும் அரனே மலந்துரந்து" —(சி. போதம் 11-2-2) என்றருளிச் செய்துள்ளார். கண்ணாடியைச் சார்ந்தவன் அதைக்காணும் போது தன்சாயலையுங் காண்பான். அதுபோலத் திருவடியைச் சார்ந்து ஒழுகும் உயிர் தன்னைக் காணும். இதுவே தன்னைக் காண்டல் என்னும் தொம்பத உண்மையாகும்.

6. அசிபதம்:— அசி என்பது (உயிராகிய நீ சச்சிதானந்த சொரூப சிவத்தைச் சார்ந்து மாறின்றிச் சிவம்) ஆகின்றாய் என்பதைப் புலப்படுத்துகின்றது. "அசிபதம்...... செம்பொருளான சிவமென லாகுமே" (2529) எனவும், "தானும் அசிபதம்" (2449) எனவும் திருமூலர் அசிபதப் பொருளை விளக்கியுள்ளார்.

"செறிந்த காரண காரியங்கள் சிதைந்து மேலறு சித்ததாய்
அறிந்த வாதனை தானு மற்றது அசிப தப்பொரு ளாவதே"

(சசிவன்னபோதம்) சிவச்செயலறவான சிவதுரியத்தில், சிவத்துள் அழுந்தலாகிய துய்ப்புநிலை, ஆகின்றாய் என்னும் அசிபத நிலையாகும்.

7. சச்சிதானந்த சமரசநிலை தேர்ந்து:— உண்மை அறிவு இன்ப வடிவே சிவசொரூபமாகும். ஆன்மா திருவருளாற் சிவத்தின் சொரூபத்தினைத், தியான அனுபவத்தில் அழுந்தி, சத்து சித்து ஆனந்த ஒருமை இதுதானென்னத் தெளிவாக உணரும். சச்சிதானந்த ஒருமை நிலையைத் தெளிதல் ஞானத்திற்கு ஏதுவாகும்.

8. உற்ற சித்பதம் பெற்று உறங்குதல் சமாதி:- சச்சிதானந்த சொரூப சிவமாகின்றதாகத் தியானிக்கும் ஞானயோக நிலையில்

ஆழ்ந்து ஒய்ந்து இருத்தல். உயிர்யோகப்பயிற்சியாற் சிவத்தோடு பொருந்தி நிற்க. அவனருளாற் சிவத்தின் குணங்கள் உயிரிலே தோன்றும். சமாதி, தியானமுதிர்ச்சியாற் கடவுளிற் பூரணமாக மனத்தைப்பதித்தலாகிய நிட்டை; உயிர் இறைவன் கண் ஒடுங்குதல்; "தானவனுகுஞ் சமாதி" என்பது திருமந்திரம் (2340) "முதற் பொருளோடு தான் பிறனுகாத் தகையது சமாதி" (தொல்: பொருள்: புறம். 20. மேற்கோள்) "சங்கற்ப விகற்பந்த விர்ந்திடுஞ் சமாதி - சிவயோகசுவாமிகள். செயலற்றுத்தியானத்தில் ஆழ்ந்து ஈடுபடப்பிராணவாயு அடங்கும். நினைப்பு மறப்பு அறும்; அறியாமை அறிவு அற்ற இடத்தே மெய்யுணர்வு பிறக்கும். இந்த நிலையைத்தியானயோக அநுபூதியால் மாத்திரம் ஓரளவு உணர்ந்து தெளிய இயலும்.

9. "தத்துவத்து அயிக்கியத்துவ மாகிய நெறி சோகம்" என்பது திருமந்திரம். (2437) தத்துவமசி என்னும் நெறியே சோகம் என்னும் நெறியுமாகும். அடி 393 விளக்கம் 11 பார்.

257 மன்னிடு சாம மறையுப நிடதஞ்
சொன்னவாக் கியத்தின் தொகையிதே

பொ—ரை:- நித்தியமான சாம்வேத சாந்தோக்கிய உபநிடதத்திலே சொல்லப்பட்ட தத்துவமசி என்னும் உபதேச மகாவாக்கியத்தின் சுருக்கமான பொருள் இதுவேயாகும் எ—று.

விளக்கம்: 1. நித்தியரான இறைவன் அருளிய வேதமும் நித்தியமானதே. பிரளயகாலத்து ஒடுங்கி மீளப்படைக்கும் பொழுது தோன்றுமாதலின் மன்னிடுசாம மறை எனப்பட்டது. மன்—நிலைபேறு; நித்தியம். சாமம்—இசை. இசை வகுக்கப்பெற்ற இருக்குகளைக் கொண்டது சாமவேதம்.

•

2. தத்துவமசி மகாவாக்கியம் சாமவேத சாந்தோக்கிய உபநிடதத்து ஆறும் அத்தியாயத்தில் உள்ளது. இதுவே குருசீடனுக்கு வேதாந்தத்தைப் போதிக்கும் உபதேச மகாவாக்கியம் (சிரவணவாக்கியம்), உத்தாரகரால் மகன் சுவேதகேதுவுக்கு ஒன்பது தரஞ்சத்தியஞ் செய்து உபதேசிக்கப்பட்டது. பிரம்ம ஆத்ம ஐக்கியமே இம் மகாவாக்கியத்தின் அகண்டதாற்பரியம். காரண மாயையுங் கடந்த நிலையில் ஞானத்தைத் தருதலோடு முப்பதமும் முற்றுப்பெறும்.

3. சுகப்பிரம இருடி ஞானகுருவாகிய செந்திலாண்டவரை,

''செய்யதொம் பதம தான சீடற்குத் திருந்து மேன்மைத்
துய்யதற் பதம தான பிரமத்தைத் தொடர்பாற் காட்டிப்
பையவே அசிய தென்னும் பதத்தினு லொன்ற தாக்கு
மெய்யுணர் குருவாஞ் சோதி வேற்படைக் குமரா போற்றி''

எனப் பூசித்தலைச் செந்தூர்ப் புராணத்திற் காண்க.

258 ஞான, யோகஎட்(டு) அங்கம் உண்மைநீ உணர்தி
ஏகசா ரூப்பியம் இதுவென மொழிந்தான்

பொ—ரை:- சிவயோகத்திற்கு அங்கமான (ஓர் வகை) ஞானயோக எட்டு உறுப்புக்களின் உண்மைத் தன்மையை நீ (ஐயந்திரிபற) அநுபவ வாயிலாக அறிவாயாக. இந்த ஞானத்தில் யோகமானது சிவசாரூப பதமுத்தியைத்தரும் என்று உபதேசித்தருளினுன் எ—று.

**விளக்கம்:** 1. இங்கே கூறப்பெற்ற எட்டங்கயோகம் இராஜயோக மான அட்டாங்க யோகமன்று. அட்டாங்க யோகத்தில் ஒருவகை. சொரூப அட்டாங்க யோகமென்பர். தன்னை அறிதல் ஞானயோ கம். அதாவது ஞானநிட்டை எய்தி, ஒவ்வொன்ருகச் சுட்டி அறியும் பசுபோதம் அற்று, கரணம் அசைவற நின்று செய்யப் படும் யோகமாகும்-

2. ''கருமத்தான் ஞான முண்டாங் கருமத்தைச் சித்த சுத்தி
தருமத்தா லிகந்த சித்த சுத்தியைத் தரும நல்கும்
அருமைத்தாந் தருமத் தாலே சாந்தியுண் டாகு மாண்ட
பெருமைத்தாஞ் சாந்தி யாலே பிறப்பதட் டாங்க யோகம்''
— திருவிளையாடற் புராணம் 16 – 19

3. சாரூப்பியமாவது, பரமசிவனைப்போலச் சடைமுடி, முக்கண், நாற்புயம், நீலகண்டம், உமையொரு பாகம், இடபவாகனம் என் பன பெற்றிருப்பதாம்.

## 3. உபதேசம்

261 'சரியை கிரியை தருக்கமா யோகஞ்
சுருதியின் முறையே தொடங்கிய அனைத்து
நானெனும் போத நாட்டமே அன்றி
ஈனமில் உணர்வுக்(கு) இன்பங் காணேன்'
என்றுநான் வினவி இறைஞ்சலு நகைத்து
நன்றெனு மொழிவான்'

பொ—ரை:- ''சரியை, கிரியை, மிகமேம்பட்ட யோகம் என்று ஆகம நெறிப்படியே அநுட்டிக்கப்பட்டனவெல்லாம். நான் என்னும் ஆன்ம போத விருப்பை ஆக்குகின்றனவேயல்லாமற் பேரின்பத்திற்கு ஏது வாகிய மெய்யுணர்வு பிறத்தற்கான நாட்டத்தை உண்டாக்குவதை யறியேன்'' என்று நான் விண்ணப்பஞ் செய்து வணங்குதலும், புன் முறுவல் பூத்து, 'நல்லது' என்று திருவாய் மலர்ந்து உபதேசித்தருளு வாராயினர் எ று.

விளக்கம்:- 1. சுருதி என்பது உண்மை ஞானத்தை உணர்தற்குக் கருவியாகிய வேதத்தைக் குறிப்பதேனும் ஆகமத்தையுங் குறித்தல் மரபு. சரியை, கிரியை, யோகம் ஆகமத்திலேயே சிறப்பாகக் கூறப்பட்டுள்ளன. அன்றிச் சுருதி என்பது உபதேசக் கிரமத்துக் கேள்வி எனினும் அமையும். சரியை கிரியைகளாற் பாவம் நீங்கும்; யோகத்தால் மனக்கலக்கம் நீங்கி மனஒருமைப்பாடு உண்டாகும்.

2. நானெனும் போதம் தற்போதமாகும். ஈனமில்லுணர்வு அஞ்ஞானம், சந்தேகம், விபரீதமற்றது; தேக ஆன்ம புத்தியற்ற சுத்த அறிவு. பிரம்ம சொரூபமான அறிவே அருள். திருத்தகும் உணர்வு (அடி 82). நிருமலஞானம் (அடி 400), நிமலமெய்ஞ்ஞானம் (அடி 406) என மீண்டும் இந்நூலில் வருதல் காண்க.

3. சரியை, கிரியை, யோகம் மூன்றும் உண்மை ஞானம் பிறத்தற்கான சாதனங்கள். ஞானத்தாலன்றிப் பேரின்பமில்லை. ஞானத்தின் செறிவே இன்பமாதலின் ஈனமில்லுணர்வுக்கு இன்பங்காணேன் என்றார்.

4. "எவனுக்குப் பிரம்மசொரூபம் தெரியவில்லை என்னும் அபிப்பிராயமோ அவனுக்குத் தெரிந்தது; எவனுக்குப் பிரம்மசொரூபம் தெரிந்தது என்னும் அபிப்பிராயமோ அவன் தெரிந்தானில்லை; தெரிந்தவர்களுக்கு அறியப்படாதது; தெரியாதவர்களுக்கு அறியப் பட்டது." எனச்சாமவேத கேனோபநிஷத்துக் கூறுகின்றது.

5. உயிர்களின் பெத்தநிலை முத்திநிலைகளுக்கேற்பப் பரம்பொருளுக்கு ஐந்தொழில் நடத்தற்கான தடத்த நிலையும், சச்சிதானந்த சொரூப நிலையும் உண்டு. மெய்ஞ்ஞானிகள் அருளை ஆதாரமாகக் கொண்டு அந்த அருள்வசமாய் நின்று, மெய்யுணர்வாற் சொரூபத்தையே வழிபடுவர். அந்த அறிவுத்தொழில் வழிபாடே அதீத வழிபாடு, ஞானவழிபாடு என்ற பெயர்களால் அழைக்கப்படும். ஞானவழி பாடு குருமுகமாக உபதேசக் கிரமத்திற் கேட்டுணரற்பாலது. இதனாலேயே திருஞான சம்பந்தரும், "கற்றல், கேட்டல், உடை யார் பெரியார்" என்றருளிச் செய்தார். கேட்டல், சிந்தித்தலால் வருவது அபரஞானம். இது துவிதஞானமாகும். "ஓதரிய துவிதமே அத்துவிதஞானத்தை உண்டுபண்ணும் ஞானமாகும்" என்றார் தாயுமானார்.

6. சற்குருவினிடஞ் சீடன் விண்ணப்பஞ்செய்த இப்பகுதி தென்முகக் கடவுளிடஞ் சனகாதி நால்வரும் விண்ணப்பஞ்செய்ததை ஒத் திருக்கின்றது. "மாயை மரித்தாள்; போதன் பிறந்தான்; இரண் டும் ஆசௌசம்; பூசிக்கு நெறிசெப்பு" என்று சிற்றம்பல நாடிகள் வெண்பாவில் விண்ணப்பஞ் செய்தல் காண்க.

266 ………………ஞானம் உரைக்கிற்
பாச ஞானம் பகர்பசு ஞானம்
ஈச ஞானம் என்னமூன்(று) உளவாம்

**பொ—ரை:-** ஞானத்தை உபதேசிக்கின் அதிற் பாசஞானம் என்றும், நான் பிரம்மம் என்று சொல்லப்படும் பசுஞானம் என்றும், பதிஞான மென்றும் மூன்றுவகையுண்டு.

**விளக்கம்:-** 1. ஞானம் என்பது, ஒன்று எனவும் பல எனவும் உள்ள தொலையா வழக்கைக் கேட்டல் சிந்தித்தல் தெளிதலால் அறுத்து, ஐயந்திரிபறக் கலங்காது நிற்றலாகும். 'சிவன் படைப்புக்கால ஆரம்பத்திலே, உயிர்கள் அடைதற்குரிய போக மோட்சச்சித்தியா

கிய புருடார்த்தச்சித்தியின் பொருட்டாகத் தமது அருவ (நிட்களா) நிலையில் நின்று நாதரூப (அவபோதரூப) மாக ஞானத்தை வெளிப்படுத்தினர். பின் தமது ஐந்து முகங்கொண்ட சதாசிவத் திருமேனி வாயிலாகச் சத்த ரூபமாக உபதேசக் கிரமத்தால் உயிர்களுக்குப் புலப்படுத்தினர். உபதேச பரம்பரையிற் குறிக்கப்படுபவரிடத்திற் சிவன் வெளிப்பட்டு நின்றே உபதேசம் நிகழும்'— (மிருகேந்திர ஆகமம் 1-21, 24)

2. பாசஞானம், சொற்பிரபஞ்சமும் பொருட்பிரபஞ்சமுமாகிய இருவகைப் பிரபஞ்சம் வாயிலாக ஆன்மாவின்கண் நிகழும் ஏகதேச ஞானம். பசு ஞானம், பசுத்துவமாகிய தற்போதத்தால் ஆன்மாவின்கண் நிகழும் ஞானம். பதிஞானம், சிவனருள்வாயிலாக ஆன்மாவில் விளங்கித் தோன்றும் ஞானம்.

269 அதுகேள் பாச மாவ(து) ஆணவ
மதிமயற் கன்ம மாயை யிரண்டுந்
தெருமரல் காட்டுங் கருமமுந் திரோதையு
மருவிடும் பஞ்ச மலங்காண்

**பொ-ரை:-** அந்த ஞானம்பற்றிய செய்தியை அவதானித்துக் கேள்; பாசம் என்பது ஆணவமும், அறிவை மயக்கும் கன்மம், மாயை இரண்டும், பிறவிச் சுழற்சிக்கேதுவான விகற்பத்தை உண்டாக்கும் மாயேயமுந், திரோதாயியும் ஆக உயிருடன் சேர்ந்திருக்கும் ஐந்து மலங்கள் இவை என்று அறிவாயாக எ—று.

**விளக்கம்:-** 1. கேள் - பரப்பமைந்து கேள்; மனஒருமைப்பாட்டுடன் அவதானி; பராமுகந்தவிர்தி என்றவாறு.

2. ஆணவம் சகசமலம்; கன்மமும் மாயையும், ஆணவமல பரிபாகத்தின் நிமித்தம் இறைவனிடமிருந்து இடையில் வந்து கூடியவை. ஆகந்துக மலங்களாதலின் இவையிரண்டையும் ஒருங்கே கூறினர். இவை தனதல்லாத போகத்தைத் தனதென்று எண்ணும் மயக்க அறிவைத் தருவன. இவற்றுள் மாயை காரணநிலையில் மயக்கும் ஆயினும், காரியநிலையில் ஓரளவு அறிவை விளக்கும். கர்மம் பந்திக்கும். மாயை கன்மங்களின் இயல்புகளிற் பிறழாது உயிர், அவற்றின் வழிப்பட்டு நிற்கச் செய்தல் திரோதானத்தின் இயல்பு.

3. தெருமரல்........ திரோதையும்:- விகற்பம், தேகபோகங்களில் விருப்பு வெறுப்புக்களை வரச் செய்வது. விருப்பு வெறுப்புக்களால் இருவினையும், இருவினைகளாற் பிறப்பு இறப்புச் சுழற்சியும்

உண்டாகும். ஆணவத்தின் மறைக்குந் தன்மையிற் குறைவேற் படாமல் மறைச்கச் செய்வதே திரோதானசத்தியின் இயல்பு. உயிர்கள் முற்றுகப் பாசநீக்கம் பெறுவதற்காகவே அவ்வாறு செய்கின்றது. அதுவும் உண்மையில் அநுக்கிரகமே. பாசங்களின் இயல்பை அனுசரித்து நிற்பதாலே திரோதானசத்தியும் பாச மெனப்படுவது உபசாரமே. கருமம் - காரியம்; மாயையின் காரியங்களான மாயேயங்கள். பஞ்சமலம் - ஆணவம், கன்மம், மாயை, மாயேயம், திரோதாயி என்னும் ஐந்துமாம்.

272 ... ... ... ... ... ... ... ... ... ... ... ... ... ... இதனை
ஆசென உணரா(து) அகமென இருக்கை
பாச ஞானப் பண்பது வாகும்.

பொ—ரை:- பாசத்தை, (ஆன்மாவோடு கூடியுள்ள) குற்றமென அறியாது, அந்தப்பாசமே உயிராகிய நானென எண்ணியிருத்தல் பாச ஞானத்தின் குணமாகும் எ—று.

விளக்கம்:- 1. ஆசு— குற்றம். அறிவு, இச்சை, செயல்களாகிய உயிரின் குணங்களை மறைப்பதுவே குற்றமாகும். குற்றம் ஆணவத்தின் குணம்.

2. பாசம் சடப்பொருள்; உயிர் சித்துப்பொருள்; இரண்டும் வேறுபட்ட தன்மையன. ஒன்றைப் பற்றி நிற்றலேயே இயல்பாகவுள்ள உயிர், தன்னின் வேறுன தன்மையுள்ள பாசத்தைப்பற்றி, அப் பாசம் சடமென்று உணராமல், அப்பாசமே தானென்று நிற்கச் செய்தலே பாசஞானப் பண்பாகும். குற்றஞ் செய்யும் மலத்தைக் குற்றமென்றது உபசாரம்.

275 தரும்பசு ஞானஞ் சாற்றுதுங் கேண்மின்
வரும்பவ மூட்டு மலமைந்(து) அவற்றின்
ஆணவம் ஒன்றும் அகலா மையினுற்
காணுறு விகடக் கருவிகள் தீர்ந்து
தன்னை யுணர்ந்து தானே பிரமம்
என்னக் கருதி யிருப்ப தாகும்

பொ—ரை:- முன்னே கூறப்பெற்ற திருவருளின் துணையால் அறியப் படும் பசு ஞானத்தை இனிப்போதிப்போம்; (பராமுகந் தவிர்ந்து அவதானத்துடன்) கேட்பீராக; ஆன்மாவுக்கு (பலவகைப்பட)த் தொடர்ந்து வரும் பிறவிகளைத் தோற்றுவிக்கும் மலங்கள் ஐந்து; அம்

மலங்களில் (நான்கு மலங்களுந் திருவருளால் ஆன்மாவை விட்டுநீங்க) ஆணவமலம் ஒன்றும் நீங்காமையினுல், விடயங்களை அறிவதற்குத் துணையான மாயா கருவிகளின் இயல்பை உள்ளவாறு உணர்ந்து, தன்னை அவற்றின் வேருகக் கண்டும் (அவை தன்கீழ் வியாப்பியம் என்றறிந்து) அவற்றை நீங்கியும் (அக்கருவிகளிலும் மேலாகத் தன்னை உணர்ந்த அவதரத்தில், அதுபற்றி நிகழுஞ் செருக்கால் அவற்றுக்கு மேலாய) பிரமம் தானேஎனச் சடிதியாகத் தன்னைச் சிவசமமாக மதித்திருப்பதாம் எ—று.

**விளக்கம்**:- 1. **தரும் பசு ஞானம்**: விடயங்களை அறிதற்கு அந்தக் கரணங்களைத் துணையாகக் கொள்ளுங் கருத்தாவின் இயல்பைத் திருவருளால் ஆராய்ந்தறியுமிடத்துப் பிறக்கும் ஞானம். ''தருமிது பசுஞானம்'' சித்தியார் (192 திருவிளங்கதேசிகர் உரை பார்க்க)

2. **வரும்பவம்**: அருளாணைப்படி வினைக்கீடாகத் தொடர்ந்துவரும் பிறவி; மலங் காரணமாகவே பிறவிவரும். ''கன்மத்து ஆணையின் அமர்ந்து செல்ல'' என்பது சித்தியார் (91).

3. **மலம் ஐந்து... இருப்பதாகும்**:- ஆணவமல நீக்கத்துக்காகவே ஏனைய மலங்கள் சேர்ந்தன. திருவருள் உள்நின்று ஞானத்தை உணர்த்தி, ஏனைய மலங்களினின்றும் நீங்கித், தன்னையும் அறியுமாறு செய்தது. ஆயினும் ஆணவமலம் நீங்காமையாலே தற்போதம் முனைத்து, ''நானே தத்துவமெல்லாம் பொய்யென்று கண்டேன்; நானே நன்கு என்னை அறிந்தேன்; ஆதலால் நானே பிரமம்'' எனக் கருதும்; ''காதலினுல் நான் பிரமம் என்னு ஞானங் கருது பசுஞானம்'' (சித்தியார் சூத். 9-2). இவரை ''அகம்பிரமம் என்னும் அதிபாதகர்'' என்ருர் தாயுமானவர்.

4. தானே பிரமம் எனக் கருதியிருப்பது சிவசம்வாத ஞானம்; ஏகான்ம வாதம்பற்றி நிகழு ஞானம் எனினுமாம்.

5. மாயா காரியமான கருவிகள் நீங்கியவிடத்து நானே பிரமம் என நிற்றல் பசு ஞானம்; தானே கருத்தாவாய் நிற்றல் பசுஞானம் எனினுமாம்.

281 பதிஞா னத்தைப் பகருதும் அகங்கூர்
மதிஞா னத்தால் வரும்பவம் ஒழியா(து)
ஆகையால் அருள்புக்(கு) ஆணவம் ஒழிந்திட்(டு)
ஏகமாம் இன்பத்(து) எய்துவ தாகும்

பொ—ரை:- (ஈச ஞானம் என்ற) பதிஞானத்தை இனி உபதேசிக்கின்றோம். (அகங்கார மிகுதியால், 'நான் பிரமரூபம்' என மதிக்கும்) ஆன்மாவை, விவேகித்து அறியுங் கூரிய விவேகமாகிய பசுஞானத்தினாலே தொடர்ந்துவரும் பிறவி நீங்காது. ஆதலால் பசு (தன் இச்சா ஞானக் கிரியைகளாகிய போதங்கெட்டு)த் திருவருள் வசமாய் நின்று, அவ்வருளால் ஆணவமல நீக்கம் பெற்றுச், சிவத்தோடு பிரிப்பின்றிக் கலந்து ஒன்றாய் நின்று அனுபவிக்கும் பேரின்பத்தை அடைவிப்பது பதிஞானமாகும் எ—று.

விளக்கம்:- 1. மதிஞானம்-தன்னைப் பிரமமாக மதிக்கும் பசுஞானம். விவேகித்தறியும் விவேகஞானம் எனினுமாம். விடயங்களைத் தனித்தனி பொருந்திச் சுட்டியறியும் பசுஞானத்தாற் பிறவி நீங்காது.

2. அகம் பிரமம் என்பது ஏகான்மவாத மதக்கொள்கை. அகம் பிரமம் என்னும் வாக்கியத்தில் (அகம்) நான் என்னும் ஆன்மா முற்பட்டு நிற்கின்றது; பிரமம் பிற்பட்டு நிற்கின்றது. அவ்வாறு இருத்தலினால் நான் என்பது முனைத்துத் தோன்றி (எல்லா ஆற்றலும், எல்லா அறிவும், எல்லா அநுக்கிரகமுமுடைய) முதல்வன் முன்னே தன்னை ஒருபொருளாகப் பெரிதும் மதித்த குற்றம் நேர்ந்து, அதனால் அறியாமையே மேலிட்டுப், பேரின்பப் பெருவாழ்வை அடையவொட்டாது தடைசெய்து நிற்கின்றது. பெத்த நிலையிலேயே நிறுத்துகின்றமையால் வருபவம் ஒழியாது என்றார்.

3. அருள்புக்கு — தானாக அறியுஞ் சுதந்திரம் தனக்கின்மை கண்டு, அறிவிக்குந் திருவருளைச் சார்ந்து, திருவருள் நிறைவில் நிறைந்து அத்திருவருள்வசமாகி.

4. ஆணவம் ஒழிந்திட்டு— பக்குவமெய்திய பொழுது அவனருளால் மலநீக்கமுற்று. "பிறிவிப்பன் மலங்களெல்லாம் பின்னுயிர்க் கருளினாலே" சித்தியார் (252). முத்தியில் மலம் அறவே நீங்கும்; நீங்கினும் ஏனைய பெத்தரிடத்திருத்தலால் அதன் நித்தத்திற் குற்றமின்று. ஆன்மா தன்னோடொத்த சித்துச்சாதிப் பொருளாகிய சிவத்தோடு பிரிப்பின்றி நிற்றல் அநாதிஇயற்கை. வேற்றுச் சாதிப்பொருளாகிய சடம் என்னும் ஆணவமலத்தோடு கூடிநிற்றல் அநாதிசெயற்கை. அநாதிஇயற்கை நீங்காது; அநாதி செயற்கை நீங்கும். ஆதலின் முத்திக்காலத்து ஆணவமலம் நீங்குதற்கு இழுக்கில்லை என்பதுணர்க. நெல்லினிடத்து உமியும், செம்பினிடத்துக் களிம்பும், கடல் நீரினிடத்து உப்பும் அநாதி செயற்கையாயிருந்து நீங்குதல் கண்கூடு.

5. ஏகமாம் இன்பம் எய்தல் — சிவோகம் பாவனையாற் சிவபரிபூரணம் தன்மாட்டு மேலிடப்பெற்றுச், சிவமேயாகும் பேரின்ப நுகர்ச்சியை அடைதல். ஏகமாதலை, ''தாடலைபோலுங் காறலை போலுங்கூடல்'' என நூலாசிரியர் (அடி 387) விளக்கியுள்ளார்.

285. தத்துவ முழுதுஞ் சடமுனைக் காணுது
இத்தைநீ நடத்தற்(கு) இறைவனே அல்லை
அறிவனும் அல்லை அறியான் அல்லை
செறியருள் காட்டத் தேர்ந்துகாண் பவனீ

பொ-ரை:- தத்துவமனைத்தும் அறிவற்ற சடமாய்ப் பலபேதப்படுதலாலே (தத்துவம்) தானுகவந்து, ஆன்மாவாகிய உன்னைக்கூட அறியாது. நீ, செய்த கன்மத்திற்கேற்ற உடலை எடுத்து நடத்துவதற்குரிய தலைமையுடையாய் அல்லை; நீயாக அறியும் முற்றறிவும் உடையாய் அல்லை; பாசக் கருவிகளோடு கூடியபொழுது அறியாயுமல்லை; அறிவாய். வியாபகமான திருவருள் தத்துவத்துடன் கூட்டி, வேருய் நின்று (கருவிகள் வாயிலாக) அறிவிக்க, அவ்வருளுடனுய் நின்று ஒவ்வொன்ருகச் சுட்டிஅறிபவன் நீ எ-று.

விளக்கம்:- 1. சடம் அறிவற்றது; சடமாகிய தத்துவங்கள் தாமே தேகமாகக் காரியப்பட்டு, சித்தாகிய உயிரை வந்து பொருந்துதல் கூடாது. சடம், அசித்து, அசேதனம் என்பன ஒருபொருட் சொற்கள்.

2. சித்தாகிய உயிரோ, அறிவித்தால் அறியுஞ் சிற்றறிவும், அசைவித்தால் அசையுஞ் சிறுதொழிலும் உடையது. ஆதலின் தானே அறிந்து தத்துவங்களைக் காரியப்படுத்தவாவது, தானுகப் புடைபெயர்ந்து தேகத்தில் வந்துபுகவாவது முடியாது.

3. அறிவனும் ...... அல்லை:- ஆன்மா, பெத்தநிலையிற் கருவிகளின் சேர்க்கையின்றித் தானுக ஒன்றையும் அறியமாட்டாது. திருவருள் கருவிகளைக் கூட்டி உணர்த்தச் சுட்டியுணருஞ் செயற்கையறிவுடையது. தானுக அறியும் முற்றறிவில்லையாதலால், தான் செய்த கன்மங்களை அறிந்து தானுக உடலெடுக்க அறியாது.

4. செறியருள் காட்ட ... நீ:- சடமாகிய தத்துவத்தோடு சிற்றறிவும், சிறுதொழிலுமுடைய ஆன்மாவைக் கூட்டி இயக்க வேறொரு சித்து வேண்டப்படுவதாயிற்று. காந்த சக்தியால் இரும்பு அசையும் இயல்புடையதாதல் போலத், திருவருளால் ஆன்மா சத்தம் முதலிய விடயங்களை அறியும் தன்மையுடையதாகின்றது. ''உணர்த்த உணர்தலின்'' என்பது சிவஞான போதம்.

''அவ்வவ யோநி தோறு மவ்வவ வுலகந் தோறும்
செவ்விதி னறிந்து கன்மஞ் சேர்ந்திடா சீவன் சேரா
இவ்வகை தம்மிற் சேர்வு மிறைசெய லாகுற் செய்த
எவ்வுரு வுந்தங் கன்மான் மாற்றுவ னிறைவன் றனே''

— சித்தியார் சூ. 2.136.

5. ஆன்மாவின் உள்ளே நின்று உபகரிக்குந் திருவருள், கலாதி தத்துவங்களைத் தோற்றுவித்து விளக்கஞ் செய்து காட்டுதலால், ஆன்மா ஏகதேசமாய் அறிவு விளங்கப்பெற்று, அக்கருவிகளோடு கூடி விடயங்களை அறிந்து அனுபவிக்கும். ஆன்மா ஒரு விடயத்தை நுகரும்பொழுது, பொறியிலொன்றும், பூதத்திலொன்றும், அந்தக்கரணம் நான்கும், கலாதிகள் ஐந்துமாகப் பதினொரு தத்துவங்களையும் பொருந்தி நிற்கும். (அடி 345 - 1 பார்) தேர்ந்து காணுதல் என்பது ஒவ்வொன்றாகச் சுட்டியறிந்து, அனுபவித்து அழுந்தி உருசித்துத் தெளிந்துகொள்ளுதல். உணர்த்த உணர்தல் இதுவே.

289 யாதுசார்ந் திடினும் யானது என்னும்
போதநின்(று) உணர்வு புகன்றிடிற் சிறிதாம்

**பொ—ரை:-** ஆன்மா பாசப்பொருள்களுள் எதைச் சார்ந்தாலுஞ் சார்ந்ததன் சுபாவமே தன்சுபாவம் என்னும் ஆன்ம (இச்சை ஞானம் கிரியை ஆகிய) போதம் பிரகாசித்துநின்று அறிவை உண்டாக்கின் அவ்வறிவு (ஏகதேச ஞானம் எனப்படும்) சிற்றறிவாம் எ—று.

**விளக்கம்:-** 1. சார்ந்ததன் வண்ணமாய் நின்றறிதல் ஆன்மாவின் சிறப்பியல்பு. ஆன்மா தனித்து நிற்பதில்லை. ''யாதொன்று பற்றினதன் இயல்பாய் நின்று, பந்தமுறும் பளிங்கனைய சித்துநீ'' என்றார் தாயுமானவர். கூடினவற்றிலே மலஞ்சார்ந்த தன்போதங்கூடி மேலிட்டு, நிலத்தியல்பால் நீர் திரிந்தாற்போல நிற்கும். சார்ந்ததன் வண்ணமாந் தன்மையுள்ளதால் ஆன்மாவுக்குச் சார்போதன் என்னும் பெயருமுண்டு.

2. ஆன்மா சாரப்படும் பொருட்பேதங்களால் பூதான்மா, அந்தரான்மா, தத்துவான்மா, சீவான்மா, மந்திரான்மா, பரமான்மா என ஆறு வகைப்படும். இவற்றுள் மெய்ஞ்ஞானத்தால் ஆன்மா பரமான்மாவோடு சார்ந்து நிற்றல் இயற்கை; சொரூபநிலை. ஏனைய பூதாதி ஐந்தோடுஞ் சார்ந்து நிற்றல் செயற்கை; தடத்தநிலை. செயற்கை உபாதிகள் வாயிலாக உண்டாகும் அறிவு சிற்றறிவு. சிற்றறிவும் பசுவின் தன்மையுள் ஒன்றாகும். வியாபகமும்

அறிவுமே ஆன்மாவின் சொரூபம். இவற்றின் விரிவைச் சருவஞா னோத்தர ஆகம ஞானபாதத்திற் காண்க.

•

291 மறைத்திடு மூல மலத்தினாற் பாசச்
சிறைக்குளே கிடந்து தேகநான் என்று
வல்வினை புரிந்து மயங்கினை அந்தத்
தொல்வினைப் பயன்கள் சூட்டினம் இப்பால்
இருவினை யொப்பு மலபரி பாகந்
திருவருள் பதிக்கத் தேடிவந் தனம்யா(ம்)

•

பொ—ரை:- பசுவாகிய உன்னையும் உன்னோடு அநாதியே கலந்திருக்கின்ற முதல்வனையும் அறியவிடாது (உனது இச்சை ஞானங் கிரியைகளை) அநாதியே மறைந்திருக்கின்ற ஆணவமலத்தினால், பாசமாகிய பந்தத்தினுள்ளே கிடந்து அழுந்தியும், பற்றும் இயல்பாற் சரீரமே ஆன்மா என்று வலிய இத அகிதங்களைச் செய்தும் மயங்கினை. யாம், நீ செய்த பழவினைக்கேற்ற பயன்களைப் பக்குவக்கிரமத்தின்படி தந்து அனுபவிக்கச் செய்தோம். அனுபவ அறிவாற் பின்னர் சரியை கிரியை யோகநெறி நின்று, இருவினையொப்பும், மலபரிபாகமும் உண்டாக, (அவை காரணமாகச் சத்திநிபாதம் எனப்படும்) திருவருள் விளக்கத்தை உண்டாக்க (உன் பக்குவம் நோக்கி அறிவிக்கக் காத்திருக்கும்) யாம் நாடிவந்தோம் எ—று.

விளக்கம்:- 1. பசுவினிடத்து அநாதியே கலந்திருக்கும் சிவத்தின் தன்மையை விளங்கித்தோன்றுவண்ணம் ஆணவமலம் மறைக்கும். மல மறைப்பில்லாவிடில் உயிர் சிவத்தின் தன்மையைப் பெற்றுச் சிவமயமாய் விளங்கும். இதனை "அசையாத சிவத்துவம் சேதன ஆன்மாவிடத்தில் அநாதியே மலத்தடையாம்" எனச் சருவஞானோத்தரம் விளக்குகின்றது.

2. பாசச்சிறை — பாசபந்தம். உயிரைப் பந்தப்படுத்துதற்கண் மும்மலமும் ஒப்புமையுடையன. பந்தப்படுத்தும் முறையில் வேற்றுமையுடையன. அநாதியே கூடி அறிவை முற்றுகத்தடுக்கும் ஆணவ மலம் பிரதிபந்தம் எனப்படும். இடையே கூடி உயிரறிவை ஏக தேசப்படுத்தும் மாயை சம்பந்தம் எனப்படும். இடையே தொடர்ந்து விருப்பு வெறுப்பை உண்டுபண்ணிச் சுகதுக்கந் தருங் கன்மம் அனுபந்தம் எனப்படும்.

3. தேகம் நான் என்று:- தேகம் என்ற சொல்லுக்குத் தகிக்கப் படுவது, கொளுத்தப்படுவது என்பது பொருள். உயிர், தூல சூக்கும

காரண தேகங்களைச் சார்ந்து அது நானென நிற்கும். அருணகிரியா ரும், 'விதிகாணும் உடம்பை விடாவினையேன்' என்றார். 'போகமே முத்தி; கண்டதே காட்சி; கொண்டதே கோலம்' என்னும் உலோ காயதரும் தேகமே ஆன்மா என்பர். இது தேகோகம் எனப்படும். சித்தாந்த சைவர் சிவோகம்எனப் பாவனை செய்வர். தேகோகம், முதல் சிவோகம் ஈறுகக் கிடந்த நான் என்னும் அவசர பேதங் கள் பல. தேகோகம் என்ற கனவு உலகத்திலிருந்து நீங்கிச், சிவோ கம் என்ற சிவானுபூதி நிலை விளங்கின் பிராரத்துவ போகஞ் சிறிதுந் தாக்காது என்பர்.

4. வல்வினை — கன்மம் இறைவன் உடைமைப்பொருள். ஆதலால் எச்செயலும் இறைவன் செயலென எண்ணிச் செய்யப்பட வேண் டும். அவ்வாறு செய்யின்; இருவினையொப்பாய் மலபரிபாகப்பட்டு சத்திநிபாதம் ஆகும். ஆணவ முனைப்புடன் யான் செய்தேன் என்ற எண்ணத்துடன் செய்யப்படுவதே பிறவிக்கு வித்தான வல் வினை எனப்படும்.

5. தொல்வினைப் பயன்கள் கூட்டினம்:— கன்மம், சடம்; செய்த உயிர் சிற்றறிவினது; ஆதலால் இறைவன் துணையாக நின்று, கன் மத்திற்கேற்ற பலனைப் பக்குவம் நோக்கிக் கூட்டுவன். தாயுமான வரும் "கர்ம பந்தத்தினற் சன்ம பந்தம் பெறக் கற்பித்த துன்ன தருளே" என்றார்.

6. இருவினையொப்பு:- நல்வினை தீவினைகளிலும், புண்ணிய பாவங் களிலும், இன்ப துன்பங்களிலும் ஒன்றில் விருப்பும் ஒன்றில் வெறுப்பும் இன்றி, ஆன்ம அறிவின்கண் ஒப்ப வெறுப்பு நிகழ் தல். இருவினை ஒப்புக்குக் காரணம், சரியை கிரியை யோகம் என் னும் சிவபுண்ணியங்களேயாம்.

மலபரிபாகம்:- ஆணவமலத்தின் சக்தி, ஆன்மாவின் அறிவை மயக்க இயலாது வலிகுன்றி நிற்கும் அவதரம். மலபரிபாகத்துக் குக் காரணம் இருவினை ஒப்பு.

சத்திநிபாதம்:- ஆன்மாவினது அறிவை மயக்கும் ஆணவமல சத்தி நழுவும் அவசரத்திலே முற்பிற்பாடறச் சிவத்தினது சிற்சத்தி பதிந்து, அவ்வான்மாவினது நித்திய ஞானக்கிரியையை விளக்கு வதாம். ஆன்மாவின் பக்குவ வேறுபாட்டால் மந்ததரம், மந்தம், தீவிரம், தீவிரதரம் என நான்கு வகையாக விளங்கும். சத்திநிபா தத்திற்குக் காரணம் இருவினையொப்பும் மலபரிபாகமுமாம். இம் மூன்றும் ஏககாலத்தில் நிகழ்வனவாம்.

7. திருவருள் பதிக்கத் தேடிவந்தனம் யாம்:- ஆன்மாக்கள் பிறந்து இறந்து துன்பப்படாமல் நிலையான திருவடியைப் பெறுதற்குரிய ஞானத்தைப் போதித்தருளக் கருணை கொண்டு, பூனை குட்டிகளைத் தேடி வருமாப்போலத் திருவருளுங் குருவடிவாய்ப் பக்குவான்மாவை நோக்கித் தாமே தேடிவருதலைக் குறித்தது. பக்குவான்மாவான வள்ளியை ஆட்கொள்ள அவளிருந்த தினைப்புனந்தேடி முருகன் வந்தமையையும் அறிக. முன்னரும், ''திருத்தகும் உணர்வு செப்ப வேண்டி வந்தனம்'' (அடி 81) என்றார்.

297 மேலொரு மலத்து விஞ்ஞா னகலர்க்(கு)
ஓவறு முத்தி உணர்வினின்(று) அளிப்போம்
பெரு(கு)இரு மலங்கொள் பிரளயா கலர்க்கு
மருவுநன் மூர்த்தி வடிவுகொண்(டு) அருள்வோ
மும்மல முடைய சகலனீ மொழியின்
அம்மல நீக்கி ஆட்கொண் டருள
மானைக் காட்டி மான்பிடிப் பவர்போல்
மானுட வடிவாய் வந்தனம்;

பொழிப்புரை:- ''ஆணவமலம் ஒன்றுமே உள்ள விஞ்ஞான கலருக்கு அறிவுக்குள்ளே பேரறிவாகப் பிரகாசித்துத் தன்னிலையில் நின்று, குறைவற்ற முத்தியைக் கொடுத்தருள்வோம்; ஆற்றல் மிக்க ஆணவம் கன்மம் ஆகிய இரண்டு மலங்களுள்ள பிரளயாகலருக்கு முக்கண், நாற்புயம், நீலகண்டம், இளம்பிறை, மான்மழு, உமையொருபாகம், எருத்து வாகனம் முதலியவற்றோடு கூடிய நல்ல உருவத்திருமேனி தாங்கி முன்னிலையிற் காட்சியளித்து அருள்புரிவோம். ஆராய்ந்து கூறின் நீ மும்மலங்களுமுள்ள சகலவர்க்கத்தைச் சேர்ந்துள்ளாய். ஆதலினாலேதான் மும்மலங்களையும் உபதேசத்தால் வேறாக்கி, உம்மை அடிமை கொள்ளுதற் பொருட்டுப் பார்வை மிருகத்தைக் கொண்டு வனவிலங்குகளைப் பிடிப்பவரை ஒத்து (உம்மைப் போன்று) மானுடச் சட்டை சாத்தி ஞானதேசிக உருவாய் வெளிவந்தோம் எ—று.

விளக்கம்:- 1. பக்குவ வேறுபாட்டிற்குத் தக தன்மை, முன்னிலை, படர்க்கை இடமாக நின்று மூவகை ஆன்மாக்களுக்கும் அருள் புரிகின்றார். அருள் புரிதல் ஐந்து வகைப்படும். அவை உள்நின்றருளுதல், உருவு கொண்டருளுதல், ஓர் உருவில் வெளிப்பட்டு நின்றருளுதல், வேடம் மாறி மெய்யறிவித்தருளுதல், மந்திர செபத்தால் அருளுதல் என்பனவாம். அவற்றுள் மூன்றுவகையாக நின்று

அருள்புரிதல் ஈண்டுக் கூறப்பட்டன. விஞ்ஞானகலர் பிரளயாகல ருக்கு நிராதாரமாயும், சகலர்க்கு ஆதாரமாயும் நின்று அருள் புரிவதற்குக் காரணம் படிமுறையில் அறிவித்தாலன்றி அறிய முடி யாத உயிர்களின் வெவ்வேறான பக்குவ நிலையேயாம்,

2. அவ்வவ்வினத்துப் பழக்கப்பெற்ற மானை (விலங்கை)க் கொண்டு வனவிலங்கைப் பிடிப்பது வழக்கம். பழக்கப்பெற்ற விலங்கு பார்வை மிருகம் எனவும், தீவகம் எனவும் பெயர்பெறும். ''தீவ கமாமென உருவாய் வந்து'' என்பது சிவப்பிரகாசம். மான் என் பதில் னகர ஒற்று சாரியை. மா என்பது விலங்கைக் குறிக்கும்.

3. ஆட்கொண்டருள - வேறு சார்பு அற்ற அடியவனாக ஏற்று அரு ளும் பொருட்டாக. அஃதாவது, உலகப்பற்று அற்றுச் சிவபக்தி மேலிட்ட மெய்யடியவனாக ஆட்கொள்ளுதற் பொருட்டு என்றபடி. மானுடரிற் பக்குவமுற்ற உன்னை ஆட்கொண்டருள மானுடவடி வில் வந்தோமென்றார்.

304 .............................. தெள்நீர்
மீனது போல விழியுற நோக்கி
ஆனதோர் கமடம் போலகத்(து) உன்னிப்
பறவை போலப் பரிசஞ் செய்து
திறமிகு முன்னூல் தெளிவுரை பகர்ந்து
பக்குவத்(து) அடைவே பாவித்(து) அருள்நீ
புக்கிட வேண்டிப் போந்ததென்(று) இசைத்தான்

பொ—ரை:- மீனானது தெளிந்த நீர்நிலையிலே தானிட்ட முட்டையை அன்புடன் பார்த்தல்போல நின்னைக் கிருபையோடு பார்த்தலாகிய நயனதீக்கை செய்தும்;

நீரிலுள்ள ஆமையானது கரையிலே தானிட்டுவைத்த முட்டையைத் தனது மனத்திற் பாவித்தல்போல நின்னை எமது அருளுருவாகப் பாவித் தலாகிய மானத தீக்கை செய்தும்;

பறவையானது தானிட்ட முட்டையைத் தனது சிறகினாற் பரிசித்தல் போல நின்னை எமது கரசரணங்களாலே தொடுதலாகிய பரிச தீக்கை செய்தும்; பாகுபாட்டுச் சிறப்பு மிகுந்த முதனூல்களாகிய வேதசிவா கமங்களிலே தெளிவுபட எடுத்தோதப் பெற்றுள்ள முப்பொருளிலக் கணம், வீடுபேறடையும் முறை என்பவற்றை உனக்கு நூல் வழி யாகப் போதித்தலாகிய சாத்திர தீக்கை செய்தும், (பல தரப்பட்ட

சகலவர்க்கத்தினரில்) உனது ஆன்ம பரிபாகத்திற்கு ஏற்ற முறையாக அருள்புரிந்து, திருவருள் நிறைவில் நீ அழுந்த வேண்டுமெனத் திரு வுளங்கொண்டு, சிவகுருவடிவாக அந்தச் சிவனருளே வந்தது" என்று திருவாய் மலர்ந்தருளினான் எ—று.

விளக்கம்:- 1. எழுவகைத் திட்சைகளுள் நான்குவகை இங்கு எடுத்தோதப் பெற்றன. வாசக திட்சை, யோகதிட்சை, அவுத்திரி திட்சை என் பவற்றை உப இலக்கணத்தாற் பெறவைத்தார்.

2. இருவினை ஒப்பும் மலபரிபாகமும் (வந்த பொழுதே) சத்திநிபா தமும் உடன் நிகழும். அறியாமல் உள்நின்று படைப்பாதி நான்கு தொழிலையுஞ் செய்த திருவருளே வெளியே புறப்பட்டு, சகலவர்க் கத்தாருள் ஒருவரை ஆதாரமாகக் கொண்டு குருவடிவாய் வந்து' உண்மை ஞானத்தை உணர்த்தி ஐந்தொழிலில் இறுதியான அருள லைச் செய்தருளும்.

3. கமடம் ஆமை; ஓர் கமடம் வினைத்தொகை. ஓர்தல் — நினைத் தல், உன்னி என்றதும் அப்பொருளையே தந்தது. ஓர்தலும் உன் னுதலும் ஈண்டுப் பாவனையை உணர்த்தின.

4. அநாதியே ஆணவத்தோடு கூடிய உயிர்கள் சில்வாழ்நாள், பல் பிணிச், சிற்றறிவினையுமுடையன; முதனூற் பொருள்களைத் தாமே உள்ளவாறு உணர்ந்து, உணர்ந்த வண்ணம் ஒழுகும் வல்லமையும் அற்றவை. ஆதலினாலேதான் பரம கருணாநிதியாகிய பரமேசுவரன் வேத ஆகம சாத்திர உண்மைப் பொருளை உள்ளவாறுணர்த்த வல்ல குருபரம்பரையைத் தாமே தோற்றுவித்தார். தோற்று வித்த அந்த ஞானபரம்பரைக்குத்தாமே முதற்குருவாகித், தட் சண மூர்த்தியாயும் ஸ்கந்தகுருவாயும் வீற்றிருந்து, சனகாதி மகரி ஷிகளுக்கும் அகத்தியர் முதலிய முனீந்திரர்களுக்கும் வேதாந்தங் களையும் பிரணவ அர்த்தத்தையும் உபதேசித்து, அந்தக் குருபரம் பரையும் சிஷ்ய பரம்பரையும் என்றென்றும் வாழ்கவென்றும், கேட்டவர் வாழ்க என்றும், ஆசிவசனங்களையும் உபநிடதங்களிலே புகட்டி வைத்துள்ளார். இந்த உபதேசக் கிரமத்தையே முன்னூல் தெளிவுரை பகர்ந்து என்ற தொடராற் பெறவைத்தார்.

5. அருள் புக்கிட வேண்டிப் போந்தது:- ஆமை, மீன், பறவை என்பன தத்தம் குட்டி, குஞ்சுகளைத் தம்மைப்போல உருவம் பெறுவதற்கே செயல்புரிகின்றன. அதுபோல அருளுருவான சற்குரு வுஞ் சீடன் அருள்மயமாகத் தீட்சைக்கான கிரியைகளைச் செய்கின் றார்.

ஏகனும் ஆகி அநேகனு மானவன்
நாதனும் ஆனானென் றுந்தீபற
நம்மையே ஆண்டானென் றுந்தீபற — திருவுந்தியார்-5

## ஞானத்தில் ஞானம்

311 பற்பல சமயப் பகுதிசேர் நிலையுஞ்
சொல்வகை மறப்புந் துகளற மொழிந்தான்
தெய்வஞ் சிவமே சிவனருள் சமயஞ்
சைவம் சிவத்தொடு சம்பந்தம் என்றான்

**பொ—ரை:-** மிகப்பலவான சமயப்பிரிவுகள் சேரும் (பூர்வபக்க) நிலையையும், அவ்வச்சமயங்கள் கூறும் மத சங்கற்ப காரணங்களும், அவற்றைத் தக்க உத்தரஞ் சொல்லி நிராகரித்தலுமாகிய பரமத கண்டனத்தையுங் குற்றந்தீர எடுத்துக் கூறியருளினான். சிவபெருமான் ஒருவரே உலகத்திற்குக் கருத்தா. (ஆன்மாக்கள் ஈடேறும் பொருட்டு) அவரால் அருளிச் செய்யப்பெற்ற சமயம் சைவ சமயம். அந்தச் சைவ சமயம் சிவத்தோடு சம்பந்தமுடையது என்று சுவமத தாபனஞ் செய்தருளினான். எ-று.

**விளக்கம்:-** 1. பற்பல சமயப்பகுதி தத்துவப்பிரகாச நூலார் (புறச்சமயம் 6, புறச்சமயவிரி 18, அகச்சமயம் 6, அகச்சமயவிரி 18.) தொகையும் விரியுமாக 48 எனக் கொண்டனர். மாதவச் சிவ ஞானயோகிகள் அகச்சமயம் 6, அகப்புறச் சமயம் 6, புறச் சமயம் 6, புறப்புறச்சமயம் 6 ஆக சமயப்பகுதி 24 எனக் கொண்டனர்.

2. பிறமதத்தார் கூறுங் கருத்துக்களை எடுத்துச் சொல்லித் தக்க காரணங்காட்டி மறுத்துப் பின் தம்முடைய கருத்தையுரைப்பது சைவ சித்தாந்திகள் கொண்ட ஒரு நூல்நெறி.

3. சேர்நிலை வினைத்தொகை. சேரும் நிலை என்றது பூர்வபக்கத்தை. சொல்வகை - மதசங்கற்ப காரணங்கள். மறப்பு என்றது நிராகரணத்தை. மறப்பு, நிராகரணம், தள்ளுதல், ஒழித்தல் என்பன ஒரு பொருளன. சங்கற்பம் - நினைப்பு. சங்கற்பத்திற்கு மறுதலை மறப்பு. நினைப்பு மறப்பு என்ற வழக்கையும் ஓர்க. மறுப்பு என்பது பாடமன்று. வகை - காரணம், துகள் - ஐயம், திரிபு, அறியாமைகளாகிய குற்றம். துகளற மொழிந்தமை கொண்டே இந்நூலாசிரியர் துகளறு போதம் என்னுஞ் சைவசித்தாந்த நூலை இயற்றினார்.

4. சிவம் - சொரூபசிவம். சிவன் - சதாசிவன். நிஷ்கள சகள வடிவ சதாசிவனுல் அருளிச் செய்யப்பட்ட சைவசமயநெறி சொரூப சிவத்தோடு ஆன்மா அத்துவித சம்பந்தமுறச் செய்யும். சிவன் உமைக்கும், சுப்பிரமணியருக்கும், முனிவர்களுக்கும், பிறர்க்கும் சைவ சமய உண்மைகளை விளக்கியருளியமையைப் புராணங்களிலுங் காணலாம். கந்தபுராணம் உலகாயதம், மாயாவாதம், யாஞ்ச ராத்திரம், பூர்வமீமாஞ்சை மதங்களை மறுத்துச் சைவசித்தாந்தத்தைச் சுபக்க முறையால் நிலைநாட்டுகின்றது. 'சிவனொருத்தனே தெய்வம்' என்பது சிவயோகசுவாமிகள் வாக்கு.

5. தில சம்பந்தம் தைலம்என ஆகியதுபோலச் சிவசம்பந்தம் சைவம் என்ருயிற்று; வடமொழித் தத்திதாந்தப் பெயர்.

315 பூதம் பழித்துப் பொறியற உணர்த்தி
வாதமாங் கரண வல்லப நீக்கிப்
பித்துறுங் கலாதிப் பிணக்கற விடுத்துச்
சுத்த தத்துவந் தூடண மாக்கி

பதவுரை:- பூதம்பழித்து - (அழியுஞ் சடமான) ஐந்து, பூதங்களின் சேர்க்கை (உலகம்..அது சடமன்றி) உயிர்த்தன்மை அன்றென அறிந்து நீங்கி:

பொறியற உணர்த்தி - பொறிகள் ஐந்தும், சத்தாதி ஐந்தும், வாக்காதி ஐந்தும், வசனுதி ஐந்தும், சூக்குமை முதலான வாக்குகள் நான்குமாக 24 கருவிகளுஞ் சடம்; அவை ஆன்மா அறிதற்குக் கருவிகளன்றி அவற்றின் கூட்டுறவு ஆன்மாவாகாதுஎன அறிந்து அவற்றைத் துறக்கும் வழியை உணர்த்தி;

வாதமாம் கரணவல்லபநீக்கி - ஆன்மாவின் இச்சை செல்லுமுன்னே வாதிட்டு முந்திச்சென்று நல்லுணர்வை மறைக்கும் அந்தக்கரணங்கள் சடம். அவற்றை ஆன்மாவெனச் சிலர் வாதிப்பர். அவை தாமாகவே பற்றி, நிச்சயித்து, எழுந்திருந்து, சிந்திக்கும் ஆற்றலில்லாதவை. ஆதலால் அந்தக்கரணம் ஆன்மா அன்று எனக்கண்டு அவற்றை நீக்கும் உபாயத்தை அறிவித்து;

பித்துறுங் கலாதிப் பிணக்கற விடுத்து - மயக்கத்தின் பாற்பட்ட விபரீத ஞானத்தைத்தருங் கலையாதிகள் (சடம், அவைகளே) ஆன்மாவென்ற மாறுபட்ட எண்ணத்தை முற்ருக விடுவதற்கான ஏதுக்களையுங்கூறி.

சுத்த தத்துவம் தூடணம் ஆக்கி - சுத்த தத்துவங்கள் பதமுத்தியைப் பயந்து (பரமுத்தியைப் பயக்கும்) நிட்டைக்குத் தடையாயிருப்பதால், அவற்றையுந் துறப்பதற்கான காரணங்களைக் கூறி எ-று.

**விளக்கம்:-** 1. சீவன்முத்தி நிலையிலிருந்த ஆன்மா, அந்நிலையிலிருந்து வழுவிய இடத்து, மீண்டும் முப்பொருள்களின் உண்மை நிலையையுணர்ந்து மேல்நோக்கி அந்நிலைக்குச் செல்லும் நெறியில் அமைந்துள்ள படிகளே, ஈண்டுப் பூதம் பழித்தல் முதலாக அமைந்துள்ள அவதரங்கள். ஞானத்தில் ஞானமான தசகாரியமே இவ்வாறு பல அவதரங்களாகப் பகுக்கப்படும் என்பர். (இவற்றின் விரிவை சிற்றம்பல நாடிகள் இயற்றிய துகளறு போதத்திலும், அவர் மாணவர் தத்துவப்பிரகாசர் இயற்றிய தத்துவப்பிரகாசத்திலும், அவர் மாணவர் பரமமுனிவர் இயற்றிய சித்தாந்த சாரம் என்னும் நூலிலுங் காண்க). இந்த அவதரங்களை, 'அருளில் உயிர் கூடும் நெறி' எனச் சித்தாந்தசாரங் கூறும்.

2. சைவ ஆகம முறைபற்றிப் பூதப்பழிப்பு முதல் அத்துவசோதனை ஈறுகவுள்ள அவதரங்களைக் கூறத்தொடங்குகின்றார். உலோகாயதன், சாருவாகன் பஞ்சபூதங்களின் சேர்வையே உயிரென்பர்; தேகமே ஆன்மா என்பர். தேகம் புன்புலால் யாக்கை; சடம்; அழிவது. பூதம்பழித்து என்பது தேகம், ஆன்மாவன்று எனத் தேகான்ம வாதியை மறுத்ததாகும். பஞ்சபூதப் பழிப்பு என்னும் அவதரத்தில் நீங்கிய கருவிகள் பூதம் 5.

3. பொறியற உணர்த்தி - இது தேகம் ஆன்மா அல்லாவிடில் இந்திரியமே ஆன்மா என்ற இந்திரியான்ம வாதியை மறுத்தபடி. பொறியற உணர்தல் என்னும் இந்த அவதரத்தில் நீங்கிய கருவிகள் ஞானேந்திரியம் 5, கன்மேந்திரியம் 5, புலன் 5, ஆக 15 ஆகும்,

4. கரண வல்லப நீக்கி - அந்தக்கரண சுத்தி எனப்படும் அவதரம் இது. ''பழவினைகள் பாறும்வண்ணஞ் சித்தமலமறுத்துச் சிவமாக்கி'' என்று மணிவாசகர் இதனை விளக்குதல் காண்க. கரண வல்லபம் உணர்த்தி என்னும் இஃது, அந்தக்கரண ஆன்ம வாதியை மறுத்தபடி. அந்தக்கரண சுத்தி அவதரத்தில் நீங்கிய கருவி கரணம் 4.

5. கலாதிப் பிணக்கற விடுத்து - கலாதிஞான நிராகரணம் என்னும் அவதரம் இது. காலம், நியதி, கலை, வித்தை, அராகம், புருடன், மாயைஎனத் தோற்றக் கிரமம்பற்றி எண்ணப்படும் வித்தியா தத்துவங்கள் தொழிற்படும் முறைமைபற்றி, கலை முதலாக எண்ணப்பட்டுக் கலாதி தத்துவங்கள்என வழங்கும். கலாதிப்பிணக்

கற விடுத்தற்கு உபாயம், யான் எனது என்னும் ஆன்மபோத முனைப்பற்றுச், சத்தியிலே தான் அடங்கி நிற்றலாகும். பரபோக அநுபவத்தைக் கொடுக்கும் நிட்டைக்கு இதுவே வழியாகும். இந்த அவதரத்தில் •நீங்கிய கருவி கலையாதி தத்துவம் 7.

6. சுத்ததத்துவ தூடணம் ஆக்கி - இது சுத்ததத்துவ தூடணம் என்னும் அவதரம். சுத்த தத்துவம், சிவசத்தி அறிவித்தாலன்றி அறியாத சடம். அவை ஒரு தன்மையவாய் இராமற் பல தன்மையனவாய், ஞானங்கிரியை ஒன்றற்கொன்று ஏற்றத்தாழ்வாயும் ஒத்துந் தொழிற்பட்டுப், பதமுத்தியைத்தந்து பரமுத்திக்குத் தடையாய் நிற்பன.

•

திருவருளோடு சேர்ந்து இவற்றை நீங்கி நிற்பது சுத்ததத்துவ தூடணத்திற்கு உபாயம். இந்த அவதரத்தில் நீங்கிய கருவிகள் சுத்ததத்துவம் 5. மேலே கூறப்பெற்ற ஐந்து அவதரத்திலும் 36 அசுத்தத்துவங்களும் நீங்கின.

319 முப்பது முப்பது முப்பதோ(டு) ஆறெனச்
செப்புங் கருவிகள் சேரா(து) அகற்றித்
துன்னிடும் அத்துவா சோதனை கண்டு

பொ—ரை:- 96 என்னும் எண்ணிக்கை கொண்ட கருவிகளையுஞ் சடமெனக் கண்டு துறப்பதற்கான மார்க்கத்தை அறிவித்து, (பிறவி தோறும் மனம் வாக்கு காயங்களால் ஈட்டப்பட்டுள்ள) சஞ்சித கன்மங்கள் நெருங்கியிருக்கும் ஆறு அத்துவாக்களையுந் தூய்மை செய்யுமாற்றையும் உபதேசித்து எ-று.

விளக்கம்:- 1. அகக்கருவிகள் 36. புறக்கருவிகள் 60. ஆகக் கருவிகளின் தொகை 96. மேலே கூறப்பட்ட ஐந்து அவதரங்களிலும் நீங்கிய 36 அகக்கருவிகளின் காரணமான 5 கருவிகளும், காரண காரியமான 28 கருவிகளும், காரியமான 27 கருவிகளுமாக 60 புறக்கருவிகளையுஞ் சடமெனக்கண்டு நீங்குதல் தத்துவாதீதம் என்னும் அவதரமாகும். (இவற்றின் விளக்கம் அடி 241 காண்க).

2. 96 கருவிகளையும் முதலாந்தத்துவம் 30. இரண்டாந் தத்துவம் 30. மூன்றாந் தத்துவம் 36 எனப் பிரிக்கப்பட்டு வழங்குவது வேதாந்த முறை. தத்துவங்களின் காரியப்பாட்டை அறிதல் தத்துவரூபம்; தத்துவங்கள் சடமெனக்காண்டல் தத்துவ தரிசனம்; சேராது நீங்குதல் தத்துவ சுத்தி; தத்துவங்கள் இத்தகையனஎனக் கண்டு

நீங்குதல் தத்துவாதீதம். 'தத்துவா தீதனுக்குஞ் சற்குரு' என்பது சிவயோகசுவாமிகள் நற்சிந்தனை.

3. தத்துவங்களோடு சேர்ந்து ஒன்றாய் நிற்றல் பெத்தசகலம்; தத்துவங்களோடு சேராது அவற்றைத்தன்னின் வேறாகக் காண்டல் முத்திசகலம்.

4. அத்துவா - வழி. ஆன்மாக்கள் கன்மம் ஈட்டுதற்கும், கன்மம் நீங்கிப் பரகதியடைவதற்குங் காரணமாகியவழி. மந்திரம் முதலிய ஐந்து அத்துவாக்களும் மனம் வாக்குக் காயங்களாகவும், கலை இவற்றைச் செலுத்துஞ் சக்தி வடிவாகவும் நின்று கன்மம் ஈட்டப் படுதலின், அத்துவாக்கள் கன்மம் ஈட்டுதற்கு வழியாகும். மனம் வாக்குக் காயங்களாற் கடவுளைத் தியானித்துத் துதித்து வணங்கி முத்தியடைவதற்கு வழியாதலின், அத்துவாக்கள் பரகதியடைவதற்கு வழியாகும். நிருவாண தீட்சையினுல் ஆறு அத்துவாக்களும் நீங்கப்பெற்று ஆன்மா சிவகதி அடையும். அத்துவ சுத்தியாற் பிரபஞ்சப் பற்றுஅறச் சஞ்சிதவினை கெட்டழியும்.

5. அத்துவ சோதனையாவது, ஆறு அத்துவாக்களிலுஞ் சஞ்சிதமாயிருந்த கன்மங்களை ஏக காலத்திற் புசிப்பித்துத் தொலைத்துத் தூய்மைப்படுத்தலாம். சோதனை - தூய்மை செய்தல், கன்மம் நசியவே, மாயையும் நீங்கும்; ஆணவத்தின் தடையும் ஒழியும். ஆன்மா ஆணவத்தோடு தனித்திருக்குங் கேவலமும், ஆணவத்தின் செய்தி எல்லாம் அறியுங் கேவல தரிசனமும், கேவலமிது வென்றறிந்து நீங்குங் கேவலாதீதமும் ஆகிய மூன்று அவதரமும் அத்துவ சோதனையுள் அடங்கும்.

6. அத்துவ சோதனை செய்யும் முறை = மந்திரம், பதம், வன்னம், புவனம், தத்துவம், கலை என்னும் அறுவகை அத்துவாக்களுள், மந்திரம் பதத்திலும், பதம் வன்னத்திலும், வன்னம் புவனத்திலும், புவனம் தத்துவத்திலும், தத்துவங் கலையிலும் அடங்க ஒடுக்கிக், கலையைத் திரோதான சத்தியிலுந் திரோதான சத்தியைச் சிவத்திலும் ஒடுக்குதலாம்.

''அத்துவா வெல்லா மடங்கச் சோதித்தபடிச்
சித்துருவாய் நின்றார் தெளிவறிவ தெந்நாளோ''

— தாயுமானவர்.

322 தன்னை யுணர்ந்து தனித்(து)இருள் நீக்கி
யாமாம் உலகம் அனைத்தினுஞ் சாட்சி
நாமே என்னு ஞானமுங் கடந்திட்(டு)
அண்ட பிண்டம் யாவுந் தோன்று(து)
உண்டெனும் உணர்வூ(டு) உறக்கமும் விட்டு
விசுவக் கிராசம் விறுப சாந்தம்
அசிபதங் குறிக்கும் ஆசையுந் தீர்த்து

**பொ - ரை:-** தூய உண்மை அறிவே (வடிவான சிவசொரூபமே) தன் சுத்த வடிவென உணர்ந்து, கருவி கரணங்கள் எவற்றுடனுங் கூடாது தனித்து, (அறியாமை என்னுஞ் சீவ உபாதியாகிய) இருளைக் கெடுத்துத் தன் இலட்சிய சீவதுரியமான அறிவு வடிவாகி, 'சடசித்து உலகமனைத் தினும் உள்ளும் புறமும் நாமே உள்ளோம்; (தூல சூக்கும காரண தேகங்களுக்கும்) நாம் வேறாகச் சீவசாட்சி மாத்திரமாயுள்ளோம்' என்னுஞ் சீவதுரிய உணர்வு நிலையையும் முற்றாகக் கடந்து (பரமாகி), காரண காரிய உபாதிகள் யாவுங் கழன்று, பரம்பொருள் ஒன்றே எங்கும் உண்டு என்னும் பேரறிவிலே அறிதுயில் கொள்ளுதலையுந் தவிர்ந்து, சிவசொப்பனம் சிவசுழுத்தி சிவதுரிய சொரூபநிலைகளை அடையக் கருதும் ஆசையும் ஒழிந்து எ-று.

**விளக்கம்:-** 1. தத்துவமசி மகாவாக்கியத்துத் துவம்பதம், உபாதி கழன்று சுத்தமாய் (சுத்த இலட்சிய சீவனாகி) தொந்தத்தசி என நிற்கும் (நீ அது ஆனாய் என்னும்) நிலையை வேதாந்த முறை கொண்டு விளக்குகின்றார்.

2. **தன்னை உணர்ந்து:-** தான் என்பது ஐம்பால் மூவிடங்களுக்கும் பொது. அது சொரூப சிவத்தைக் குறிக்கும். அச்சிவசொரூபமே சீவன் (பரன், சிவன்) ஆனது என்னும் உண்மையை உணர்ந்து. தனித்து - தேகாதி தத்துவங்கள் சடமெனக் கண்ட சித்தாகிய தான், அவற்றினின்றும் வேறுபட்டு. இந்த உணர்வு நிலையே ஆன்ம ரூபமாகும். •

3. **இருள் நீக்கி:-** இருள் - அறியாமை; அறியாமையைச் செய்வன தத்துவரூபம், உபாதித்தன்மை, அவத்தை நிலைகள், அபிமான நாமங்கள் முதலியன. இவற்றைக் குற்றமெனக்கண்டு, மூலப்பகுதி யான சீவசுழுத்தி அவத்தையிலிருந்து கழன்றதையே இருள்நீக்கி என்பதாற் குறித்தார். கருவி கரணங்கள் ஒடுங்கி, எதுவுந் தெரி யாமையாகிய (அறியாமையாகிய) இருளில் இருக்கும் நிலை சீவ சுழுத்தி. இந்தச் சீவசுழுத்தி, அறிவே வடிவான சீவதுரியத்தில்

அழியும். அச்சீவதுரியமே ஆன்மாவின் வடிவம். ஆன்ம தரிசனம், சிவரூபம், ஆன்மசுத்தி என்னும் மூன்று அவதரங்கள் இதில் அடங்கும்.

4 யாமாம் உலகம் அனைத்தினும்:- அறிவே வடிவான துரிய சீவன் முன், பின், மேல், கீழ் என்னும் பக்கவேறுபாடின்றி எங்குமாய்ப், பிரிவில்லாமல் எவற்றினுள்ளுந் தானாய் நின்று விளங்கும். அதுவுமன்றி இந்திரியங்கள் அனைத்துஞ் சராசரங்கள் அனைத்துந் தன்னிடத்திலே தோன்றி விளங்கி ஒடுங்கத், தான் மேலாய் அவை அனைத்திற்குங் காரணமாய் நிற்கும். இது ஞான தரிசனமாகும்.

5. சாட்சி நாமே:- சுத்த துரியசீவன், மூவகைத்தேக இந்திரிய கரணங்களுக்குந் தான் மேலாகி, அவற்றின் வேறெனத் தன்னைக் கண்டு, அவ்வுணர்வுடன் அவற்றிற்குச் சாட்சி மாத்திரமாய் விளங்கும். தேகத்தின் அகத்தேசுடுஞ் சொரூபநிட்டையால் வியட்டியான தேகாதி தத்துவங்களையும் அவற்றின் குணங்களையும் இது நாமன்று இது நாமன்று எனநீங்கியவிடத்து எஞ்சி நிற்குஞ் சேதனமே சீவசாட்சியாகும். ''சற்றுஞ் சந்தேகங் கொள்ளலை சாட்சிநீ'' - நற்சிந்தனை. இது கூடஸ்தன் எனவும்படும். சீவசாட்சி நிலையிலே தேகத்திற்குள்ளே இருக்கின்றேன் என்னும் மயக்க உணர்வு உண்டு. இது தொம்பத இலட்சியார்த்தம். தொம்பதத்து ஆன்மபோதம் பெற்றுச் சீவன்முத்தன் ஆகும்நிலை விளக்கப்பட்டது. சீவசாட்சி என்னும் ஞானமுங் கடந்த நிலையே ஞானாதீதமாகும்.

6. அண்டபிண்டம் யாவுந் தோன்றுது:- பிண்டம் - தேகம். ஈண்டு வியட்டியான தேகாதிகாரிய உபாதிக்குத்தான் சீவசாட்சியாயிருந்த சீவதுரிய சொரூபநிலையைக் குறித்தது. பிண்ட சொரூபத்தில் ஞானதரிசனமும் ஞானாதீதமும் நிகழும் என்பது (முன்னரும்) பெறப்பட்டது.

அண்டம் - உலகம். ஈண்டு சமட்டியான தேகாதிகாரண உபாதிக்குத்தான் பரசாட்சி (ஈசசாட்சி) யாக இருக்குஞ் சுத்த பரதுரிய சகச நிட்டையைக் குறித்தது. அகண்ட சகசநிட்டையால் பரை தரிசனம், பரையோகம், பரைபோகம் என்னும் அவத்தைகள் நிகழும். அகண்ட வெளியில் ஆன்மபோதங்கரைவதால் அண்ட பிண்டந் தோன்றுது யாவுஞ் சுத்த அறிவு மயமாகவே தோன்றும். 'அண்டபிண்டம் எல்லாம் அடக்கி ஒருவடிவாய் நின்றவன்,'

'அண்டபிண்டம் அடங்கலும் அதுவே' எனச் சிவயோகசுவாமிகள் விளக்கிப் பாடியுள்ளார்.

7. உண்டெனும் உணர்வு துரியபரம் பொருளையே சுட்டும். துரிய பரம்பொருளானது போக்குவரவற்று உள்ளும் புறமுந் தானுயுள் ளது; காலமுடிவு, தேசமுடிவு, வஸ்துமுடிவு என்னும் முடிவுகள் எதுவுமின்றி என்றும் ஒரே படித்தாய், பரிபூரண வியாபகமாய், எல்லாந்தானுய் விளங்குவது. "தேச கால வஸ்து பரிச்சேதங்கள் (முடிவுகள்) இல்லாமல் ஞானமய சொரூபமாயுள்ளது (பிரமம்)" என்று சுக்கில யசுர்வேத நிராலம்ப உபநிடதங் கூறுகின்றது. "உண்டோரொண்பொருள் என்றுணர்வார்" என்று மணிவாச கருங் கூறுகின்ருர். இத்துரிய பரம்பொருளே பரசாட்சி எனப்படு வது. 'பரம்பொருளே சமஸ்த சாட்சியாயுள்ளவர்' எனக் கைவல் லிய உபநிடதங் கூறுகின்றது. சுவேதா சுவதரம், பிரம்மோபநிட தங்களில் "தேவன் ஒருவனே சாட்சி" எனக் கூறப்பட்டுள்ளது. பரசாட்சி, புறத்தே எல்லோருடைய தூல சூக்கும காரண சமஷ்டி தேகங்களையும் இதுவன்று இதுவன்றுஎன நீங்குவதால் வருவது.

8. உண்டெனும் உணர்வூடு உறக்கம் என்பது பரம்பொருளுடன் தூங்காமல் தூங்கும் அறிதுயிலைக் குறித்தது. அவ்வுறக்கத்தையும் விடுதலைப் பராதீதப்படுதல் என்பர். உறக்கத்தை விட்டதற்குக் காரணம், தாமே எல்லாமாய் விளங்குவதாயும் பரசாட்சியாய் இருப்பதாயுங் கொண்ட வாசனுதோஷமும், ஆனுய் என்ற அசி பத சிவத்திற்குத் தான் மூன்று தேகமும் மூன்று அவத்தையுமாய் நிற்குந் தோஷமுமே என்க.

9. தத்'த சுத்தமான பரம்பொருளானது ஆனுய் என்னும் அசிபத சிவத்திற்குச் சாக்கிர அவத்தையாகும். விசுவம் என்னும் சகத்தை விழுங்கித் தான் சகசொரூபமாய் நின்ற சர்வபரிபூரணமான விசு வக்கிராசம் சிவசொப்பனமாகும். சிவசாக்கிரம் சிவசொப்பனத்தில் அழியும். விசுவக்கிராச சிவசொப்பனம் உபசாந்தம் என்னும் சிவ சுழுத்தியில் அழியும். விசுவக்கிராசம் சுத்தத்திற் சகலம்.

உபசாந்தம்:- உலகமனைத்துஞ் சராசரமனைத்துந் தன்வடிவே எனக்கண்டு விளங்கிய பரம்பொருள், எல்லாந் தன்மயமே என் பதையும் மறந்து, தன்னையும் மறந்து, தன்னையும் இறந்து சாந்த மானதே உபசாந்தம். உபசாந்தம் சுத்தத்திற் கேவலம்.

10. அசிபதங் குறிக்கும் ஆசை:- காரிய காரண உபாதி இரண்டுங் கழன்று, கழன்ருேமென்ற நினைவு வாசனையுமறத்தீர்ந்து, அகண்ட

பரிபூரணமாய் விளங்குவது அசிபதம். உபாதி, அவத்தை, விரிவு ஒடுக்கம் ஆகியவை இன்றி விளங்குஞ் சுவரூபத்தை அசிபதம் ஆக்கும். அவ்வாக்கத்தையே அசிபதங்குறிக்கும் ஆசை என்றார். அசிபத சுத்த சிவசொரூபம் அறிந்திடப்படாதது; அறிவுடையது; அளவிடப்படாதது. அது வாக்கு மனாதீதமாக விளங்கும். அந்த வாக்கு மனாதீதமான தற்பிரகாசமே மௌனமுத்திரை. மௌன முத்திரையையும் விட்டுச் சும்மா இருக்க அசிபதங்குறிக்கும் ஆசை தீரும். வேண்டத்தக்கது அறியும் முதன்மை அசிபத சிவத்திற் குண்டு. அதைவிடுத்து அம்முதன்மையைத் தன்மேல் ஏற்றி, அசி பதசிவமாகின்ற செயலில் ஆசைகொள்ளுதல் உய்தியில் குற்ற மாகும். ஆளுடைய அடிகள் "காயத்திடுவாய் உன்னுடைய கழற் கீழ் வைப்பாய் கண்ணுதலே," "என்னதோ இங்கு அதிகாரம்" என்றருளிச் செய்துள்ளார். சேக்கிழார் பெருமானும் "கூடும் அன்பி னிற் கும்பிடலேயன்றி வீடும் வேண்டா விறலின் விளங்கினார்" என இதனை விளக்கியுள்ளார். அசிபதம் சுத்தத்திற் சுத்தம்.

"ஆசை யறுமின்கள் ஆசையறுமின்கள்
ஈசனோ டாயினும் ஆசை யறுமின்கள்"

— திருமந்திரம் 2570

## சும்மா இருத்தல்

329. கால்புகா இடத்திற் கறங்காத் தீபமு
மேல்விசை தீர்ந்து வீழ்ந்தபம் பரமுஞ்
சித்திர வடிவுந் திரைதீர் புனலும்
ஒத்தவந் நிலைசார்ந்(து) ஒளியருள் நோக்கி
என்செய லேதும் இல்லையென்(று) எய்து
தன்செயல் நோக்கிச் சார்கென மொழிந்தான்

பொ-ரை:- காற்று நுழையாத இடத்திலே அசைந்து சுழலாமல் எரி யும் விளக்கையும், தொடர்ந்து ஆடுதலுக்கான விசை முற்றும் அற்று வீழ்ந்து கிடக்கும் பம்பரத்தையும், சித்திரத்தில் எழுதப்பெற்ற தீபத் தையும், அலைஓய்ந்த நீரையும் போன்ற (சித்தசலனம் அடங்கிய) நிலையினைப் பொருந்தி(ய அவதரத்தில் எவற்றையுஞ் செயற்படுத்தும்) அருளை விளக்கொளி முதலியவாகத் தியானித்து, அவ்வருளால் ஆன்மா வின் (மனவாக்குக் காயச்) செயல் ஒன்றுமில்லை; யாவும் (ஞேயமாகிய) சிவனருட் செயலே எனவுணர்ந்து, (அச்சிவச்செயலைத் தியானத்தினால்) சார்ந்து உணர்களென உபதேசித்தருளினான் எ-று.

**விளக்கம்:-** *1.* சிவரூபத்தைத்தரும் சிவஞான நிட்டை கூறப்படுகின்றது. சிவபோதம், ஆன்ம போதத்தைப் பற்றிப்பிடித்துத் தான் மேலிட்டுத், தன் ஒளி கலந்து தன் உருவமே தோற்றி மன வாக்குக்களால் எழுந்திருப்பினும் தன்வடிவாகவே எழுந்துற்றால் அல்லது காணஒண்ணாதது; அனுபவிப்பானும் அனுபவமும் ஒன்று போல நின்று தோன்றுமதுவே சிவரூபம். இது யோகத்தில் ஞான மாகும்.

> "பாசமா ஞானத் தாலும் படர்பசு ஞானத் தாலும்
> ஈசனை அறிய வொண்ணா திறையருள் ஞான நண்ணித்
> தேசுறு மதனுன் முன்னேச் சிற்றறி வொளிந்து சேர்ந்து
> நேசமோ டுயர்ப ரத்து ணிற்பது ஞான நிட்டை"

— சிவப்பிரகாசம் *84*

**2.** மனமானது தனது சங்கற்ப ரூபமென்னும் விடயாகாரங்களைப் பற்றாது, தற்போதச் சுட்டுணர்வற்று அசைவற நிற்குநிலையாய மௌன சமாதியை உவமைகள் விளக்கின. மனமடங்க யாவுமடங்கும். சித்த சுபாவத்தை விசையுற்ற பம்பர உவமை விளக்கியது. சித்திர தீபந் தேகத்தை அசைவற நிறுத்துதலையும் விளக்கியதாம். ஞாதுரு ஞானம் ஞேயம் என்னும் மூன்றில், ஞானம் ஞேயத்தால் எணக்காண ஞானம் நீங்கி, ஞேயமும் ஞாதுருவும் ஆகும். ஞேயச் செயலாய் நிற்கவே ஞாதுருவுஞ் சென்று சென்று அணுவாய்த் தேய்ந்து ஞேயமாம்.

**3.** அருளே பற்றுக்கோடாய் அருள்வசமாகித் துரிய நிலையில் ஒளிவடிவத்தியான நிட்டையில் அழுந்தில் உள்ளொளி தோன்றும். அதுவே சிவரூபம். பிரபஞ்சத்தையுந் தன்னையுங் கண்ட சீவபோதம் ஒழிந்து, சிவபோதமுஞ் சிவச்செயலும் நிகழும். தற்போதம் அடங்கவே 'என்செயலேதுமில்லை; எல்லாந் திருவருட்செயலே' என்னும் உணர்வு பிறந்து கன்ம ஒப்பு உண்டாகும்.

# 4. அநுபூதி

**335.** சும்மா இருக்கச் சொன்னதோர் வார்த்தை
அம்மா அதிசயம் ஆருடன் புகல்வேன்

**பொ-ரை:-** (கரணங்களும் ஆன்மாவுஞ் செயலற்று) ஞானநிட்டையிற் சும்மா இரு எனச் சொல்லாமற் சொல்லி அநுக்கிரகித்ததே (மௌன முத்திரையாகிய) ஒருவார்த்தையாகும். அந்த நிலையில் யான் கண்ட பேரதிசயந்தான் என்னே! அதை யார்க்கு எடுத்துரைப்பேன் எ-று.

விளக்கம்:- 1. அநுபூதி என்பது நேர்பட்டறிந்து அநுபவிக்கும் இன்பம். அநுபூதி சொல்வதற்கு அரியது; ஆயினும் ஆன்மாக்கள் உய்யவேண்டுமென்னுங் கருணையால் முனைப்பற்ற நிலையில் நின்று ஆசிரியர் கூறுகின்றார். சுத்த அநுபோகத்தைத் துய்த்தலாகிய இது மோனநிலையது. அதிதீவிர ஞானபக்குவர்க்கு உபதேசிக்கப்படுவதே சும்மா இருத்தலாகிய (சின்முத்திரை எனப்படும்) மௌன உபதேசம்.

''அதிபக் குவத்தோர்க்(கு) அனுக்கிரகஞ் செய்யும்
புதுமைக்குச் சாத்திரங்கள் போதா — அதுவென்னப்
பேறே யனந்த பிரகாரந் தந்தானும்
வேறே யனந்த விதம்'' — ஒழிவில் ஒடுக்கம்

2. சும்மா இருக்கும் எல்லை, முப்பத்தாறு தத்துவங்களுந் தற்போதமும் நீங்கித், தனக்கெனச் செயலின்றி, அருளே தாரகமாய் அவ்வருளேயாய் நிற்குந் துரியநிலை. சும்மா இரு என்பதன் தாற்பரியம், சத்தியத்தின் வழிவரும் அருட்சத்தி வழிநடத்திச் செல்லும் பொருட்டுத், தம்மை ஒரு சாதனமாகக் கருதி நிற்பதாகும். கிருஷ்ணயசுர்வேத அமிர்தபிந்தூபநிடதம், ''சத்தப்பிரமம், பரப்பிரமம் என இரண்டு உண்டு. வித்துவான் ஆத்மசாந்தியை இச்சித்தால், சத்தப்பிரமம் இலயமடைந்த பொழுது எந்த அட்சரம் மிஞ்சும் அந்த அட்சரத்தை (சிவத்தை)த் தியானிக்க வேண்டும்'', ''பரத்தை ஸ்வரமில்லாமற் பாவிக்க வேண்டும். அசுவரமாகிய அநுபவத்தாலே எவ்வித விஷய வாசனையுமற்று நிற்றலாகிய பாவனம் எனப்படுஞ் சிவமயந்தோன்றும்'' எனக் கூறுகின்றது.

3. ''மோனம் என்பது ஞானவரம்பு'' என்றார் ஔவையார். சும்மா இருக்கும் சுழுத்தி மோனமே முடிவான சிவஞானமாகும். சுழுத்தி மோனமாவது, சடசித்துப் பொருள்களனைத்துந் தனித்து நிற்பதற்கு ஆதாரம் சிவமே எனவும், அச்சிவபரம்பொருள் உள்ளும் புறமும் வியாபித்து நிற்பதால் அனைத்துப் பொருள்களுஞ் சிவமே எனவுங் கண்டு, கண்டோமென்னும் போதமும் இழந்து நிற்குந் துரிய ஞானநிட்டையாகிய அருள்நிலை.

''அறிவாக நின்றநிலையிற் சிந்தையற நில்லென்று சும்மா விருத்தி'' என்றார் தாயுமானவர். அருணகிரிநாதரும் ''ஒரு பூதரு மறியாத் தனிவீட்டில் உரை உணர்வற்றிரு'' (கந். அலங். 45)
என்றும் ''சும்மா இருசொல் லறவென் றலுமே
அம்மா பொருளொன் றுமறிந் திலனே''
என்றும் அருளிச்செய்துள்ளார். (கந்தரநுபூதி 12)

4. ஒரு வார்த்தை:- ஒரு மொழியாகிய சின்முத்திரை; மௌன முத்திரை. உபதேசப் பொருளைக் குறிப்பாலுணர்த்தும் ஞானக்குறி. வாயால் வெளிப்படச் சொல்லாது சின்முத்திரைக் குறிப்பால் உணர்த்தியதையே 'சொன்னது' என்றார். "வெளிப்படை குறிப்பின் விரிப்பது சொல்லே" என்பது இலக்கணம். "ஓர் வார்த்தை உட்படுத்துப் பற்றினாய்" என்றார் மாணிக்கவாசகர். பட்டினத்தடிகளும்,

"வெட்டாத சக்கரம் பேசாத மந்திரம் மேலொருவர்க்
கெட்டாத புட்பம் இறையாத தீர்த்தம் இனிமுடிந்து
கட்டாத லிங்கம் கருதாத நெஞ்சங் கருத்தினுள்ளே
முட்டாத பூசையன் றேகுரு நாதன் மொழிந்ததுவே"

என்று பாடியுள்ளார்.

5. குரு சொல்லாமற் சொல்லுதல்:-

"கல்லாலின் புடையமர்ந்து நான்மறையா றங்கமுதற் கற்ற கேள்வி
வல்லார்கள் நால்வருக்கும் வாக்கிறந்த பூரணமாய் மறைக்கப் பாலாய்
எல்லாமாய் அல்லவுமாய் இருந்ததனை இருந்தபடி இருந்து காட்டிச்
சொல்லாமற் சொன்னவரை நினையாமல் நினைந்துபவத் தொடக்கை வெல்வாம்"

— திருவிளையாடற்புராணம்

6. அதிசயம்:- முன் அனுபவியாத ஒன்றை அனுபவித்தலால் உண்டாகும் வியப்பு. இது பெருமிதமும் இன்பமுங் கலந்தநேரார் உள்ள நிகழ்ச்சி இன்னதென்றறிந்து அனுபவிக்கப்பெறும். அருளொளி விளக்கத்தாலாகிய பேரின்பத்தை அனுபவித்து அறிந்து, அப்புதிய அனுபவத்தை இந்த மண்ணுலக வாழ்விலே தமக்கு இருந்த பழைய அனுபவநிலையோடு ஒப்பிட்டுப்பார்த்து வியப்படைந்தது. வாதவூரடிகளும் "அதிசயங் கண்டாமே" என்றருளியுள்ளார்.

"கற்பகத்தின் பூங்கொம்போ காமன்றன் பெருவாழ்வோ
பொற்புடைய புண்ணியத்தின் புண்ணியமோ புயல்சுமந்து
விற்குவளை பவளமலர் மதிபூத்த விரைக்கொடியோ
அற்புதமோ சிவனருளோ அறியேனென் றதிசயித்தார்.

— திருத்தொண்டர் புராணம்

அத்துவாக்கள் ஆறையுங் கடந்த இடத்துப் பரம்பொருள் விளங்கித் தோன்றும். தோன்றினும் இதுகாறுங் கண்டறிந்த பொருள்

கள் ஒன்றனோடும் உவமித்தறிதல் கூடாது. கூடாமையின் ''யாவையும் சூனியம் சத்தெதிர்'' ஆதலின் சூனியமேஎன எண்ணவரும். வரினும் சூனியமாயின் இன்பந்தருதலில்லை. இஃது இன்பந்தருதலாற் சூனியமன்றென எண்ணவரும். வரவே சிவபரம்பொருளாகிய சோதியே அஃது எனத்தேறி அச்சுயஞ்சோதியை அநுபவித்தலால் உண்டாவது அதிசயம்.

7. ஆருடன் புகல்வேன் - திருவருள் உள்நின்று உணர்த்த உணர்ந்த அநுபவத்தை யாருக்கு எடுத்துச் சொல்லுவேன். ஆன்மபோத ஒழிவில் உண்டாகும் அநுபவம் சொல்லொணுதது என்றவாறு.

337. கரைசேர்த்(து) அருள்வான் கருணையை நோக்கி
இரைதேர் கொக்கொத்(து) ஏசற இருந்தேன்

பொ-ரை:- முத்திக்கரையைச் சேர்த்தருளும் இறைவனது திருவருளை எதிர்பார்த்து இரையினைத் தேடுகின்ற கொக்கினைப்போல விருப்பத்தோடு இருந்தேன் எ-று.

விளக்கம்:- 1. கரை என்றது பிறவிப் பெருங்கடலின் கரையாகிய முத்தியை. ''முதலந்தமில்லா மல்லற்கரை'' என்பது திருவாசகம். கரைசேர்த்தல் என்றது முத்தியடையச் செய்தலை. கரைசேர்த்தருள்வான் சிவபெருமான். அருள் வான்கருணை எனக் கொண்டு உரைக்கினுமாம். ''வான்கருணைத்தேன்'' எனத் திருவாசகத்தில் வருதலுங் காண்க.

2. கருணை - திருவருள்; நோக்கி - எதிர்பார்த்து; தேர்தல்-தேடுதல்; ஏசறவு - விருப்பம். ''தாமுற்ற ஏசறவைத் தோழியர்முன் பேசுவார்'' — (11-ஆந்திருமுறை)

3. இரைதேர் கொக்கு ஒத்து இருந்தேன் என்றது, தனக்குரிய இரையைக் கருதித் தேடுங் கொக்கினைப்போல வீடுபேற்றினையே கருதிப் பொறிபுலன் முதலிய யாவும் ஒடுங்கியிருந்தேன் என்பதை உணர்த்திற்று. ''உன் அருள்நோக்கி இரைதேர் கொக்கொத்து இரவு பகல் ஏசற்றிருந்தே வேசற்றேன்'' — திருவாசகம்.

339. என்செயல் அகன்றேன் யானற ஈசன்
தன்செயல் நடக்குந் தன்மையுங் கண்டேன்.

பொ-ரை:- (அருளால் நடத்தப்படும்) எவ்வகைச் செயலையும் என் கரணங்களாற் செய்யப்பட்டதுஎன எண்ணும் ஆன்ம சுபாபத்தையும்

(அருளால்) விட்டு நீங்கினேன்; (நீங்கிய என்னையும் அருளிலே கொடுத்து) எனது பசுபோதமும் அருளே தாரகமாகச் சும்மா இருந்த அப்பொழுதே (ஈசன் என்னைத் தன் வியாபகத்துள் அடக்கி) என்செயல் யாவும் இறைபணியாக நடக்கும் இயல்பையும் நோக்கினேன் எ-று.

**விளக்கம்:-** 1. இஃது யான் என்னும் மயக்க உணர்வு தோன்றாது, சிவத்துடன் ஒன்றாக இருக்கும் நிலையில், எனது எனப்படும் உடலின் வாசனையும் அழியுஞ் சாக்கிராதீத நிலையை உணர்த்துகின்றது. இறைபணி நின்று யானெனப்படும் (மயக்க உணர்விற்கு ஏதுவாகிய) மலவாசனை தோன்றாது சிவத்தோடு ஏகனாகி நிற்க, மாயைகன்மங்களின் வாசனையும் நீங்கும்.

2. என்செயல் அகன்றேன்:- சிவஞானம் அறிவுக்கறிவாய் நின்று அறிவிக்க ஆன்மா அறிகின்ற முறைமையை அறிந்து, எல்லாந் திருவருட் செயலேயன்றி நம் முக்கரணச் செயலன்று என்ற நினைப்பில் நிலைத்துத், திருவருளில் அழுந்த அழுந்தச் சீவபோதம் அறும். நாமும் அருள் வயத்தவராவோம். நமது மனம் வாக்குக் காயங்களாற் செய்யுஞ் செயலும் அருளின் ஏவலாகவே நிகழுமன்றி நம் வயத்ததாக நிகழாது. தன்செயல் அற்ற இடத்து ஞானசத்தி பிரகாசமாகும். தன்செயலற்ற இடம் (அருள்நிலை) ஞான நிலை துரியநிலை.

> பெத்தத்துத் தன்பணி யில்லைப் பிறத்தலால்
> முத்தத்துத் தன்பணி யில்லை முறைமையால்
> அத்தர்க் கிரண்டு மருளா லளித்தலால்
> பத்திப்பட் டோர்க்குப் பணியொன்று மில்லையே.
>
> — திருமந்திரம்

2. யான்அற:- மலம்நீங்கி ஆன்மா அருள்வசம் ஆகும்பொழுது சிவச்சார்பாய்ச் சீவகரணஞ் சிவகரணமாகும். சீவபோதமும் ஆங்காரம் அடங்கி முனைப்பற்று, ஆன்மசுத்தி பெற்று, வியாபகத்தன்மையடைந்து சிவபோத வழியே செல்லும். சிவவியாபகத்துள்ளே சீவன் ஒடுங்கி அடங்கும்; யானென்றது பசுபோதத்தை. நான் அற்ற இடம் (ஆனந்த நிலை) மோன நிலை; துரியாதீத நிலை.

3. ஈசன் தன்செயல்:- சிவசக்தி செலுத்தியவாறு செயலெல்லாம் நிகழும். பேய் பிடியுண்டார் பெற்றிபோலச் சிவவியாபகத்துட்பட்ட சீவன்செயல் சிவன்செயலாகும். ''நன்றே செய்வாய் பிழை செய்வாய் நானோ இதற்கு நாயகமே'', ''என்னதோ இங்கு அதிகாரம்'' என்ற மணிவாசகர் கூற்றுக்கிணங்க நாம் செய்கின்றோம்

என்ற முனைப்பும் அறும். வித்தியாதத்துவத்தினூடாக ஈசனருள் தொழிற்படுவதையே ஈசன் தன்செயல் நடக்குந்தன்மை என்றார்.

> நஞ்செய லற்றிந்த நாமற்ற பின்நாதன்
> தன்செயல் தானேயென் றுந்தீபற
> தன்னையே தந்தானென் றுந்தீபற — திருவுந்தியார் 6

அருணகிரிநாதர் ஈசன் தன்செயல் நடக்குந் தன்மையை (யான்) "நீயான ஞான விநோதம்" (கந். அல. 46) என்றருளிச் செய்துள்ளார்.

4. கண்டேன் என்பது அநுபவத்திற் கண்ட காட்சியுணர்வு. இது தெளிவுக் காட்சி; யான்என ஒருமுதல் காணப்படாது முதல்வனது திருவடி வியாபகத்துள் அடங்கித் தூலசித்தும் (உயிரும்) சூக்குமசித்தும் (சிவமும்) அத்துவிதமாய்க் கலந்து நிற்கும்நிலை. மனம் ஒடுங்க ஒடுங்கப் பலவித காட்சிகள் தோன்றும்.

**341.** ஆத்து மிகத்தோ(டு) அடைதரு பௌதிகம்
போற்றுதெய் விகமிவை புரிவதுங் கண்டேன்

**பொ - ரை:-** ஆத்துமிகத்துடன் (வினைக்கீடாக) வந்தடையும் பௌதிகத்தையும், (உயிரைக்) காக்குந் தெய்விகத்தையுங் கண்டேன்; (இதே பெயரையுடைய) ஆத்துமிகம் பௌதிகம் தெய்விகம் ஆகிய மூன்று வாயில்களாக விளங்கி உயிர்களுக்கு வினைப்பயன்களை அனுபவிக்கச் செய்யும் முறைமையையுங் கண்டேன் எ-று.

**விளக்கம்:-** 1. உயிர்கள் அனைத்திற்கும் ஆதிபௌதிகம், ஆதி தெய்விகம், ஆத்தி ஆன்மிகம் என மூன்று நிலைக்களங்களுண்டு. அவற்றுள் ஆதி பௌதிகமாவது, பூதகாரியமான உடல்; ஆதி தெய்விகமாவது உயிரை அதிட்டித்து நிற்குந் தெய்வ சம்பந்தமான மந்திர சொரூபம்; ஆத்தி ஆன்மிகமாவது அம்மந்திரத்தை அதிட்டித்து நிற்குஞ் சிவசக்தி.

2. பௌதிகமாகிய உடல் வினைக்கேற்பத் தரப்பட்டு வந்தடைதலின் அடைதரு பௌதிகம் என்றார். தெய்விகமாகிய மந்திரம் நினைப்பவரை (துன்பங்கள் போக்கிப் பாவங்கெடுத்து, தெய்வத்தன்மை தந்து) பாதுகாப்பது ஆதலின் போற்று தெய்விகம் என்றார்.

3. இவை புரிவதுங் கண்டேன்:- இவை என்றது ஆதி பௌதிகம், ஆதி தெய்விகம், ஆத்தி ஆன்மிகம் என்னும் வினைப்பயன்களை

அநுபவிக்கச் செய்யும் வாயில்களை. வாயில்களும் நிலைக்களங்களும் வெவ்வேறானவை. பெயரொற்றுமை கருதி இவையெனச் சுட்டினர். இவற்றுள்ளே பஞ்சபூதங்கள் வாயிலாக வருவது ஆதி பௌதிகம். உ+ம்:- குளிர், வெப்பம், மழை, காற்று, மின்னல், இடி முதலியவற்றால் வருந்துக்கம். தெய்வந்தானே காரணமாக வருவது ஆதிதெய்விகம். உ+ம்:- நரை, திரை, மூப்பு, பிணி, இயம தண்டனை, நரகவேதனை முதலியவற்றால் வருந்துக்கம். உயிர் வர்க்கங்கள் வாயிலாக வருவது ஆத்தி ஆன்மிகம். உ+ம்:- திருடர், பாம்பு முதலியவற்றால் வருந்துக்கம். இம் மூன்றும் தாபத்திரயங்கள் எனப்படும். தியான சமாதி அடைந்தவர்களுக்குத் தாபத்திரயங்களில்லை.

343. புலக்கணக் கதவு பூட்டினேன் சிந்தை
அலக்கண் தீர்ந்த அறிவையுங் கண்டேன்

பொ-ரை:- (இருகண், இருசெவி, நாசியின் இருதுளை, வாய், எருவாய், கருவாய் என்னும் ஒன்பது வாயில்களுக்குமுரிய) ஐம்புலக் கதவை (உபதேச மந்திரப் பொருளால்) அடைத்தேன். அடைத்தமையாற் புறவிடயத் தாக்கங்களால் உண்டாகுஞ் சித்த விகற்பமற்ற (பாசங்கழன்ற ஒளியுடைய) அறிவுமயமாகிய என்னைத் திருவருளாலே கண்டேன் எ-று.

விளக்கம்:- 1. புலக்கணம் என்னவே ஐம்பொறிகளும் மனமும் அவற்றுள் அடங்கும். ஐம்புலன்களின் கூட்டம் புலக்கணம் ஆகும். புறவிடயங்களிலே மனம் போக்கு வரவு புரிவதற்கு ஐம்புலன்கள் வாயில்கள் ஆகும். இந்திரிய வாயில்களை இறுகப்புதைத்து ஐம்புலனையும் அவித்து அகத்து அடக்குதலே புலக்கணக் கதவு பூட்டுதலாகும். ''ஒன்பது வாயில் ஒரு மந்திரத்தால் ஐம்புலக்கதவை அடைப்பதுங் காட்டி'' என்பது விநாயகர் அகவல்.

2. சிந்தை அலக்கண் விடயத் தாக்கங்களால் வருவது, சித்தை அலக்கண் உள்ள அறிவு, பூதமும், பொறியும், புகழ்குண மூன்றும் வாதனை செய்யும் அறிவு. பாசஞானந் தடைப்படவே பசுஞானங் காணப்படும். அதில் ஆணவமலம் நீங்க, அறிவு சுத்தநிலையடையும். கல்வியால், போதத்தால், காலத்தால், சீலத்தால் அன்றி எவற்றையும் சிவனேவலாக அறிவது சுத்த அறிவு. சுத்த நிலையில் ஆன்மா ஒளியுள்ள அறிவாகத் தன்னைக் காணும். ஆன்மாவின் நிச சொரூபமிது. இதுவே சைதன்னிய தரிசனம். சித்தமலமறுத்தல் திருவருளால் நிகழும். ''ஒண்போத நீ என்றுணர்'' என்பது துகளறு போதம் (32). மெல்ல மெல்ல மனக்கவலைதீர ஒளி தோற்ற

மாகும். மனக்கவலையற்ற நிலையிலே தோன்றும் ஒளியே ஞான தரிசனமாகும். ''ஞானச் சுடர் விளக்காய் நின்றாய் நீயே'' என்பது தேவாரம்.

3. பாசப்பழக்கத்தை விட்டுத் திருவருளோடு பழகினால் இந்தநிலை கைகூடும்.

பழக்கந் தவிரப் பழகுவ தன்றி
உழப்புவ தென்பெணே உந்தீபற
ஒருபொரு ளாலேயென் றுந்தீபற

— திருவுந்தியார் 2.

**345.** பொறிபுலன் கரணம் பொருந்திடுங் கலாதி
அறிகரு விகள்போய் அடங்கிடங் கண்டேன்

**பொ-ரை:-** ஆன்மா, சத்தம் ஆதிய விடயங்களை ஞானேந்திரியங்களால் அறிந்து, கன்மேந்திரியங்களாற் பற்றி, மனம் ஆதி அந்தக்கரணங்களால் அவற்றில் அழுந்தும் வண்ணம் இயக்குகின்ற கலையாதி அறிகருவிகள் ஒடுங்கும் இடத்தையுந் திருவருளாற் கண்டேன் எ-று.

**விளக்கம்:-** 1. பொறி என்றது ஞானேந்திரிய கன்மேந்திரியங்களை. புலன் என்றது சத்தாதி விடயங்களை. ஆன்மா ஒரு விடயத்தை அறியும்பொழுது (ஐம்பொறிகளுள் ஒன்றும், ஐம்பூதங்களில் ஒன்றும், அந்தக்கரணங்கள் நான்கும், கலாதிகள் ஐந்தும் ஆகிய) பதினொரு கருவிகளைப் பொருந்தும் (அடி 285 - 5 பார்). ஆதலின் அவை அறிகருவிகள் எனப்பட்டன.

2. ஆன்மாவுக்குப் போக நுகர்ச்சியைச் செய்யுங் கிரமம் பிரவிருத்திக் கிரமம் எனப்படும். பிரவிருத்திக் கிரமத்திற்குக் கலாதத்துவம் முதலில் வேண்டப்படும். அதனாலேதான் வித்தியாதத்துவத்தில் கலாதத்துவத்தை முதலாக வைத்து எண்ணப்படும் வழக்கம் வந்தது. காலம் முதலாக வைத்து எண்ணப்படுவது சிருட்டிக் கிரமம்.

3. கலாதி தத்துவங்கள் இயங்கும் முறை:- காரிய மாயா தத்துவம் சித்தத்தை இயக்கும். கலா தத்துவம் அகந்தையை இயக்கும். வித்தியா தத்துவம் புத்தியை இயக்கும். அராக தத்துவம் மனத்தை இயக்கும். இவ்வாறு இயக்கப்பட்ட மனதத்துவம் ஞானேந்திரியங்களில் ஒன்றைச் சார்ந்து அதற்கான ஐம்பூதங்களில் ஒன்றைத் துணையாகக் கொண்டு வசனாதி தொழில்கள் ஐந்தில் அந்தக் கன்மேந்திரியத்திற்கு ஏற்ற தொழிலைச் செய்யும்.

4. தனு கரண புவன போகங்களாக விரிந்தவை ஒடுங்கும் பொழுது தனு புவன போகம் மூன்றும் பூதங்களில் ஒடுங்கும். பூதம், தன் மாத்திரையில் ஒடுங்கும். தன்மாத்திரை, பூதாதி அகங்காரத்தில் ஒடுங்கும். ஞானேந்திரியங்களும் மனமும், தைசத அகங்காரத்தில் ஒடுங்கும். கன்மேந்திரியங்கள், வைகாரிக அகங்காரத்தில் ஒடுங்கும். அகங்காரம் புத்தியிலும், புத்தி அவ்வியத்திலும், அவ்வியத்தம் பிரகிருதியிலும் ஒடுங்கும். ஆன்ம தத்துவம் இவ்வாறே பிரகிருதி யில் ஒடுங்கும். பிரகிருதி அராகம் வித்தை மூன்றும் கலையிலும், கலை நியதி காலம் மூன்றும் மாயையிலும் ஒடுங்கும். இவ்வாறுக வித்தியாதத்துவம் மாயையிலே ஒடுங்கும். இதுவே ஒடுங்கும் முறை யாகும். (இம் முப்பத்தொரு தத்துவங்களையும் சுத்த வித்தை யிலும், அதை ஈசுவரத்திலும், அதைச் சதாசிவத்திலும், அதைச் சத்தியிலும், அதைச் சிவத்திலுங் கிரமமாக ஒடுக்கிச் சிவதத்துவத் தையுங் கலப்பற்ற விந்துவில் ஒடுக்குவர்.) இது சித்தாந்தபரம். ஈசுவரனுடைய சூக்கும தேகமான இரணிய கர்ப்பத்தில் அறிகருவி கள் சூக்கும்மாய் அடங்குமென்பது வேதாந்தபரம்.

347. தாழுமென் இழப்பில் தயங்குறு விளக்கிற்
சூழுறும் ஒளிபோல் துலங்குதல் கண்டேன்

**பொ-ரை:-** தியானத்திலே செயலற்று உறைப்பாய் அமிழ்ந்திய பொழுது (போத இழப்பின் பொழுது) எரியும் விளக்கிற் சூழ்ந்து பிர காசிக்கும் ஒளிபோன்று, ஞானஒளி விளங்கித் தோன்றுதலையும் (திரு வருளாற்) கண்டேன் எ-று.

**விளக்கம்:-** 1. நாசி நுனி, புருவமத்தியில் ஒளிகளை - சூனியத்தை - விந்து நாதத்தைத் தியானித்து, அவற்றின் வடிவாகிச் சித்தமும் பிராணவாயுவும் அடங்க, அவை தாமே அறிவுமாய், அவ்வுண்மை யில் ஒன்றுபட்டதாகக் கண்டுகொண்டு நிற்குந் தன்மை பெறு தல் சிவயோகத்தில் ஞானமாகும். ஒளிகளாவன விளக்கொளி, மின்னொளி, விந்துஒளி, உள்ளொளி என்பனவாம்.

2. தாழும் என் இழப்பு:- இந்திரியங்களையுங் கரணங்களையும் ஆன்மா நீக்கமற நின்று அறியச் செய்வதுபோல, அறிவிக்க அறியும் ஆன்மபோதத்தைச் சிவபோதம் நீங்காமல் நின்று அறிவிக்கும். இதனுள் நம்முடைய செயலின்மை தெளிவாகின்றது. அறிவுக்கு அறிவாய் நின்று நம்முடைய அறிவை நாம் அறிய அறிவிப்பது சிவஞானமே எனக்கண்டு, அந்தச் சிவஞானத்தையே ஆதாரமாகக் கொண்டு, அதனோடு பிரிப்பின்றிக் கலக்கும் அவதரமே என் இழப்

பில் தங்குதலாகும். தாழுதல் - தங்குதல். என் இழப்பு என்றது செயலறுதலை.

3. விளக்கிற் சூழ் ஒளிபோல்... கண்டேன்:- விளக்கொளியைத் தியானித்து அவ்வடிவாகி அதிலொன்றுபட ஞானசத்தியின் பிர காசந் தோன்றும். இது பாசங்கலவாத ஞானஒளி. இதுவே ஞான தரிசனம். இது பரமுத்தி தருவது. ஏனைய கலைஞானம், வேதசாத் திர ஞானம், அசபை, விந்து, நாதம், ஆதாரம், பிராசாதம், உலோகத்தால் உண்டாகும் ஒளிகள் யாவும் பாசம் நீங்காதவை. அவை பதமுத்தி தருவன. யோக சிகோபநிடதம், ''ஆன்ம தத்து வத்தை அகத்துப் பயில்கின்ற யோகிக்குந் தவச்சுடர் சந்திரன், ஆகாயத் தோற்றம், மின்னல், நட்சத்திரம் முதலிய ஒளிகள் நுண் ணிய உறுப்புடன் அகத்துக் காணப்பெறுகின்றன.'' (2 - 18, 19) எனக் கூறுகின்றது.

''மாயைம்மா மாயை மாயா வருமிரு வினையின் வாய்மை
யாயவா ருயிரின் மேவு மருளினி லொளியாய் நிற்கும்''

— (சிவப்பிரகாசம் 70)

எனவருதலுங் காண்க.

4. பாசஞானம் பசுஞானங்களை அறவே களைந்து, பதிஞானம் ஒன்றி லேயே ஒன்றி, உள்ளே ஊன்றிப்பார்க்கும் நிலையைத் திருமூலரும் ஞானோதயத்தில்,

''விளக்கைப் பிளந்து விளக்கினை ஏற்றி
விளக்கினுக் குள்ளே விளக்கினைத் தூண்டி
விளக்கில் விளக்கை விளக்கவல் லார்க்கு
விளக்குடை யான்கழல் மேவலு மாமே'' என்றருளியுள்ளார்.

படிமுறையாக அநுபவக் காட்சிகள் இதனைத் தொடர்ந்து வரு தல் காண்க.

**349.** பஞ்ச வருணப் படாம்விரித் ததுபோல்
விஞ்சுபல் சோதி விளங்கிடக் கண்டேன்
சித்திர படத்திற் சேர்பல வடிவம்
ஒத்த அநேகம் ஒளிக்குளே கண்டேன்
பஞ்சமூர்த் திகளும் பஞ்சசத் திகளும்
விஞ்சைபோல் ஒளிக்குள் வெளிப்படக் கண்டேன்

பொ-ரை:- ஞானசத்தி சுத்தமாயையிற் பொருந்தி வியாபரித்தலால் அது விரிந்து, ஐந்து நிறங்கள் கொண்ட திரைச்சீலையை விரித்தாற்

போல அளவு கடந்த பலநிற ஒளிகள் பிரகாசித்திடத் தியானக் காட்சியிற் கண்டேன். சித்திரம் எழுதப்பட்ட சேலையிற் காணப்படும் உருவங்கள் போன்ற பல உருவங்கள் சுத்த மாயையிற் பொருந்திய அந்த ஞானஒளியினூடே விளங்குவதையுங் கண்டேன். படைப்பாதி ஐந்தொழிற்குங் காரணமூர்த்திகளாகிய ஐவரும், அவர்களுக்குரிய சக்திகள் ஐவரும் மாயவித்தைபோல அந்த ஞானஒளிக்குள்ளே வெளிப்படையாகத் தோன்றக்கண்டேன்" எ-று.

விளக்கம்:- 1. சுத்தமாயையின் சொரூபம், படம்போல எங்கும் அநேகபேதமாய் விரிதலாம். மெய்ஞ்ஞானத்தாற் சுத்தமாயை விரிந்து ஞானத்திற்கு இடமாய் நிற்கும். சுத்தமாயையின் உருவம் ஓங்காரம்போல் எல்லாவற்றையும் அடக்கி நிற்பது. சுத்தமாயை பிரணவம் முதல் 31 பேதங்களாக விரியும். பிரணவத்துள் ஐந்து நிறமுள்ள திருவைந்தெழுத்து உள்ளொளியாய் ஒளிரும். திருவைந்தெழுத்தின் நிறங்களாவன (நகாரம்) வெண்மை, (மகாரம்) கருமை, (சிகாரம்) செம்மை, (வகாரம்) புகைமை, (யகாரம்) நீலம் என்பனவாம்.

2. சுத்தமாயையின் விசேடம் (சகளம், நிட்களம், சகளநிட்களமாகிய) சத்தி வடிவுக்கும், சிவவடிவுக்கும் இடமாதல். பஞ்சமூர்த்திகள் பிரமா, விட்டுணு, உருத்திரன், மகேசுவரன், சதாசிவன் என்பவர்கள். இவர்கள் சொரூப சிவத்தின் ஞானப்பண்பினர். பஞ்சசத்திகள் சரசுவதி, இலக்குமி, உமை, மகேசுவரி, மனோன்மணி. இவர்கள் சொரூப சிவத்தின் ஆற்றற் பண்பினர். இவர்கள் சம்புபட்சத்தைச் சேர்ந்தவர்கள். பஞ்சமூர்த்திகளும் பஞ்சசத்திகளும் சாதாக்கியம், ஈசுரம், சுத்தவித்தை என்னும் தத்துவங்களை இடமாகக் கொண்டிருப்பர். சிவன் ஐந்தொழிலையுந் தன்மை முன்னிலை படர்க்கை என்னும் முறையிலே நடத்தியருளுவார். படம் - சீலை. அது படாம் என நின்றது (படாம் - திரைச்சீலை). விஞ்சை - மாயவித்தை.

3. கிரியா சத்தியின்* வியாபகம் அநேகவடிவமாதல். 1, 3, 5, 7, 9, 11, 16, 25, 38 வடிவுகளாகும். இங்குக் கூறப்பட்ட வடிவங்கள் சுத்தமாயையின் கீழ்ப்பாகத்தை இடமாகக் கொண்ட வேதமூர்த்திகள், ஞானமூர்த்திகள், அட்டவித்தியேசுரர், சத்தகோடி மந்திரர், சதாசிவர் முதலிய மந்திரநாயகர், 128 உருத்திரர், புவனேசர், 118 பதமூர்த்திகளாவர். சுத்தமாயை இவர்களுக்குத் தனுகரணாதிகளாகும். சுத்தமாயையின் நிறம் பளிங்கு போன்ற நல்லொளி. ஆதலினாலேதான் பல்சோதியாய் முதலில் ஒளியாயும்,

அதன் பின்னரே வடிவமாயும் புலப்பட்டன. இவர்கள் அணுபட்சத்தவர்கள். நவந்தரூபேத சம்புபட்சம், அணுபட்சத்தை அதிட்டித்து நின்று இயக்கும்.

355. மண்நெடுங் கடம்போல் வரைமா திரங்கள்
எண்ணில் புவனமும் என்னுளே கண்டேன்
எழுவகைத் தோற்றத்(து) இயைந்தபல் லுயிரும்
வழுவறச் சோதி வானிடைக் கண்டேன்
தன்னுளே சகமுஞ் சகத்துளே யானும்
பின்னமற்(று) இருக்கும் பெற்றியுங் கண்டேன்

**பொ-ரை:-** முதற்காரணமாகிய மண்ணும் அதன்காரியமாகுங் குடமும்போல நித்திய காரணப் பிரபஞ்சமாகிய மாயையையும், தோன்றி நின்று ஒடுங்குஞ் சட காரியப்பிரபஞ்ச மலைகளையும் திசைகளையும் என்னுள்ளே கண்டேன்; எழுவகைப்பட்ட பிறப்பினைப் பொருந்தியுள்ள (சித்துப்பிரபஞ்சமான) பல உயிர்களையுங் குறைவின்றி ஞானஒளியின் வியாபக வெளியிலே கண்டேன்; சொரூபசிவ வியாபகமாகிய அகண்டாகாய வெளியினுள்ளே பிரபஞ்சமும், அப்பிரபஞ்சத்தினுள்ளே (அணுவுக்கும் அணுவாக எங்குமுள்ள சிதாகாயமாகிய) யானும் (எங்கும் வியாபகமாய் அவற்றோடு கலந்து உள்ளும் புறமும்) பிரிப்பின்றி இருக்குந் தன்மையையுங் கண்டேன் எ-று.

**விளக்கம்:-** 1. எல்லாந் தன்னிடத்ததாகத் தான் எங்குஞ் செல்ல இயற்றுகையாகிய சூனியத்தைத் தியானித்த அநுபவம் இப்பகுதியில் விளக்கப்படுகின்றது.

2. முதற்காரணமான மண்ணும் அதன் காரியமான குடமும்போல், காரண தன்மாத்திரையுங் காரியமான மலையாதிகளும் அமைந்திருக்கின்றன. காரிய உருவமான மலையாதிய எல்லாங் காரண தன்மாத்திரை உருவில் என்னுள் அமைந்திருப்பதைத் தியானக்காட்சியிற் கண்டேன். மண், சடமாயும் ஒன்றாயுமுள்ள நித்தியப் பொருள் என்பதற்கு எடுத்துக்காட்டு. கடம், சடமாயும் பலவாயுந் தோன்றி நின்று ஒடுங்கும் அநித்தியப்பொருள் என்பதற்கு எடுத்துக்காட்டு. வரைமாதிரங்கள் என்பதை மாதிர வரைகள் எனக்கூட்டி அட்டதிக்கு எல்லைகள் எனவுங் கொள்ளலாம். ஆலமரம் ஆலம்வித்துள் அடங்கியிருப்பதுபோல இருதய தகராகாசத்திற் பிரபஞ்சத்தில் இருக்கும் அனைத்தும் அடங்கியிருக்கும். காரணத்திலுள்ளதே காரியத்திலே தோற்றமாகும் என்னுஞ் சற்காரிய வாதத்தை உணர்த்தியதூஉமாம்.

3. உயிர்கள் நால்வகைத் தோற்றம் எழுவகைப்பிறப்பு எண்பத்து நான்குநூறுயிர யோனி பேதத்தையுடையனவென்பதைப் பல் லுயிர் என்பதாற் குறித்தார். உயிர் என்பதில் இர் விகுதி. சடசித்தாகிய இருவகைப் பிரபஞ்சத்திற்கும் சிரேட்டமான கார ணங்காட்டினார். ஞானசோதியின் வியாபகவெளியைச் சோதிவான் என்றார். ''விண்போல் விரிவு மேலோர்க்குண்டு'' என்று சிவயோக சுவாமிகள் கூறியுள்ளார். தாங்கண்ட அநுபவத்தை,

''அண்ட சராசர மெல்லாம் - சிவசிவ; அகத்திலே கண்டு
தரிசித்துக் கொண்டேன்
முண்டக மலர்ப்பதங் கண்டேன்; மூவருந் தேவரும்
முளைத்ததுங் கண்டேன்''

என்றும் பாடியுள்ளார்.

4. தன்னுளே என்றது தற்சொரூபத்தை. சகம் என்பது ஈசவடிவத்தை. யான் என்பது சீவனை. விநாயகர், தந்தை தாயரை வலம்வந்து தன்னுளே சகத்தைக் கண்டார். முருகன், உலகை வலம்வந்து சகத் துளே தன்னைக் கண்டார். தன்னுளே சகத்தைக் காணுதல் யாண் டும் வியாபகமாய் நின்ற பூரணநிலை. சகத்துளே யான், உயிர்க் குயிராய் நின்றநிலை. மகத்துக்கு மகத்தாயும், அணுவுக்கு அணு வாயும் உள்ளநிலை விளக்கப்பட்டது.

5. ''எல்லாந் தன்னுட்புக யாவுளுந் தானாகி'' (திருமந்திரம் 2269) என்று இதனைத் திருமூலர் விளக்கியுள்ளார். முருகன் வள்ளியை விட்டுப்பிரியேன் என்று சத்தியஞ்செய்து எங்கும் வியாபகமாயிருக் குந் தன் உண்மை நிலையினை விளக்கினார். சிவனது வியாபகமும் அந்தரியாமித்துவமும் திருவிளையாட்டாக உமை கண்புதைத்த பொழுதும், தென்முகக் கடவுளாய் யோகிருந்த காலத்தும், பிட் டுக்கு மண்சுமந்து பிரம்படி பட்டஞான்றும், வேடுவனாய் அருச் சுனனுடைய வில்லடி பெற்ற வேளையிலும் வெளிப்பட்டுத் தோன் றின. இவை சிவபரத்துவத்தை விளக்குவன.

6. திருவருளால் மேல்நிலை நிற்கும் ஆன்மா திருவடியில் (யான் என தற்ற நிலையில்) உறைந்து நிற்கும். அதனாற் சிவன்நிறைவு எங்க ணுந்தான் நிறைந்து நிற்கும். பாலிற்கலந்த உறைமோர் பால் முழுவதுங் கலத்தல் இதற்கு உவமை. ஆன்மா வேறின்றிச் சிவ னுடன் கலந்துநிற்கும் பூரண நிலையில் எல்லாப் பொருள்களும் ஆன்மாவினுள்ளே ஒடுங்கும். அவ்வாறே (ஆன்மா சிவனுடன் கலந்து நிற்குந் தொடர்பினால் சிவன் எழுந்தருளியிருக்கும் மெய் யன்பருள்ளும், ஏனைய உயிர்களுள்ளும், எல்லாப் பொருள்களுள்

ளும் கலந்து நிற்கும்) திருவருட் காட்சியால் தத்துவங்கள் அகலவே எல்லாப் பொருள்களினுள்ளும் ஆன்மா நிற்பது புலனாகும்.

361. பளிங்கு போலப் படரொளி விந்து
விளங்குவெண் மதிபோல் வெளிப்படக் கண்டேன்
பரிதி போலப் படரொளி தோன்றி
ஒருபது நாதம் ஒலிக்கவுங் கண்டேன்.

பொ - ரை:- பளிங்குக் கல்லின் தன்மைபோல எங்கும் பரந்து பிரகாசிக்கும் ஒளிமயமான விந்துவானது, உதித்தெழும் பூரண வெண்டிங்கள்போல விளங்கித் தோன்றுவதைத் தியானத்திற்கண்டேன். (நண்பகற்) சூரியப்பிரகாசம்போல எவ்விடத்தும் ஒருபடித்தாய் நிறைந்த ஒளியாய் நாதம் விளக்கமாகக் காணப்பட்டுப், பத்துவகையான சுகநாத ஓசை எழுவதையுங் கேட்டு இன்புற்றேன் எ-று.

விளக்கம்:- 1. விந்து நாதத்தைத் தியானித்த அநுபவம் இப்பகுதியால் விளக்கப்படுகின்றது. விந்து ஒளியைத் தியானிக்க, அவ்விந்து பூரணசந்திரன்போலத் தோன்றியது. வெண்மதியொளி, பொது ஒளியாய் எவ்விடத்தும் நிறைந்து விளங்குதலால் ஞானப்பிரகாசத்திற்கு உவமையாயிற்று.

2. பாசத்தோடு கூடியபோது மறைந்து திரோதான சத்தியாயும், பாசநீக்கத்தின்போது விளங்கி ஞானசத்தியாயுந் தோன்றுவதாற், சார்ந்ததன் வண்ணமாம் பளிங்கு விந்துவுக்கு உவமையாயிற்று.

3. நாதத்தியானம், தியானித்துப் பொருளிலே அடங்கச் சங்கு கடல் போன்றவற்றின் பரிசுத்த நாதம் எழுவதாகும். ஒருபது நாதம்:- மணி, கடல், யானை, மத்தளம், அருவி, குழல், யாழ், சங்கு, வண்டு, தைத்தாளம் என்னும் இவற்றின் ஓசை போன்ற பரிசுத்த நாதம். "நன்மணி நாதமுழங்கியென் னுள்ளுற நண்ணுவதாகாதே" (திருவாசகம் 638) தியானத்தானமான புருவநடுவிலிருந்து பிரமரந்திரம்வரை தசநாதங் கேட்குமென யோகசிகை கூறும்.

4. ஞானசாதகர் தசநாதங்களையுங் கடந்து அப்பாற் செல்லவேண்டும். சித்த சாந்தியுடன் செய்யும் முத்திபஞ்சாக்கரசெபம், நாத வசமுற்று மயங்காது காக்கும்.

365\. அக்கினி போலும் அனந்தமீன் போலும்
தக்கபே ரொளியாய்ச் சராசரம் அனைத்தும்
புரந்தருள் அகண்ட பூரண மாகிப்
பரந்தசெஞ் சுடரைப் பரையெனக் கண்டேன்.

பொ-ரை:- அக்கினியின் ஒளிபோலவும், அளவிறந்த மின்னொளிகள் ஒருங்கு திரண்டாற் போலவும் ஒழுங்கான மிக்க பிரகாசமாய் நின்று, இயங்குவனவும் நிற்பனவுமாகிய எல்லாப் பொருள்களையும் (படைப்பாதி ஐந்தொழிலாற்) பாதுகாத்தருளுகின்றதும், கண்டிதமற்று எங்கும் எவையும் ஒழிவற நிறைந்து வியாபித்துள்ளதுமான செவ்வொளியைப் பராசத்தி எனக் கண்டேன் எ-று.

விளக்கம்:- 1. அனந்த என்பது அளவற்ற என்ற பொருளில் வந்தது. மின்னல் என்பது முதனிலை திரிந்த தொழிற் பெயராய் மீன்என்றாயிற்று. "மின்னாயிரம் ஒரு மெய்வடிவாகி விளங்குகின்றது அன்னாள்" (அபிராமி அந்தாதி 55) "தடில்லதா ஸ்மருசி" (சகஸ்ர நாமம்) என்பவை காண்க. அனந்தமீன், அதிக ஒளியுந் தோன்றி மறையும் இயல்பும் உள்ளது. ஞான முதிர்ச்சியில் மனம் ஒரு வழிப்பட்டுத் தியானிக்கும் பொழுது மின்னொளிபோலத் தோன்றியும், மன ஒருமையற்ற தியானத்தில் மறைந்துமிருக்கும் நிலையைக் குறித்தது. அதர்வணவேத அதர்வ சிகோப நிஷதம், "பிரணவத்தின் நான்காம் மாத்திரையாகிய அர்த்தமாத்திரை சிவபரம் பொருளைத் தெய்வமாகக் கொண்டது. மின்னல் நிறமுள்ளது. சர்வவர்ணங்களையுமுடையது" எனக் கூறுவதை ஈண்டுச் சிந்திக்க.

2\. சராசரம் அனைத்தும் புரந்தருள் அகண்ட பூரணம்:- அநாதியே ஆணவமல சம்பந்தமுள்ள உயிர்கள் மலபரிபாகமடைந்து உய்யும் பொருட்டு ஐந்தொழில் செய்வதற்காக அருட்சத்தி, ஒடுங்கிய உலகை மீளத் தோற்றுவிக்கின்றது. "திருந்தப் புவனங்கள் ஈன்ற பொற்பாவை" என்பது கந்தர் அலங்காரம். புரந்தருளல் என்றது படைத்தல் காத்தல் அழித்தல்களை. அத்தொழில்களைச் செய்வோர் அருள்வடிவினராதலின் அவர்கள் செயல்களும் அருட்சத்தியின் செயல்களேயாகும். அகண்ட பூரணமாகி என்பது எங்கும் எவையும் ஒளிமயமாய் நிறைந்திருப்பதைப் புலப்படுத்துகின்றது. சுவேதாசுவதர உபநிடதமும், 'பராசக்தியே பிரபஞ்சத்தில் சகல வஸ்துக்களிலும் வியாபித்திருக்கின்றாள்' (அத். 4. மந். 10) என்று கூறுகின்றது.

3. சுயஞ்சோதியான நின்மலசிவத்தின் ஆற்றற் பண்பாகிய செவ்வொளி உலகினை இயக்கப் பராசக்தியாக விளக்கமுற்றது. பராசக்தியின் நிறம் சிவப்பு என்பது நூல் விதி. சிவத்திலிருந்து சத்தி தோன்றும் பொழுது சிவப்பு ஒளிமயமாகவே காணப்படுமென்பது மகான்களின் அனுபவ சித்தாந்தம்.

"கொம்பனை யாளைக் குவிமுலை மங்கையை
வம்பவிழ் கோதையை வானவர் நாடியைச்
செம்பவ ளத்திரு மேனிச் சிறுமியை
நம்பிஎன் னுள்ளே நயந்துவைத் தேனே" என்பது திருமந்திரம் (1034). உதயசூரியன், பவளமணி, மாணிக்கமணி, மஞ்சாடி மலர், மாதுளம்பூ, குங்குமக் குழம்பு, செம்பஞ்சுக் குழம்பு, இந்திர கோபம் என்பன போன்ற (திருமேனி) நிறம் உடையவர் பராசத்தி. ஆடை, ஆபரணம், அணியும் பூக்கள் யாவும் சிவப்பு நிறம் என்பதை "சர்வாருணு" என்பதனுல் அறிக. இவற்றின் அறிகுறியாகவே அம்பாளின் பிரசாதமாகக் குங்குமம் வழங்கப் படுகின்றது. அம்பாளைச் சிவப்பு நிறமாகத் தியானிப்பவர்கள் இகபர சுகங்களை அடைகின்றூர்கள்.

4. காணுங் கண்ணுக்கு இளவளஞாயிற்றின் செஞ்சுடர் தரிசனமாவது போலப் பக்குவர்க்குப் பரை தரிசனமாவாள். பக்குவரை, "ஞானந் தழைத்துன் சொரூபத்தை அறிகின்ற நல்லோர்" என்றூர் அபிராமிப்பட்டர். இது பரை தரிசனம்.

369. அருட்பரை ஒளிக்குள் அழுந்துமந் நேரம்
உருக்கமுங் கண்ணீர் ஒழுக்கமுந் திகைப்புங்
கம்பமும் புளகமுங் களிப்புடன் நகையுஞ்
சிம்புள்போல் வலியுஞ் சித்தியுங் கண்டேன்.

பொ-ரை:- கருணையே வடிவாகவுள்ள பரையொளி(யைத் தியானத்திலே கண்டு அந்த ஒளி)க்குள் அடங்கி (என் சித்தவிகாரங்கள் எவற்றையும் பொருந்தாது) அதன்வசமான பொழுது (பத்தி ஞானம் அதிகரிப்பதற்கு அறிகுறியாக) மனம் நெகிழ்ந்துருகுதலும், அவ்வுருக்கத்தால் ஆனந்தக்கண்ணீர் பெருகுதலும், அதிசயத்தாற் பிரமித்தலும் சரீரம் அருக்குற்றூற்போல நடுங்குதலும், பயம்வந்தாற்போல மயிர் சிலிர்த்தலும், மனமகிழ்வோடு கூடிய புன்சிரிப்பும், சரபம் போன்ற வல்லமையும் (மூவகைச்) சித்திகளும் உண்டாகப் பெற்றேன் எ-று.

விளக்கம்: 1. இங்குக் கூறப்பெற்றவைகளுள்ளே களிப்புடன் நகை பக்திக்கு அறிகுறி; ஏனையவை ஞானோதயத்திற்கு அறிகுறி. இங்குக் கூறப்பெற்ற மெய்ப்பாடுகள் இறை அன்பின் மிகுதிபற்றி உண்டாயவை ஆதலின் தொல்காப்பியர் மெய்ப்பாட்டியலுட் கூறிய எண்வகை மெய்ப்பாட்டினுள் அடங்கா. தேவாரத்தில், "காதலாகிக் கசிந்து கண்ணீர்மல்கி ஓதுவார்" எனவும், திருவாசகத்தில் "மெய்தானரும்பி விதிர்விதிர்த்து . . . கண்டுகொள்ளே" எனவும், திருக்கோவையாரில்,

"மைத்தழை யாநின்ற மாமிடற் றம்பல வன்கழற்கே
மெய்த்தழை யாநின்ற அன்பினர் போல விதிர்விதிர்த்து"

எனவும் வருவன போன்றவற்றைக் காண்க. இவை தோன்றியதும் அஞ்ஞானங் கெடும்; மெய்ஞ்ஞானம் உதயமாகும்.

2. கம்பம் - நடுக்கம்; சிம்புள் - சரபப்பறவை; மிக்க வலிமையுடையது. வீரபத்திரர் சரபவடிவு கொண்டே நரசிங்கத்தின் வலியை அழித்தார். சித்தி; எண்ணற்ற உருவசித்தி, அருவுருவசித்தி, அருவ சித்திகள் உண்டு. இவற்றை அடைந்தவர்களுக்கு மறுபிறப்பு இல்லை. இச் சித்திகள் முத்திக்கு முயன்று கொண்டிருப்பவனுக்கு, இடையே எதிர்பாராமல் ஏற்படுவன. மரத்திற்கு நீரூற்றுதலில் முயன்று கொண்டிருப்பவனுக்கு அம்மரத்துப் பறவைகளைக் காணுதலும் நேரிடுதல்போல நிகழ்வது. இது ஞான அறிவு அநுட்டானங்களின் பேறுகச் சில சமயங்களிற் காத்திராப் பிரகாரமாய் உண்டாவது. இவற்றின் கீழ் நிலையனவே எண் பெருஞ்சித்திகள். (அடி 193 விளக்கம் 3 பார்) பரை ஒளிக்குள் அழுந்தல் பரையோகம்.

373. மேலுள விஞ்சை விதிநெறி விடுத்த
பாலனுன் மத்தன் பக்குவங் கண்டேன்

பொ-ரை:- சிறப்பு நூலாயுள்ள ஆகமத்தில் (விகித்தன செய்து விலக்கியன தவிர்தலாகிய) விதிமுறையிலிருந்து விடுபட்ட பாலன் பித்தன் போன்று செயல்புரியும் பக்திமார்க்கத் தன்மையை அடைந்தேன் எ-று

விளக்கம்: 1. விஞ்சை விதிநெறி என்பது ஆகம நெறி. பக்தி நெறி, ஆகம நெறிக்கு மேலானதும் வேருனதுமாகும். ஆகம விதிநெறி வழிபாட்டிறை சிவபக்தியுண்டாகும். பக்தி நெறி வழிபாட்டினுல் முத்தியுண்டாகும்.

2. பாலன்:- விடயத்தைப் பற்றியறிந்து விரும்பி வினைபுரியுந் தன்மை முற்றுமில்லாதவன். பித்தன் விடயங்களைப் பற்றியறிந்து ஒருகாற் செய்வதற்கும் ஒருகாற் செய்யாமைக்கும் உவமை. மத்தன் என்பது அருளோடு கலந்தவனைச் சுட்டிற்று. மத என்னும் வடமொழித்தாது கலத்தல் என்ற பொருளைத் தரும். மத்து மத்தம் ஆயிற்று. நாரதர் (பக்தி சூத்திரம் 6) பத்தியை உடையவர்கள் பைத்தியம் அடைந்துவிடுகிறுர்கள் என்று கூறுகிறுர். பக்தி முதிர்ந்து ஆவேசமாகுமிடத்துப் பாலரைப் போன்றும், பைத்தியகாரரைப் போன்றும் செயலாற்றுவர்.

3. விதி நெறிசுளை நீங்கிய நிலை பராசக்தி கழன்ற துரியாதீதநிலை. இதுவே பரையதீதம் என்னும் அவதரமாகும்.

375. ஓங்கும் பரைக்குள் உள்ளொளி யாகித்
தேங்குமா னந்தச் செழுஞ்சுடர் கண்டேன்

பொ-ரை:- எங்கும் வியாபகமான பரையொளிக்குள்ளே உள்ளொளியாகி நிற்கும் இன்பமயமான வளமார்ந்த வெண்மையான ஒளியைக் கண்டேன் எ-று.

விளக்கம்: 1. ஓங்கும் பரை - சுத்த ஞானமாகிய பராசக்தி. பராசக்தியும் நழுவிய துரியாதீத நிலையிலுள்ளது ஆனந்தம்.

"ஒளியில் விளைந்த வுயர்ஞான பூதரத் துச்சியின்மேல்
அளியில் விளைந்ததொ ரானந்தக் தேனை அநாதியிலே
வெளியில் விளைந்த வெறும்பாழைப் பெற்ற வெறுந்தனியைத்
தெளிய விளம்பிய வாமுக மாறுடைத் தேசிகனே"

(கந். அல. 8)

என்னும் பாடலில் அருணகிரிநாதர் பராசக்தி கழன்ற துரியாதீத நிலையில் ஆனந்தப் பேறுண்டாவதை விளக்குதல் காண்க. சிவத்திலே அத்துவிதமாய்க் கலந்து நின்று அன்பு செய்தலினுல் அவ்வானந்தம் உண்டாகும்.

2. வெயில் போன்றது பரைஒளி. வெயிலைத் தரும் சூரியன் போன்றது சிவனொளி. பரையொளி செவ்வொளி; சிவன் ஒளி வெள்ளொளி.

3. "உண்மையறிவானந்த உருவாகி" என்றனர் பிறரும். ஆனந்தச் செழுஞ்சுடர் என்றது பேரின்ப சோதியின் கீழ்ப்பாதமாகிய பர

சிவத்தை. செழுஞ்சுடர் - சோதிப்பிளம்பு; இறைவனை உட்பூசையில் கோடி சூரிய ஒளி உடையதொரு மின்னல்போலத் தியானிக்கும் முறையுண்டு. ஆனந்தம் - சுகம். இது சுகரூபதரிசனம். உள்ளொளியை, "காண்டகு துரியாதீதக் கழிபரத்தொளி" என்பர் கடவுள் மாமுனிவர்.

377. உள்ளொளிக்(கு) உவமை ஒன்றுங் காணேன்
விள்ளவுந் தரமோ மீமிசை விளங்கித்
தெளிபடுஞ் சுடரைச் சிவமென்(று) உணர்ந்து
களிபடுஞ் ஞானக் கண்ணினுற் கண்டேன்.

•

பொ-ரை:- (பரை ஒளிக்குள்ளே தோன்றிய) உள்ளொளிக்கு உவமை கூறத்தக்க (அதனிலுஞ் சிறந்த) பொருளொன்றையும் அறியேன். (உவமையற்ற பரம் பொருளுக்கு) உவமை கூறும் முறைமை உடைத்தோ! அது சொல்லொணாதது. தியானத்தில் மிக மேலாகப் பிரகாசித்துத் தெளிவாகத் தோன்றிய உள்ளொளியைச் சிவமென அழுந்தி அறிந்து பேரின்பத்தை விளைவிக்கும் ஞானக் கண்ணினுலே தரிசித்தேன் எ-று.

விளக்கம்:- 1. உவமை ஒன்றுங் காணேன்: பொருளிலும் உவமை சிறப்புடைத்தாதல் மரபு. 'உயர்ந்ததன் மேற்றே உள்ளுங்காலை' என்பது தொல்காப்பியங் கூறும் உவமை இலக்கணம். சிவந் தனக்கு உவமையில்லாதது. வேறொன்றுங் காணாது, தன் உணர்வில் அச் சிவத்தையே கண்டு நிற்கும் மேல்நிலைக்கு உவமையில்லை. ஆன்ம போத நினைப்பறச் சும்மா இருந்த பொழுது உவமையுந் தோன்றாது; சொல்லவும் ஒண்ணாது. இந்த அவதரம் சுகாதீதம். சுகாதீதத்தில் சிவத்தின் இன்பசக்தி காணப்படும். இன்பசக்தி பரமானந்த சொரூபத்தின் திருவடியாகும். மனம் வாக்கிறந்த செய்தி சொல்லொணாதது. தரமோ - பக்குவத்ததோ. அநுபவிக்கத்தக்கது; சொல்லி இசைவிக்கத் தக்கதன்று. "அவ்வாறறிவார் அறிகின்றதலால் எவ்வாறொருவர்க்கிசைவிப்பதுவே" (கந். அநு. 30) என்றார் அருணகிரியார்.

2. மீமிசை விளங்கி:- பராசக்தி கழன்ற துரியாதீத நிலையிலே தரிசனமாகி, 'உயர்ஞான பூதரத்து உச்சியின்மேல்' என்பது கந்தர் அலங்காரம். 'ஆனந்த வெளியேறி' என்பது திருப்புகழ். தெளிபடுஞ் சுடர் - உட்பூசையிலே தியானிக்கப்படும் கோடி சூரியப் பிரகாசமுள்ள மின்னற் சுடர், சுடரைச் சிவமென்றுணர்ந்து. பதி

பசு பாசம் என்னும் முப்பொருளுக்கும் பதிஞானம், பசுஞானம், பாசஞானம் என்னும் மூவகை ஞானமுங்கூட ஆறு பேதமாகும். அவற்றுள்ளே பாசத்தையும் பாசஞானத்தையும் எழுப்புவது பசுவாகும். பசு அதிலே செல்லாவிடில், அவை கெடுவதுமில்லை; கூடுவதுமில்லை. அறிவானோடு அறிவடங்குமாதலின் பசுஞானம் பசுவோடு அடங்கும். அதற்குக் கேடும், நிலைப்புமில்லை. எஞ்சிய பசு, ஞானம், பதி மூன்றும் ஞாதுரு, ஞானம், ஞேயம் என நிற்கும். இம் மூன்றில் ஞானம் ஞேயத்தாலாவதெனக்காண ஞானம் நீங்கி ஞாதுருவும் ஞேயமுமாம். ஞானங்கெடுவதுமில்லை; காண்பதுமில்லை. ஞாதுரு ஞேயங்களில் ஞேயச் செயலாய் நிற்கவே ஞாதுருவும்இல்லையாம். ஞாதுருவாகிய ஆன்மா கெட்டதுமில்லை,காணப்படுவதுமில்லை. இறுதியில் ஞேயமாகிய சிவமொன்றே உண்டு. இது சிவரூபம். காணும் ஆன்மா பதிப்பொருளின் செயலாய் அழுந்தும் அவதரத்தில், உள்ளொளியாயிருந்த சுடர்வடிவே சிவரூபமாகும். சிவரூபம், அனுபவிப்பானும் அனுபவமும் ஒன்றுபோலக் காண்பது. அருணகிரிநாதரும் ''ஓங்காரத்துள் ளொளிக்குள்ளே முருகன் உருவங் கண்டு'' என அறுமுக சிவரூபத்தைக் காட்டுகின்றார். மைத்திராயணிய உபநிடதம், 'எது அமூர்த்தமோ அது சத்தியமானது. அது பிரமம்; அது தேஜஸ் (சோதி) எனத் தெளிபடுஞ்சுடரை விளக்குகின்றது, சிவம் என்னுஞ் சொல்லுக்கு திருக்கோவையார் (358) உரையிற் பேராசிரியர் ''எவ்வுயிர்க்கும் எப்பொழுதும் நன்மையைச் செய்தலாற் சிவம்'' எனப் பொருள் விரித்துள்ளார்.

3. களிபடும் ஞானக்கண்ணினுற் கண்டேன்: களி - பரமாநந்தம்; படும் - உண்டாகும். களிபடும் - பரமாநந்தந் தோன்றும். துரிய ஞானஞ் செறிவதால் துரியாதீதத்தில் ஆனந்தம் உண்டாகும். இது பரமாநந்த தரிசனம். ''களியுறும் ஆநந்தந்தான் கண்ணுறு மதுவாய்க் காணே'' என்பது தத்துவப்பிரகாசம் (293). ஞானக் கண்ணினுற் கண்டேன்:- இது ஆன்மாவின் நேர்வணக்கம். சொரூப சிவ வணக்கம். கேட்டுச் சிந்தித்துத் தெளிந்த மெய்யன்பர்களாகிய பக்குவான்மாக்களுக்கே உரியது இவ் வணக்கம். அவர்களுக்கே நண்ணினர்க்கு நல்லனும், நச்சினூர்க்கினியனும் ஆகிய அவனருள் விளங்கித் தோன்றும். '' ஞானமயமாகி நின்றானும் '' என்றார் காரைக்காலம்மையார் ஆதலின் ஞானமயனுகிய அவனை அவனருள் ஞானத்தினுலேதான் வணங்கமுடியும். 'அவனருளால் அவன்தாள் வணங்கி' என்றார் மணிவாசகர். ஊனக்கண்ணுக்குப் புலப்படாத கடவுளைப் பதிஞானக்கண்கொண்டே அறியவேண்டும். ''ஊனக்கண் பாசம் உணராப்பதியை ஞானக்கண்ணினிற்

சிந்தை நாடி'' என்றார் மெய்கண்டர். சிவயோகசுவாமிகளும், ''பாதாரவிந்தத்தைக் காணுமற்கண்டு பணியாமற் பணிந்தேன்'' என்றார். யோக சிகோபநிடதமும், பொறிகளைக் கடந்து நிற்பது யாதோ அது, ஞானபுத்தியால் அறியப்படுகின்றது எனக்கூறுத லாலும் அறிக. ''எவனை இவர் விரும்புகின்றாரோ அவனாலேயே அவர் அடையப்படுகின்றனர். அவனுக்குப் பரமாத்மாவானவர் தனது சொரூபத்தைக் காட்டி மகிழ்விக்கின்றனர்.'' - கடோபநிடதம், முண்டக உபநிடதமும் இவ்வாறே கூறுகின்றது. இதுவே மார்ச்சால நியாயம் எனப்படுவதாகும். 'ஞானத்தால் வீடென்றே நான்மறைகள் புராண நல்லாகமஞ் சொல்லும்'. ஒளி - அதிசூக்கும ஞானஒளி.

4. உள்ளொளி:- '' அண்டங்கள் ஏழுங் கடந்தகன் றப்பாலும்
உண்டென்ற பேரொளிக் குள்ளா முளவொளி
பண்டுற்று நின்ற பராசத்தி யென்னவே
கொண்டவ னன்றிநின் றான்எங்கள் கோவே''
-(திருமந்திரம் 2349)

'' உச்சிவெளிதனில் உள்ளொளி காட்டி'' என்பது விநாயகர் திருவகவல். உள்ளொளி அநுபவமாகும் இடம் இதனாற்புலனாகின்றது. இது சிவதரிசனம் என்னும் அவதரம்.

381. பார்த்திடும் என்னைப் பசையற விழுங்க
ஆர்த்ததில் வீழ்ந்துற் (று) ஆநந்தம் ஆனேன்
தன்னைத் தந்தான் என்னைக் கவர்ந்தான்
பின்னைப் பெறுமோர் பேற்றையுங் காணேன்
சுயம்பிர காசஞ் சொரூபா னந்தம்
இயம்புதற்(கு) அரிதாம் இன்பப் பெருக்கம்

பொ-ரை:- சிவம், ஞானக்கண்ணாற் கண்டிடும் என்னைப் பற்றற விழுங்க ஆராமை கொண்டு அப்பூரணப் பொருளிலே யானும் விழுந்து அத்துவிதமாகக் கலந்து இன்பமயமானேன். தனது சிவபோதத்தைத் தந்தான்; எனது சீவபோதத்தைக் கவர்ந்தான். பின்பு சிவபோதத்தாற் பெற்ற பேரின்பத்தைப் பார்க்கிலும் மேலானதாகத் தேடிப் பெறக்கூடிய ஒரு பேற்றையுங் கண்டிலேன். அது இயல்பாகவே கலப்பில்லாது மிக்கபிரகாசமாக விளங்குவது; இன்பமயமானது; சொல்லால் வருணித்துச் சொல்லமுடியாத பேரின்ப நிறைவு எ-று.

**விளக்கம்:** 1 பசையற விழுங்குதல்:- முற்றாக ஆன்மபோதந் தெரியாத வண்ணம் மறைத்தல். 'சிவனுக்கு நாம் அன்னமாக வேண்டும்' என்பது உபநிடத வாக்கு. ஆர்த்ததில் - ஆர்த்து + அதில் = ஆர்த்ததில். ஆர்த்து—ஆராமையுற்று. ஆராமையாவது நிறைவு பெறாது பலமுறையும் மீண்டும் மீண்டும் அச்செயலே செய்ய முயலும் மனஎழுச்சி முற்றும் பெறுதல். அம்மையார் அருளிய அற்புதத் திருவந்தாதி (85) இல் 'கண்ணாரக் கண்டும்' என்ற செய்யுளை நோக்குக. வீழ்ந்து - அத்துவிதமாகக் கலந்து, ஆநந்தம் ஆனேன் - அப்பரமாநந்தத்தில் நானென ஒரு பொருளின்றி அதுவானேன். சிவானந்தப் பெருங்கடலிற் படிந்து மதுவுண்ட வண்டைப்போல் அம்மயக்கத்தில் ஆழ்ந்து கிடந்தேன். 'பிரம்மத்தை அறிந்தவன் நிரதிசய பிரம்மாநந்தத்தை அடைகின்றான்' என்று தைத்திரிய உபநிடதம் கூறுகின்றது. இதுவே சுத்தாத்துவித பரிபூரணநிலை.

2. ''எப்பொருள்வந் துற்றிடினு மப்பொருளைப் பார்த்திங்
கெய்துமுயிர் தனைக்கண்டிவ் வுயிர்க்கு மேலாம்
ஒப்பிலருள் கண்டுசிவத் துண்மை கண்டிங்
குற்றதெல்லா மதனாலே பற்றி நோக்கித்
தப்பினைச்செய் வதுமதுவே நினைப்பது தானே
தருமுணர்வு புசிப்புமது தானே யாகும்
எப்பொருளு மசைவில்லை யெனவந்தப் பொருளோ
டிசைவதுவே சிவயோக மெனுமிறைவன் மொழியே''

— உண்மைநெறி விளக்கம்.

பரமாநந்த வடிவே சிவனுக்கு உருவம்.

3. தன்னை என்றது சிவமயத்தை; என்னை என்றது ஆன்ம சுபாவத்தை. '' யான் (உயிர்) என்று ஒரு முதல் காணப்படுமாறில்லை என்றறிந்து, தானே (சிவமே) முழுவதுமெனக் காண்பவரை, அவ்வாறே வேறு காணப்படுமாறில்லையென்று தனது திருவடி வியாபகத்துள் அடங்கிநிற்கச் செய்து தானே முழுவதுமாய்க் காணப்பட்டும் நிற்பன் இறைவன்'' என்ற சிவஞான போத (பத்தாஞ் சூத்திர) பாடிய உரையையும் நோக்குக. பின்வரும் பாடல்களும் இதனை விளக்குகின்றன.

திருவாசகம், '' தந்ததுன்றன்னைக் கொண்டதென்றன்னை''

திருவுந்தியார், '' தன்னையே தந்தானென் றுந்தீபற''

கந்தரநுபூதி, " ஆனு வமுதே யயில்வே லரசே
ஞான கரனே நவிலத் தகுமோ
யானு கியவென் னைவிழுங் கிவெறுந்
தானய் நிலைநின் றதுதற் பரமே"

பட்டினத்தார், "சும்மா விருக்கவைத்த சூத்திரத்தை நானறி
யேன்; அம்மா பொருளிதென் அடைய
விழுங்கினண்டி"

4. சீவசுபாவம் போய் இருவகைப் பற்றுமற்றுச், சிவனது சத்துத்தன்மையை அருளால் ஆன்மா சாரும், சாரவே சீவகரணஞ் சிவகரணமாகும். பசுத்துவம் நீங்கி எவ்வித விடயவாசனையுமற்ற சிவத்துவம் விளங்கப்பெற்ற ஆன்மா, சித்துத்தன்மையைச் சாரும், சிவஞானச் செறிவாற் சிவனோடு இரண்டறக் கலந்து சிவானந்தத்தை நுகரும். சத்து + சித்து + ஆனந்தம் = சச்சிதானந்தம். இதுவே சிவசொரூபம், இந்தச் சிவப்பேறே பேறுகளெல்லாவற்றிலும் மேலான பேறு. அந்தமொன்றில்லா ஆனந்தம்என மணிவாசகர் இதனை விளக்குகின்றார். ' அநுபவ முடிவே முத்தியாகும். 'எதை அடைந்த பின் வேறொன்றின் வேட்கையறுமோ அது பரம் பொருள்' என்பது யோகசிகை வசனம். இது தேடுதலற்ற இடம் எனப்படும். இதை இந்நூலாசிரியர் "தேட்டமறத்தேடுஞ் சிவாநுபவம்" என அநுபூதி விளக்கத்திற் கூறுகின்றார்.

5. சுயம்பிரகாசம், இயல்பாகவே வேறொன்றன் துணையின்றித் தன்னைத்தானே விளக்கிக் கொண்டு, பிறவற்றையும் விளங்கச் செய்யும் ஆற்றலுள்ளது, கண்ட ஒளி, கண்டாகண்ட ஒளி, அகண்ட ஒளி என்னும் மூவகை ஒளியில், இயல்பாக ஒளியுள்ளது அகண்ட ஒளி. இதுவே மற்றையவற்றுக்கு ஒளி கொடுப்பது. கடோபநிடதம் ஐந்தாவது வல்லி, "சூரியன், சந்திரன், நட்சத்திரங்கள், மின்னல் முதலியன பிரகாசிப்பதில்லை. சுயம்பிரகாசமுள்ள பிரமத்தாலேயே அனைத்தும் பிரகாசிக்கின்றன." என்று கூறுகின்றது. சிவத்திற்குச் சுயம்பிரகாச வடிவம் ஒன்றே ஆதலாலும், நால்வகை வாக்குக்கள் கூட இத்தகையது என்று கூறமுடியாமல் திரும்புகின்றன என்று அநுபூதிமான்கள் கூறுவதனாலும், சற்குருவின் கிருபை ஒன்றாலேயே சுயம்பிரகாசத்தைக் கிரகிக்க வேண்டும். ஆன்மாவினிடத்துச் சுயம்பிரகாசத்துவம் நிரந்தரமாக விளங்கியதை இப்பகுதி உணர்த்துகின்றது.

6. சொரூபாநந்தம்:- சொரூபம் - உண்மை வடிவம். சிவனுக்கு வடிவு இன்பமே. "இன்பதனை எய்துவார்க்கீயும் அவர்க்குருவம்

இன்பகனம்'' என்பது திருவருட்பயன். ஆநந்தமே பிரம்மம் என்று தைத்திரிய உபநிடதமுங் கூறுகின்றது. ''ஈறிலாப் பதங்கள் யாவையுங் கடந்த இன்பமே;' என்கின்றது திருவாசகம். வாக்கு மனோதீதமாய் ஆன்மபோத ஒழிவில், சிவத்தில் ஆன்மா அழுந்தி நின்று சிவானுபவத்தை நுகரும். பரமுத்திநிலையிற் பேரின்ப அனு பவம் ஒன்றிற்கே ஆன்மா உரித்தானது. ''உம்பர் பிரான் உற் பத்தியாதிகளுக்குரியன்; உயிர்தானுஞ் சிவானுபவம் ஒன்றினுக்கும் உரித்தே'' என்றார் அருணந்திசிவாசாரியார். ''அவனது சீபாதத்தை அணையும்'' என்று முடிவுகட்டியது சிவஞானபோதம். மதுவுண்ட வண்டைப்போல் அம்மயக்கத்தில் ஆழ்ந்து கிடத்தலே சுத்தாத்து வித பரிபூரண நிலை.

வீடுபெற்ற உயிர் அனுபவிக்கும் சிவபோகம் புதிதுபுதிதாய்ப் பெருகிக்கொண்டே இருத்தலை இன்பப்பெருக்கம் என்றார். பர மானந்த வடிவின் திருவடியே இன்பசத்தி என்பது முன்னருங் காட்டப்பட்டது. இயம்புதற்கரிய இன்பப்பெருக்கை அனுபவித்த அருணகிரிநாதர் கந்தர் அலங்காரத்தில்,

> "போக்கும் வரவு மிரவும் பகலும் புறம்புமுள்ளும்
> வாக்கும்வடிவு முடிவுமில் லாவொன்று வந்துவந்து
> தாக்கு மனோலயந் தானே தருமெனைத் தன்வசத்தே
> யாக்கு மறுமுக வாசொல்லொ ணாதந்த வானந்தமே''

என்று பாடிப்பரவுகின்றார். இது பரமானந்த மேலீடு. அத்துவித இயைபால் இறைவனுக்குரிய எண்குணங்களும் ஆன்மாவில் விளங் கித் தோன்றுதல் இன்பப் பெருக்கமாகும். இன்பப் பெருக்கமே பேரின்பம்.

> ''வாக்கிறந்த இன்பந் தந்தான்''
> ''சொல்லுந் தரமோ சுகம்'' என்றார் சிவயோக சுவாமிகள்
> ''இந்தநிலை நின்றார் சாயுச்சிய நிலையினோரே''
> — சித்தாந்தசாரம்.

387. தாடலை போலுங் காறலை போலுங்
கூடலை என்னுற் கூறவும் படுமோ

பொ-ரை- தாடலை என்னுஞ் சொற்புணர்ந்த தன்மைபோலவும், காறலை என்னுஞ் சொற்புணர்ந்த தன்மை போலவும் ஆன்மாவுஞ் சிவமும் ஒன்றாகாமலும் இரண்டாகாமலும் ஒன்றுமிரண்டும் அன்றா

காமலும் கலந்த நிலையை அனுபவித்தறிதலன்றிச் சொல்லளவையில் வைத்து என்றுற் சொல்லவாராது எ-று.

விளக்கம்:- 1. தாள் + தலை = தாடலை; கால் + தலை = காறலை. இருசொற்கள் கலந்து ஒரு சொல்லாய் ஒலிப்பதற்கு எடுத்துக் காட்டு. இவை பொருட்டன்மையால் வேருன சிவமும் ஆன்மாவும் அத்துவிதக்கலப்பால் ஒன்றுதலை விளக்கவந்தன.

2. அத்துவிதமாவது, தன்மையால் வேறுபட்ட இரண்டு பொருள்கள் கலப்பாற் பிரித்தறிய முடியாது, வேறற ஒரு பொருள்போல நிற்றலாகும். இது சமவாய சம்பந்தத்துள் ஒன்று. தாடலை என்னுஞ் சொல் தாள், தலை என்னும் இரண்டு சொற்கள் சேர்ந்து நிற்றலால் ஒரு மொழியன்று; தாள் தலை எனப்பிரிக்கமுடியாமல் தாடலை என ஒருசொற் தன்மையாய் ஒலித்து நிற்றலால் இருமொழியுமன்று. இங்ஙனமே காறலையும் ஒரு மொழியுமன்று; இருமொழியுமன்று. தாடலை காறலை என்னுஞ் சொற்கள் போலவே ஆன்மா சிவத்தோடு கலந்து நிற்கும்பொழுது ஆன்மாவும் சிவமும் ஒரு பொருள் அல்லாமலும், இரு பொருளல்லாமலும் அத்துவிதமாகும். சாமவேத மைத்திரேய உபநிடதத்தில், "நான் (ஏகம்) ஒன்று என்னும் எண்ணும் அற்றவனுய் இருக்கின்றேன்; (துவிதம்) இரண்டும் என்னும் எண்ணும் அற்றவனுய் இருக்கின்றேன்" என்று சிவபெருமான் மைத்திரேயருக்கு அருளிய செய்தியையும் ஈண்டுச் சிந்திக்க.

3. சாயுச்சிய பரமுத்தியிலும் ஆண்டான் அடிமை மாருமையினுலும் பரசிவத்தினுடைய பேரின்பமாகிய தாளை, காலை ஆன்மாவாகிய தலை சேருதலாலும் தாள், கால், தலை என்னும் சொற்களை உவமையாக்கினுர் ஆசிரியர். ஆளுடைய அரசும் தாளிலே தலைசேருவது முத்தியின்பம் என்பதைத் "தருவாய் எனக்குன் திருவடிக்கீழோர் தலைமறைவே" என்று அருளியுள்ளதால் அறியலாம். உமாபதி சிவமும்,

"தாடலைபோற் கூடியவை தானிகழா வேற்றின்பக்
கூடலைநீ ஏகமெனக் கொள்" எனத் திருவருட்பயனில் (8-4) அருளிச் செய்துள்ளமையையும் நோக்குக. தெய்வப்புலமைத் திருவள்ளுவரும் எண்குணத்தான்தாளைத் தலையால் வணங்கவேண்டுமென்பதை உணர்த்தியமையும் இக்குறிப்பினதே என்பர். சேக்கிழார் பெருமானும் "போதநிலை முடிந்தவழிப் புக்கொன்றியுடனுனுர்" எனத் திருஞானசம்பந்தர் பரமுத்தி எய்தியமையைப் பாடியுள்ளார். (திரு. புரா. 3151) இது பரமானந்த யோகம்.

4. என்னுற் கூறவும் படுமோ என்பதை, "தன்னந்தனி நின்றதுதான் அறிய இன்னமொருவர்க் கிசைவிப்பதுவோ" என்ற அருணகிரி வாக்கால் தெளிக.

**389.** பேய்பிடி யுண்டான் பெற்றி போலச்
சாய்படு கருவிச் சங்கமு நானும்
பகலோன் வெயிலிற் பாயிருள் விண்மீன்
சகசமாய்க் கலந்த தன்மையும் பெற்றேன்

பொ-ரை:- பேயாற் பிடிக்கப்பட்டவனுடைய தன்மைபோலச் சத்தி மடங்கிய அந்தக்கரணக் கூட்டம் முழுவதும், சூரிய ஒளியிற் பரந்த இருளானது இயல்பாகக் கலந்த தன்மையாக; நானும் அச்சூரிய ஒளியில் இயல்பாகக் கலந்த நட்சத்திரங்களின் தன்மையையும் அடைந்தேன் எ-று.

விளக்கம்:- 1. பேயாற் பிடிக்கப்பட்டவனுக்குச் சொந்த நினைவு பேச்சுச் செயலின்றிப் பேயினுடைய அறிவும் சொல்லும் செயலுமே நிகழும். அதுபோலச் சிவத்தினுற் பிடிக்கப்பட்ட ஞானியுந் தன்னறிவுஞ் செயலுமின்றிச் சிவஞானமுஞ் சிவத்தொழிலும் பெற்றுச் சிவமயமாய் நிற்பான். செயலிழப்பில் நின்று செயல்புரிதலில் சிவஞானிக்குப் பேயாற் பிடிக்கப்பட்டவன் உவமை. உமாபதி சிவமும்,

"பேயொன்றுந் தன்மை பிறக்கு மளவுமே
நீயொன்றும் பேசாமல் நில்" (தி. ப. 8-7) என்றமை காண்க.

2. இருள் சூரிய ஒளியை எதிர்க்காமலும். தான் அழியாமலும் அந்த ஒளியிற் கலப்பது இயல்பு. அதுபோல அந்தக்கரணமாகிய விசேட கருவிக் கூட்டம் பேரின்பத்திற்குக் காரணமான சிவ சத்தியோடு கலந்து, அதிசூக்குமத் தன்மை அடைந்து சிவகரணமாயிற்று. பொருளையறியாது மறைக்கும் பூத இருள் மெய்ப் பொருளை அறியாது மறைக்கும் பாசக்கூட்டத்திற்கு உவமையாயிற்று.

3. சூரிய ஒளியின் எதிரில் நட்சத்திரங்கள் இருந்தும் இல்லையாய் ஒளிமழுங்கி அதன்மயமாம். அதுபோலச் சத்தாகிய சிவத்திற்கு எதிரில் ஆன்மாக்கள் இருந்தும் இல்லையாய்ச் சிவப்பிரகாசமாகும்; எங்குஞ் சிவத்தையே காணும். "யாவையுஞ்சூனியம் சத்தெதிர் என்பது சிவஞானபோதம். அதை விளக்கும் உதாரண வெண்பா.

"வெய்யோன் ஒளியில் ஒடுங்கி விளங்காது
வெய்யோனை ஆகாத மீன்போல" என்று கூறி நட்சத்திரம் தான் விளங்கித்தோன்றுது அவ்வெய்யோன் மயமாவதை விளக்குகின்றது. சிற்றொளியை உடைய விண்மீன் சிற்றறிவையுடைய ஆன்மாவுக்கு உவமை. நிரனிறை அணி.

4. திருவருளால் ஆன்மா சிவமாகப், பாசக்கூட்டமும் ஆன்ம உபாதியும் நீங்குதலைத் திருமூலர்,

"தானே சிவமான தன்மை தலைப்பட
ஆன மலமுமப் பாச பேதமும்
ஆன குணமும் பரான்மா வுபாதியும்
பானுவின் முன்மதி போறபட ராவே" எனவும்,

மணிவாசகர்,

"இன்றெனக் கருளியிருள்கடிந் துள்ளத் தெழுகின்ற ஞாயிறே போன்று
நின்றநின் றன்மை நினைப்பற நினைந்தே னீயலாற் பிறிதுமற் -றின்மை
சென்றுசென் றணுவாய்த் தேய்ந்துதேய்ந் தொன்றுந் திருப்-பெருந் துறையுறை சிவனே
யொன்றுநீ யல்லை யன்றியொன் றில்லை யாருன்னை யறியகிற் பாரே; எனவும்,

தாயுமானவர்,

"சென்றுசென்றே யணுவாய்த் தேய்ந்து தேய்ந்தொன்றாகி
நின்றுவிடு மென்றநெறி நிற்குநா ளெந்நாளோ" எனவும் அருளிச் செய்துள்ளார்கள். இது பரமானந்த போகம்.

393. காந்தம் இரும்புங் கனல்படும் இரும்பும்
வேய்ந்தவிந் தனமும் வெந்நீர் உப்பும்
குளிகைபொன் மதுரங் கொண்டநா என்னத்
தளிவிடா தென்னைத் தடுத்தாட் கொண்டான்
விண்டேன் பிறப்பை வேதா கமத்தோர்
சண்டை தீர்ந்து சமரச மானேன்.

பொ-ரை:- காந்தம் இரும்பைத் தன்னிடத்து இழுத்து அதனோடியைந்து உடனாய் நிற்றல் போலவும், தீ தன்னிடம் அணைந்த இரும்

யைத் தன்வண்ணமாக்கி வேருய் நிற்றல் போலவும்; தீ விறகிற் சூக்குமமாய் எங்கும் பரந்திருந்த தன்தன்மையை வெளிப்படுத்தி, விறகாந்தன்மையை அழித்துத், தன்னேடுசேர்த்து ஒன்ருய் நிற்றல் போலவும்; உப்புத்தன் கடினகுணம் நீங்கி நீரொடு சேர்ந்து, தன் சுவை முழுவதையும் அந்த நீர்க்காக்கித், தன்னேடொப்பச் சமஞ் செய்து ஒன்ருய் நிற்றல் போலவும்; இரதகுளிகை களிம்பு நீங்கிப் பொன்ஞய் வந்த செம்பினது செம்புத்தன்மையை மறைத்துப், பிற செம்பினும் மாசை அகற்றி உடனுய் நிற்றல் போலவும்; நா தான் வேறு மதுரம் வேறு ஆயினும், மதுரவடிவே தன்வடிவெனுமாறு ஒன்ருய் அம்மதுரத்திலே யழுந்தியுடனுய் நிற்பது போலவும்; எத்துணை யுங் கடைப்பட்ட என்னையும் பக்குவமின்மை நோக்கி நீக்கி விடாது, உலகவழிச்செல்லாது தடுத்துத், தனக்கு அடிமையாக்கிக் கொண்டான். பிறவியை விட்டொழிந்தேன். வேதாந்த சித்தாந்த மாறுபாடற்றுச் சமரச நன்னிலையடைந்தேன் எ-று

விளக்கம்:- 1. சுத்தாத்துவித பரமுத்தி நிலையிற் சிவத்துக்குள் ஆன்மா அடங்கி நிற்கும் முறைமை முதல் ஐந்து உவமைகளால் விளக்கப் படுகின்றது. மதுரங்கொண்ட நா என்னும் ஈற்றுவமை ஆன்ம இலாபங் கூறுகின்றது. ஆறு உவமைகளும் ஐந்து முகத்தோடு அதோ முகமுங் கூடி ஆறுமுகமான பொருளைக் குறிப்பால் உணர்த் தின. ஒன்ருய் நிற்றல்: விறகுந் தீயும், நீரும் உப்பும். வேருய் நிற்றல்: தீயும் இரும்பும். உடனுய் நிற்றல்: காந்தமும் இரும்பும், மதுரமும் நாவும், இரத குளிகையுஞ் செம்பும்.

2. காந்தம் இரும்பு:- காந்தம் இரும்பை வசித்தால் ஒரு காலும் விடாது. அத்தன்மைபோல முதல்வன் ஆன்மாவைத் தன்திருவடிக் கண் சேர்த்துத், தன்வசமாய்ப் பற்றிக்கொண்டு நிற்கும்படி செய் வார். இவ்வுவமை விகாரமின்றி உடனுய் நின்று உபகரிப்பதனை விளக்குகின்றது. காந்தக் கல்லின் சந்நிதியில் அக்காந்தக்கல் இருந்த படி அசையாதிருக்கக் காந்த சக்தி இரும்பை வலிக்கும். அது போலவே சிவனது சந்நிதியிற் சிவன் சும்மா இருக்க, ஞானம் அறிவிக்க ஆன்மா அறியுமென உவமையை விரித்துணர்க.

மன்னு மிருளை மதிதுரந்த வாறன்பின்
மன்னு மரனே மலந்துரந்து — தன்னின்
வலித்திரும்பைக் காந்தம், வசஞ்செய்வான் செய்தல்
சலிப்பில் விகாரியலன் ருன்

(சிவ, 11ஆம் சூ. 2ஆம் அதி.)

3. கனல்படும் இரும்பு:- அக்கினி இரும்பைத் தன்வண்ணமாக்குந் தன்மைபோல முதல்வன் ஆன்மாவைத் தன்வண்ணமாக்கியுந் தானேயாக்காது, தன்சக்தி மாத்திரையின் நிறுத்தித், தான் பிரிந்து வேருய்நின்று உபகரிப்பதனை விளக்குகின்றது.

4. வேய்ந்த இந்தனம் வெம்மை:- முதல்வன் ஆன்மாவிற் சூக்குமமாயிருந்து சிவஞானத்தை விளக்கி, உயிரின்தன்மையான பசுஞான பாசஞானங்களைக் கெடுத்து ஒன்ருய் நின்று உபகரிப்பதனை விளக்குகின்றது. மலமாய உயிர்த்தன்மை மறையச் சிவஞானமாய உயிர்த்தன்மை விளங்கி நிற்குமென்பதனை,

"மரத்தை மறைத்தது மாமத யானை
மரத்தில் மறைந்தது மாமத யானை
பரத்தை மறைத்தது பார்முதற் பூதம்
பரத்தில் மறைந்தது பார்முதற் பூதம்'' என்னுந் திருமந்திரத்

தால் அறிக. வேய்தல் - எரிதல், வேதல். வேய்ந்த - எரிந்த. இந்தனம் - விறகு. வெம்மை - வெப்பம், நெருப்பு. வேய்ந்த என்பது யகர ஒற்றிடை வந்த ஆசெதுகை. காந்தம் என்புழி இரண்டாம் எழுத்தாய் வந்த நகரமெய், வேய்ந்த என்புழி யகர மெய்யின் பின்வந்து மூன்ருமெழுத்தாய் நின்று ஆசெதுகையாய் வந்தது காண்க. காக்கை பாடினியாரும்,

"யரலழ என்னும் ஈரிரண் டொற்றும்
வரன்முறை பிறழாது வந்திடை உயிர்ப்பினஃ(து)
ஆசிடை எதுகையென் றறைதல் வேண்டும்'' என்ருர்.

நாலெழுத்தில் ஏனையவற்றை விட்டு, உயிரைக்குறிக்கும் யகரத்தை ஆசாக வைத்து, உயிர் முத்திநிலையில் நிற்குமாற்றை உணர்த்தியருளிய ஆசிரியரின் நுண்மாண்நுழை புலம் தெய்வீகமானதே.

5. நீர்உப்பு:- முதல்வன் தன்வியாபகத்துட்படக் கலப்பித்து, உயிருக்குத் தன் குணங்களையீந்து சமமாக்கி, ஒன்றுவித்து நின்று உபகரிப்பதனை விளக்குகின்றது.

"நசித்தொன்றி னுள்ள நசித்தலா லொன்ரு
நசித்திலதே லொன்ருவ தில்லை — நசித்துமல
மப்பணைந்த வுப்பி னுளமணைந்து சேடமாங்
கப்பின்ரு மீசன் கழல்''

(சிவ. 11 ஆம் சூ. 2 ஆம் அதி)

'அப்பிலே உப்பான ஆக்கம்' - சிவயோக சுவாமிகள் நற்சிந்தனை.

6. குளிகைபொன்:- இரசகுளிகை பொன்னைத் தனக்குள்ளே அடக்கிக் கொள்வதுபோல ஆன்மாவைச் சிவன் கவளீகரித்து, உடனாகி நின்று உபகரிப்பதனை விளக்குகின்றது. முத்தான்மாவினது மல மாசை அடக்கிச், சிவானுபவம் ஒன்றினுக்கே உரித்தாக்கி (ஏனைய உயிர்களுக்குத் தான் ஐந்தொழில் நிகழ்த்தி) உடன் நிற்குமாறறிக.

7. மதுரங்கொண்ட நா:- மதுரத்துடன் சேர்ந்த நா, வேறு நில்லாதும் மதுரமாயொழியாதும் கெடாதும் அடங்கி நின்று மதுரச் சுவையினை நுகரும். அதுபோல உயிரறிவு வேறாகநிற்பதுஞ் செய்யாது, கெட்டொழிவதுஞ் செய்யாது, சிவத்துள் அடங்கி இன்புற்றிருக்கும். முதல்வன் தனது சிவாநுபூதி இன்பத்தில் ஆன்மா திளைத்து நிற்ப, அவ்வின்பத்தை உதவி வேறாயும் ஒன்றாயும் உடனாயும் நின்று உபகரிக்கும் சுத்தாத்துவித முத்தி நிலையை மதுரங் கொண்ட நா உவமை காட்டுகின்றது. ஒன்றுதல் உபகாரத்தால் ஆன்மா சிவமாய்விடும்; (ஆன்மா காணுதற்காகச் சத்தாகிய சிவம் செய்யும்) வேறுதல் உபகாரத்தால் ஆன்மா எங்குஞ் சிவத்தையே காணும். அநுபவித்தற்காகக் கூட்டும் உடனுதல் உபகாரத்தால் ஆன்மா சத்தாகிய சிவத்தை அநுபவிக்கும். இந்த அநுபவமே (சிவாநுபவம்) சிவபோகம். பரமுத்தியில் சிவத்துள் ஆன்மா அடங்கி நிற்குமுறைமையும் ஆன்மலாபமுங் கூறப்பட்டன.

8. பேரின்பத்தை உதவித்தான் சலனமற்று இருத்தல்:-

''கனியினுங் கட்டி பட்ட கரும்பினும்
பனிமலர்க் குழற் பாவை நல்லாரினுந்
தனிமுடி கவித் தாளு மரசினும்
இனியன் றன்னடைந் தார்க்கிடை மருதனே

- அப்பர் தேவாரம்

"காரணி கற்பகங் கற்றவர் நற்றுணை பாணரொக்கல்
சீரணி சிந்தா மணியணி தில்லைச் சிவனடிக்குத்
தாரணி கொன்றையன் றக்கோர்தஞ் சங்க நிதிவிதிசேர்
ஊருணி உற்றவர்க் கூரன்மற் றியாவர்க்கு மூதியமே''

- மணிவாசகர் திருக்கோவையார்.

பரமுத்தி நிலை:-

இரும்பைக்காந் தம்வலித்தாற் போலியைந்தங் குயிரை
எரியிரும்பைச் செய்வதுபோ லிவனைத்தா னாக்கி
அரும்பித்திந் தனத்தையன லழிப்பதுபோன் மலத்தை
அறுத்தமல னப்பனைந்த வுப்பேபோ லணைந்து

அநுபூதி

விரும்பிப்பொன் னினைக்குளிகை யொழிப்பதுபோ லடக்கி
மேளித்துத் தானெல்லாம் வேதிப்பா னுகிக்
கரும்பைத்தே னைப்பாலைக் கனியமுதைக் கண்டைக்
கட்டியையொத் திருப்பனந்த முத்தியினிற் கலந்தே.
-சித்தி 321

9. தடுத்தாட் கொண்டான்:- இறைவனை அடைந்து வழிபட்டு முத்தியடையும் பொருட்டே இப்பிறவி நமக்குக் கிடைத்தது. இதை மறந்து வேண்டத்தகாததைத் தக்கதென்று மயங்கி, மேலும் பிறவிக்கான உலக நெறிக்கருமங்களைச் செய்ய முயலும் பொழுது அம் மயக்கத்திலிருந்து தடுத்து எம் பெருமான் பக்குவான்மாக் களை ஆளாக்கிக் கொள்ளுகின்றுன். இறைவனே தடுத்தாண்டருள் பவன் என்பதை ஆலாலசுந்தரர் திருமலையில் அவரிடம்,

''செய்ய சேவடி நீங்குஞ் சிறுமையேன்
மையன் மாநுட மாய்மயங் கும்வழி
ஐய னேதடுத் தாண்டருள் செய்யென. (திருத். புரா.38)

விண்ணப்பம் செய்ததிலிருந்து அறியலாம்.

சைவசித்தாந்த முத்தி நிலையை இரௌரவ ஆகமம்,

''தேகம் நழுவும் காலத்திற் சிவத்தோடு ஆன்மாவுஞ் சேர்ந்து ஒரே இரசமாகும் சிவானந்தத்தை அடைந்து வேறுபடாதிருக் கின்றுன்'' எனக் கூறுகின்றது.

10. விண்டேன் பிறப்பை:-

''மித்தையுடல் கட்டறுத்து மெய்யருளாய் மெய்யொழிக்குந்
தத்துவமுங் கேவலமுஞ் சார்வகற்றிச் — சுத்தத்
தனியாகித் தானும்போய்த் தற்பரமாய் விட்டாற்
சனியான் இதுசத் தியம்'' — சிவானந்தமாலை.

இது பரமாநந்த மேலீடு.

11. வேதாகமத்தோர் சண்டை தீர்ந்து சமரசமானேன் :- வேதா கமத்தோர் என்றது வேதாந்த சித்தாந்த சைவர்களை. ஈண்டு வேதாந்தம் வேத முடிவாகிய உபநிடதத்தைக் குறித்தது; ஏகான்ம வாதத்தை அன்று. உபநிடதமுஞ் சைவாகமமும் வேதாந்த சித்தாந்த உண்மைகளைக் கூறுவதில் ஒத்தகருத்துடையன. சூத்திரமும் பாடிய மும் யோன்று வேதாந்தத்தைத் தெளித்துரைப்பது சைவசித்தாந் தம். வேதம் முப்பொருள் இலக்கணத்தைப் பரவலாகக் கூறி,

ஆணவநிலை, சத்திவிளக்கம், தீக்கை, சிவபூசைவிதி ஆகியவற்றை உய்த்துணர வைக்கின்றது. இவற்றை ஆகமம் வெளிப்படையாக விளக்குகின்றது. ஆன்மசாதனை, பாசநீக்கம், சிவப்பேறு பற்றிய விரிவான விளக்கங்களை ஆகமந் தருதலின் அது சிறப்புநூல் எனப் படும்; இவைகளின் இன்றியமையாத பொதுநிலை உண்மைகளை வேதந் தருதலின் அது பொதுநூல் எனப்படும். ''ஆரணநூல் பொது சைவம் அருஞ்சிறப்பு நூலாம்'' என்பது சிவஞானசித்தி யார்.

''வேதமோ டாகம மெய்யா மிறைவனூல்
ஓதும் பொதுவுஞ் சிறப்புமென் றுள்ளன
நாதன் உரையவை நாடில் இரண்டந்தம்
பேதம தென்பர் பெரியோர்க் கபேதமே'' — திருமந்திரம்.

சரியை கிரியை யோகவழியில் நின்று உண்மை ஞானத்தை அடை யலாம்; இது சைவசித்தாந்த நெறி. சரியை, கிரியை, யோகவழி யன்றி வேறுமார்க்கத்தாலுஞ் ஞானத்தை அடையலாம். இதற்கு வேதாந்த மார்க்கமென்று பெயர். ஞானப்பேறு அடைந்தவிடத்து இருவழியுஞ் சமமே. இதனை, 'வேதாந்தத் தெளிவாஞ் சைவசித் தாந்தத் திறன்' என உமாபதிசிவம் விளக்கியருளினார். மகுடா கமம் முதலியவற்றுள்ளும் இவ்வாறே கூறப்பட்டுள்ளதென மாபாடியகாரர் கூறுகின்றனர்.

ஆன்மா மலங்களின் நீங்கிச் சுத்தி எய்தும்பொருட்டுச் செய்யப் படும் பாவனைகள் இரண்டும் ஒத்தனவே. சோகமஸ்மி (ஸ + அகம் + அஸ்மி) அது நான் ஆகின்றேன். (அவன் நான் ஆகின்றேன்) என்று வேதாந்திகள் பாவனை செய்வர். இது வேதாந்த மகாவாக் கியம். சிவோகமஸ்மி (சிவ + அகம் + அஸ்மி) சிவம் நான் ஆகின் றேன் என்று சித்தாந்திகள் பாவனை செய்வர். இது சித்தாந்த மகாவாக்கியம். இந்த இரண்டு பாவனைகளுள் ஒன்றே அமையும். இவ்விரண்டு பாவனைகளும் ஒன்றே என்பதனை அருணந்திசிவம் சிவஞான சித்தியாரில் சிவோகம் பாவனைபற்றிக் கூறுமிடத்து, ''பண்டை மறைகளும் அது நானானேன் என்று பாவிக்கச் சொல்லு வது இப்பாவகத்தைக் காணே'' (298) என்று அருளிச் செய்துள்ள மையையும் அறிக. அன்றியும், சோகம் சிவோகம் இவ்விருதிற மந் திரங்களும் ஓங்காரத்தில் ஒன்றுபட்டுக் கிடக்கின்றன; பொருட் பேதஞ் சிறிதும் இல்லை' என ஓங்கார விளக்க நூலார் கூறியதை யும் உணர்க.

"வேத சிவாகமங்கட்குப் பேதங்காண்கின்றிலம்; வேதமே சிவாகமம்" என நீலகண்ட பாடியத்தில் நீலகண்ட சிவாசாரியார் கூறியுள்ளார். "பாவனையினுலும், துவாதசாந்த ஸ்தானத்திஞலும் வேதங்களும் ஆகமங்களும் ஒரே கருத்துற முடிவுற்று நிற்கின்றன" என்று, காசிவாசி செந்திநாதையர் சைவவேதாந்தம் என்னும் நூலில் (சைவ வேதாந்த சித்தாந்த சமரசப் பிரகரணத்தில்) வேதங்களிலிருந்தும் ஆகமங்களிலிருந்துந் தக்க ஆதாரங்களை எடுத்துக்காட்டி நிறுவியுள்ளார். தாயுமானவரும் வேதாந்த சித்தாந்த சமரச நன்னிலைஎன இதனைக் கூறியருளியமையையும் நினைவு கூர்க. நற்சிந்தனையிற் சிவயோகசுவாமிகளும் "அரன் வேதாந்த சித்தாந்த சமரசந் தருவான்" என்றே பாடியுள்ளார். ஆத்மா சத்தாகிய சிவத்தைச் சார்ந்து சிவாநந்தத்தை அநுபவிக்குஞ் சுத்தாத்துவிதமே வேதாந்த சித்தாந்தமாகும்.

## 5. ஆற்றுப்படை

399. திருமலி செந்தூர்ச் சேவற் பெருமான்
நிருமல ஞான நிகழ்த்தியாட் கொண்ட(து)
இவ்வணந் தமியேற்(கு) இருநிலப் பரப்பின்
அவ்வவர்க்(கு) அளிக்கும் அருள்நெறி உணரேன்
ஆகையால் இந்த அருள்பெறல் வேண்டின்
ஓகையால் திருச்செந் தூரிடத்(து) ஏகிக்
குமரவேள் சரணங் குறித்துமா தவத்தீர்
நிமலமெய்ஞ் ஞான நீவிரும் பெறுவீர்
உத்தமர் ஆவீர் உண்மையீ(து) என்று
சிற்றம் பலவன் செய்யுளாற் புகன்றான்.

பொ-ரை:- திருவருள் விளக்கம் மிகுந்த திருச்செந்தூர் என்னும் படைவீட்டில் வீற்றிருந்தருளும் சேவற்கொடியையுடைய அறுமுகப் பெருமான் குருவாக எழுந்தருளி வந்து, தமியேனுக்குச் சிவஞானத்தைத் தானே விளங்கச்செய்து, அடிமைகொண்டருளிய நெறி இவ்விதமாகும். பெரிய பரந்த பூமியில் வேறுவேறான பக்குவமுள்ளவர்களுக்கு அவரவர் பக்குவந்நோக்கி அருள்புரியும் வழியை அறியேன். ஆதலினால் நீங்களும் இவ்விதமான திருவருட்பேற்றை அடையவிரும்பின் பக்தியோடு திருச்செந்தூர் என்னும் பதிக்குச் சென்று, அறுமுகப் பெருமானுடைய திருப்பாதங்களை மனதிலே பதித்து, சரியையாதி நான்கு பாதங்களையும் அனுட்டிக்கும் பெருந்தவத்தினைச் செய்வீராயின்,

பாசம் நீங்கி மெய்ஞ்ஞானங் கைகூடப்பெறுவீர்; அதிதீவிரதர சத்திநிபாதத்து உத்தமராவீர். இது சத்தியமென்றுகூறிச் சிற்றம்பலவன் அகவற்பாவினாலே திருச்செந்தூர் அகவல் என்னும் பெயரிய இந்தப்பிரபந்த நூலைப்பாடியருளினான் எ-று.

விளக்கம்: 1. ''பெற்ற பெருவளம் பெறாஅர்க் கறிவுறீஇச்
சென்று பயனெதிரச் சொன்ன பக்கமும்'' என்பது
தொல்காப்பியர் கூறிய ஆற்றுப்படை இலக்கணமாகும். இங்கு சிற்றம்பலநாடிகள் தாம் பெற்ற முத்திப்பேற்றை அது பெறாத வைநயிகரான பக்குவர்க்கு எடுத்துக்கூறி, திருச்செந்தூர்க்குச் சென்று முத்திப்பயனைப் பெறுமாறு வழிகாட்டியமை காண்க.

2. தமியேற்கு - முழுவதுஞ் சத்தாதலும் அசத்தாதலுமின்றிச் சதசத்தாகுந் தனித்தன்மையுடைய எனக்கு. ''இருதிறன் அறிவுளது இரண்டலா ஆன்மா'' என்ற சிவஞானபோத ஏழாஞ் சூத்திரத்தையும் அதன் பொழிப்புரையையும் பார்க்க. மணிவாசகரும் ''இரண்டுமிலித் தனியனேற்கே'' என்று பாடியுள்ளார்.

3 செந்தூர்ச் சேவற்பெருமான் ஆட்கொண்டது:- சிவயோக சுவாமிகள் ''நல்லூரான் ஆசானாய் வந்து அடியேனை ஆட்கொண்டான்'' என்றும், ''அமலனங்கே நேராகச் சற்குருவாய் வந்தேயென் சந்தேகந் தீர்த்தாண்டான்'' என்றுங் கூறியுள்ளமை இச்செய்தியை ஞாபகப்படுத்துகின்றது. திரு - அருட்செல்வம். 'திருவளர் திருச்சிற்றம்பலம்' என்ற திருவிசைப்பாவும், 'திருமலி செந்தூர்' என்ற இத் தொடர்ப் பொருளையே கொண்டது; சென்றடையாத திருவாகிய முத்திச்செல்வம் எனினுமாம். நிருமலஞானம் என்பது மலக்குற்றமற்ற சுத்தமான பதிஞானம். பாசஞான பசுஞானங்கள் மலக்குற்றமுடையன. சேவல் நாததத்துவத்தைக் குறிக்கும். அருணகிரியார், 'சிவஞானோபதேசிகனே' என்று தனக்கு நிருமலஞானம் நிகழ்த்தியதைப் பாடிப்பரவியுள்ளார். ஈண்டு அருள் நெறி என்றது ஆசார அநுட்டான உபதேசங்களைக் குறிக்கும். இவை யாவும் ஸ்கந்த குருமரபின் பாற்பட்டன.

4. i) மூர்த்தி தலம் தீர்த்தம் மூன்றாகவும் இறைவன் இருந்து அருளுதலினாலேயே திருச்செந்தூரிடத்து ஏகி என்றார்.

ii) நூலாசிரியராகிய சிற்றம்பல நாடிகள் தன்னைப்படர்க்கையில் வைத்துப் பாடியுள்ளார். சரியையாதி பெருந்தவத்தினைப் புரியின் பாசநீக்கமும் பேரின்பப்பேறுங் கிட்டுவிக்கும் பதிஞானம் உதிக்கும். இதனை விளக்குமுகமாக, 'மாதவத்தீர்' என உடம்பொடு புணர்த்தி ஓதியருளியமை காண்க.

5. உத்தமராவீர்:- பேதபுத்தி சிறிதுமின்றி எங்குஞ் சிவபாவத்தையு டைய பூரணஞானிகளே உத்தம அதிகாரிகளாவர். அவரே அணு பட்ச சிறீகண்டர் முதலாய உருத்திர வர்க்கத்தினர்.

6. ''அறியாமை யறிவகற்றி யறிவி னுள்ளே
அறிவுதனை யருளினா னறியாதே யறிந்து
குறியாதே குறித்தந்தக் கரணங்க ளோடுங்
கூடாதே வாடாதே குழைந்திருப்பை யாயிற்
பிறியாத சிவன்றானே பிரிந்து தோன்றிப்
பிரபஞ்ச பேதமெலாந் தானாய்த் தோன்றி
நெறியாலே யிவையெல்லா மல்ல வாகி
நின்றென்றுந் தோன்றிடுவன் நிராதார னாயே''

— சித்தியார் சுபக்கம் 282

7. இப்பகுதி நூற்சிறப்புப் பாயிரமாக அமைந்துள்ளது. பாயிரத்தின் எட்டு உறுப்புக்களும் இதிற் காணப்படுகின்றன. சிற்றம்பலவன் என்றதனுல் ஆக்கியோன் பெயரும், செந்தூர்ப்பெருமான் அருள் வழி வந்ததென வழியும், இருநிலப்பரப்பில் என்றதனுலே தமிழ் கூறு நல்லுலகம் என்ற எல்லையும், செய்யுளால் என்றதனுல் அக வற்பாவாலமைந்த திருச்செந்தூர்அகவல்என நூற்பெயரும் அருள்பெற வேண்டின் என்றதனுற் பற்றொழிதற்கான சரியை, கிரியை, யோகநூல்களையும் ஞானத்தின் பொதுவையுணர்த்தும் நூல்களையுங் கேட்டபின்பு இந்நூல் கேட்கற்பாற்று என்ற யாப்பும், அங்ஙனம் கேட்ட அளவில் இருவகைப்பற்றும் விட்டவரென அதிகாரியும், நிருமலஞானம் நிகழ்த்தி ஆட்கொண்டது எனவே நுதலிய பொருளும் பயனும் வந்தவாறு காண்க.

## 6. நூற்பயன்

409. கருத்துற இதனைக் கற்போர் கேட்போர்
திருத்தகும் அன்பால் தினந்தொறுந் துதிப்போர்
பெறும்பலன் இதனைப் பேசுதுங் கேண்மின்
உறும்பலன் வேண்டும் உலகத் தோரே
பாவந் தீரும் பார்மிசு தரும
மேவிளம் பிறைபோல் மேன்மேல் வளருந்
துட்டதே வதைகள் தொட்டதூம் வஞ்சர்
இட்ட பில்லி இடர்களுந் தீரும்

வாதம் பித்தம் வலிபடுங் காசஞ்
சீதம் வெதுப்புத் தீரா நோய்கள்
வேதனை யிருந்த வியாதிகள் எல்லாம்
ஆதவற் கண்ட பனிபோல் அகலுஞ்
சாகா வரமுந் தந்திடும் உடம்பிற்
போகாப் பீடை போக்கிரட் சிக்கும்
வறுமை நீங்கும் வாழ்வுண் டாகுஞ்
செறிதரும் அட்டமா சித்தியுங் கொடுக்குஞ்
சரியை கிரியை சார்ந்திடு மியோகந்
தெரிதரு ஞானமுஞ் செறிந்துவாழ் குவரே.

இப்பகுதியின் பொருள் வெளிப்படை.

விளக்கம்:- 1. கருத்துறக் கற்றல் - பாராமுகமின்றி, கருத்தூன்றிப் பொருளுணர்ந்து அழுத்தந்திருத்தமாக, சந்தேக விபரீதமறப் படித்தல். கேட்போர் - படிப்பதைக் கேட்போருங், குருமுகமாக உபதேசக்கிரமத்திற் பாடங்கேட்போரும். தினமுந் துதிப்போர்- ஞானம்பெற விரும்பிப் பக்தியோடு முப்பொழுதும் பாராயணஞ் செய்வோர். உறும் பலன் - ஆத்மீக வாழ்வுக்கான மோட்சமும், உலகவாழ்வுக்கான போகங்களும்.

2. அநாதியான ஆணவமல சேர்க்கையாலேயே உயிர்களுச்குப் பாவம் உண்டாகின்றது. திருச்செந்தூர் அகவல் வீண் பாவங்களை வெருண்டோடச்செய்யும். இந்நூல் தீராப்பிணியைத் தீர்க்கும் மருந்து. பாவத்தை நீக்கி, அறத்தை வளர்த்து, உலகவாழ்வில் நீதி நியாயம் நிலவச்செய்து, தெய்வீக சமுதாயத்தை ஆக்கும்.

3. முருகன் திருப்புகழ் கேட்டுத் தெய்வமென்பதோர் சித்தமுண்டானதும் தீய எண்ணங்களும், அசுரகுணங்களும் தலையெடா. வஞ்ச மனிதரால் வரும் பிசாசு, பில்லிப்பயமும் அகலும். விரதம் முதலியஅநுட்டித்து வாழுந் தெய்வீக வாழ்வினுல் வருந் தூயமனமும், உறுதியான உடலும் நோய் அணுகாது பாதுகாக்கும். ஊழால் வரும் நோயையும் தெய்வந்தந்ததெனத் துன்பமின்றி அனுபவிப்பர். தெய்வசந்நிதியிற் பௌதிகம் முனைந்து நில்லாது. ஆதி தைவிகம், ஆத்தியான்மிகம், ஆதி பௌதிகம் ஆகிய துன்பங்கள் திருச்செந்தூர் அகவலில் ஈடுபட்டோரைத் தாக்கா.

4. சாகாவரமென்றது பூரண ஆயுளே. பூரண ஆயுள்பெற்று இயற்கை மரணமடைதலன்றிப் பூவிலே பிஞ்சிலே உதிர்தலில்லை. ஆத்மீக வாழ்வின் பேறுகச் சமாதி அடைந்தோர் சாகாவரம் பெற்ற தெய்வமாவார். மணிமந்திர ஔடதங்களால் மாருத உடற்பீடை தெய்வதலவாசஞ் செய்(து பாடுகிடப்ப)தாலே தீரும்.

5. சித்திகளை விரும்பார் எனினும் வேண்டும்பொழுது அவை தாமே வெளிப்பட்டு உதவும். சரியை முதலாய சிவபுண்ணியங்கள் கைவரும். ஞானச்செறிவாற் பேரின்பமும் உண்டாகும். மண்ணில் நல்லவண்ணம் வாழ்ந்து இறைவன் திருவடியையும் எய்துவர்.

6. உண்மைப்பலன், உடன்பலன் ஆகிய இருவகைப் பயன்களும் இதிற் கூறப்பெற்றுள்ளன. இறுதி இரண்டு அடிகளும் உண்மைப் பயனைக் கூறுகின்றன. உடன்பலன் கற்றுர்க்குங் கல்லாதாருக்கும் ஒப்ப அழகு தமிழில் இனிது விளங்கக்கூடிய நடையிற் கூறப்பட்டிருக்கின்றது.

திருச்செந்தூர் அகவல் உரை முற்றிற்று.

அம்மா திருச்செந்தூர் அம்மான் அருள்நோக்கிச்
சும்மா இருக்கை சுகம்.

''சும்மாவிருக்கச் சுகம் சுகம்'' — தாயுமானவர்

சுபம்! சுபம்! சுபம்!

சாந்தி சாந்தி சாந்தி

திருச்சிற்றம்பலம்.

## கிடைக்குமிடங்கள்:

- கூட்டுறவுத் தமிழ்நூற்பதிப்பு விற்பனைக்கழகம்
  411/1 காங்கேசன்துறை வீதி,
  யாழ்ப்பாணம்

- செல்வி க. அருளரசி
  'தமிழகம்', புங்குடுதீவு-3,
  இலங்கை.